# ஊர்சுற்றிப் புராணம்

ராகுல் சாங்கிருத்யாயன்

தமிழாக்கம்:

ஏ.ஜி. எத்திராஜுலு



நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,

41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,

அம்பத்தூர், சென்னை- 600 050.

☎: 044 - 26251968, 26258410, 48601884

Language: Tamil

**Oorsutri Puranam**

Author: **Rahul Sangrityayan**

Translation: **A.G. Ethirajulu**

First Edition: February, 1982

Seventh Edition: July, 2018

Eighth Edition: November, 2021



No. of pages: viii + 150 = 158

Publisher:

**New Century Book House Pvt. Ltd.,**

41-B, SIDCO Industrial Estate,

Ambattur, Chennai - 600 050.

Tamilnadu State, India.

email : info@ncbh.in

Online:www.ncbhpublisher.in

ISBN: 978 - 81 - 2340 - 810 - 1

Code No. A 1223

**₹ 140/-**

**Branches**

**Ambattur (H.O.)** 044 - 26359906 **Spenzer Plaza (Chennai)** 044-28490027
**Trichy** 0431-2700885 **Pudukkottai** 04322- 227773 **Thanjavur** 04362-231371
**Tirunelveli** 0462-4210990, 2323990 **Madurai** 0452 2344106, 4374106
**Dindigul** 0451-2432172 **Coimbatore** 0422-2380554 **Erode** 0424-2256667
**Salem** 0427-2450817 **Hosur** 04344-245726 **Krishnagiri** 0434-3234387
**Ooty** 0423 2441743 **Vellore** 0416-2234495 **Villupuram** 04146-227800
**Pondicherry** 0413-2280101 **Nagercoil** 04652-234990

ஊர்சுற்றிப் புராணம்

ஆசிரியர்: **ராகுல் சாங்கிருத்யாயன்**

தமிழாக்கம்: **ஏ.ஜி.எத்திராஜுலு**

முதல் பதிப்பு: பிப்ரவரி, 1982

ஏழாம் பதிப்பு: ஜூலை, 2018

எட்டாம் பதிப்பு: நவம்பர், 2021

*அச்சிட்டோர்:* **பாவை பிரிண்டர்ஸ் (பி) லிட்.,**

16 (142), ஜானி ஜான் கான் சாலை, இராயப்பேட்டை, சென்னை - 14

☎: 044-28482441

# பதிப்புரை

மனிதன் அனுபவ அறிவுடன் விஞ்ஞான அறிவையும் பெறுவானே யானால் அவனால் அரிய சாதனை புரிய முடியும் என்பது அறிஞர்கள் போதிக்கும் நல்லுரைகளாகும்.

ராகுல் சாங்கிருத்யாயன் எழுதிய "ஊர் சுற்றிப் புராணம்" எனும் இந்நூல் அத்தகு நெறியில் சிந்திக்கத் தூண்டும் அரிய படைப்பு.

இந்நூலாசிரியர் ராகுல்ஜி தலைசிறந்த சிந்தனையாளர். அவரே ஓர் ஊர்சுற்றிதான். எனவே ஆசிரியர் தன் ஊர் சுற்றி அனுபவங் களைச் சுவைபட இந்நூலில் கூறியிருக்கிறார்.

மேலும், தலைசிறந்த யாத்திரிகர்களான யுவான் சுவாங், பாகியான் ஆகியோரின் அனுபவங்கள் எவ்வாறு வரலாற்றில் இடம் பெற்றன: ஊர் சுற்றும் அனுபவங்கள் எவ்வாறு சிறந்த பயண இலக்கியங்கள் படைக்க உதவுகின்றன என்பன போன்ற விவரங்கள் இந்நூலில் உள்ளன.

ராகுல் சாங்கிருத்யாயன் படைப்புகளைத் தமிழில் தருவதில் மிகவும் ஆர்வங்கொண்ட திரு. ஏ.ஜி. எத்திராஜுலு இந்நூலை மொழி பெயர்த்துள்ளார்.

1982 பிப்ரவரியில் எமது பதிப்பகத்தால் இந்நூல் முதல் பதிப்பு கண்டது. அடுத்தடுத்து அச்சேறி 2009 டிசம்பரில் ஐந்தாம் பதிப்பு கண்டது. தற்போது 2017 அக்டோபரில் திருத்தப்பட்ட புதிய வடிவமைப்பில் அச்சாக்கம் பெறுகிறது.

தமிழ் வாசகப் பெருமக்கள் ராகுல்ஜியின் இந்நூலை விரும்பி வரவேற்றதால் அதன் தேவை கருதி தற்போது மீள் பதிப்பாக வெளியிடப் படுகிறது.

**பதிப்பகத்தார்**

# முன்னுரை

"ஊர் சுற்றிப் புராணம்" எழுத வேண்டிய தேவையை நான் நீண்ட காலமாக உணர்ந்து கொண்டிருந்தேன். என்னைப் போன்ற மற்ற நண்பர்களும் இதன் தேவையை உணர்ந்து கொண்டிருப்பார்கள் என்று நான் கருதுகிறேன். வாசகர்களின் மனத்தில் ஊர் சுற்றும் எண்ணத்தைத் தோற்றுவிப்பது இந்நூலின் நோக்கமல்ல; அதற்குப் பதிலாக அந்த எண்ணத்தை வலுப்படுத்த, வழிகாட்டுவதுதான் இதன் குறிக்கோளாகும். ஊர் சுற்றிகளுக்குத் தேவையான எல்லா விஷயங்களுமே இந்நூலில் இடம் பெற்றுவிட்டன என்று கூற முடியாவிட்டாலும், எனது ஊர் சுற்றி நண்பர்கள் தமது அறிவாலும், திறமையாலும் உதவி புரிந்தால், அடுத்த பதிப்பில் இதிலுள்ள குறைகளைக் களைந்துவிடலாம்.

இந்த நூலை எழுதுவதற்கு ஊக்குவித்த அனைவருக்கும் எனது இதய பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். திரு மஹேஷ், திருமதி கமலா பரியார் (இப்போது சாங்கிருத்யாயன்) ஆகியோர் தமது பேனாவினால் எனக்குப் பேருதவி செய்திருக்கின்றனர். அவர்களிருவருக்கும் என் சார்பிலும், வாசகர்கள் சார்பிலும் நன்றி தெரிவிக்கிறேன். அவர்களின் உதவி இல்லாதிருந்தால், வருடக் கணக்காக என்னுள் அலை பாய்ந்து கொண்டிருந்த எண்ணங்களுக்கு ஒரு உருவம் ஏற்பட்டிருக்காது.

**ராகுல் சாங்கிருத்யாயன்**

# பொருளடக்கம்

# 1. ஊர் சுற்றும் அவா

தேவமொழி எனக் கூறப்படும் சமஸ்கிருதத்திலிருந்து இந்நூலைத் தொடங்குவதற்காக வாசகர்கள் கோபித்துக் கொள்ளக் கூடாது. நாம் 'ஊர் சுற்றிப் புராணம்' என்னும் பெயரில் ஒரு புதிய சாஸ்திரம் எழுத முனைந்திருக்கும் போது சமஸ்கிருத சாஸ்திரங்களின் வழக்கத்தை அனுசரிக்க வேண்டியதுதான்! தனிநபருக்கும், சமுதாயத்திற்கும் மிகுந்த பயன் உண்டாக்கும் தலைசிறந்த பொருளைத்தான் 'அவா' என்றும் 'சிந்தனை' என்றும் நமது சாஸ்திரங்கள் கூறுகின்றன. வியாசர் தமது சாஸ்திரத்தில் பிரம்மத்தைத் தலைசிறந்த பொருளாகக் கருதி, அதனைச் சிந்தனையின் பொருளாக்கினார். வியாசரின் சீடரான ஜைமினி, மதத்தை முக்கியமாகக் கருதினார். பழங்கால முனிவர்களுடன் கருத்து வேற்றுமை கொள்வது ஒன்றும் பாவச் செயலல்ல.

உலகத்திலுள்ள தலைசிறந்த பொருள் "ஊர் சுற்றுவதுதான்" என்பது அடியேனின் தாழ்மையான கருத்தாகும். ஊர் சுற்றுவதைவிடத் தனி மனிதனுக்கும், சமுதாயத்திற்கும் நன்மை புரிவது வேறொன்று மில்லை. பிரம்மா, சிருஷ்டியைப் படைத்து, காத்து, அழித்து விடும் பொறுப்பைத் தன்மேல் போட்டுக் கொண்டுள்ளார் என்று சொல் கிறார்கள். படைத்தலும், காத்தலும் ஒருபுறம் இருக்கட்டும்! அவற்றின் உண்மையை எடுத்துக்காட்ட பிரத்தியட்ச உதாரணங்களும் பயன்படா; அனுமானத்தினாலும் தெளிவு ஏற்படாது. ஆனால், உலகைக் காத்தல் மட்டும் நிச்சயமாகப் பிரம்மா, விஷ்ணு, சிவன் இவர்களில் யார் தலைமீதும் இல்லை. உலகம் இன்பத்திலும், துன்பத்திலும் யாரிட மிருந்தாவது உதவி பெறுகிறது என்றால், அது ஊர்சுற்றிகளிட மிருந்துதான்! இயற்கையான புராதன மனிதன் மிகவும் ஊர்சுற்றி யாகத்தான் இருந்திருக்கிறான். விவசாயம், தோப்புதுரவு, வீடு வாசல் எதுவுமே இல்லாத அவன், வானத்துப் பறவைகளைப் போல் சுதந்திரமாக நிலத்தில் சுற்றிக் கொண்டிருந்தான். குளிர்காலத்தில் ஓரிடத்தில் இருந்தால், கோடைக் காலத்தில் அங்கிருந்து மிகவும் தொலைவில் வேறோர் இடத்திலிருப்பான்.

இப்போது ஊர்சுற்றிகளின் வேலையைப்பற்றி விவரமாக எடுத்துக்கூற வேண்டியுள்ளது. ஏனெனில் பலர், ஊர் சுற்றிகள் செய்த வேலைகளையெல்லாம், தாங்களே செய்தவை போல் வெளிச்சம் போட்டு உலகத்திற்கும் காட்டியிருக்கிறார்கள். உலகமும் அவர்கள் கூற்றை நம்பி, செக்கிழுக்கும் மாடுகள்தாம் எல்லாம் செய்து முடித்திருக்கின்றன என்று நினைத்துக்கொண்டிருக்கிறது. புது யுக விஞ்ஞானத்தில் 'சார்லஸ் டார்வின்' மிகவும் புகழ் பெற்றவர். அவர் உயிரினங்களின் உற்பத்தியைப் பற்றியும் மனித குலத்தின் வளர்ச்சியைப் பற்றியும் ஆராய்ந்ததோடு, தம் அரிய ஆராய்ச்சியினால் மற்ற விஞ்ஞானங்களையும் வளர்ச்சியுறச் செய்துள்ளார். டார்வின் காட்டிய ஒளியில் எல்லா விஞ்ஞானங்களுமே தம் வளர்ச்சிப் போக்கினை மாற்றிக்கொள்ள நேர்ந்தது. டார்வின் ஒரு ஊர்சுற்றியாக மட்டும் இல்லாதிருந்தால், இப்படிப்பட்ட மகத்தான பணி புரிந்திருக்க முடியுமா?

சில பிரயாணப் புத்தகங்கள் ஊர் சுற்றும் மகிழ்ச்சியை அளிக்கின்றன என்பது உண்மைதான்! எனினும் ஒரு புகைப்படத்தைப் பார்த்து, நீங்கள் இமயமலையின் அடிவாரத்திலுள்ள அடர்ந்த காடுகளையும், பனி மூடிய மலைச்சிகரங்களின் இயற்கை அழகையும், அதன் மனமகிழ் மணத்தையும் எப்படி அனுபவிக்க முடியாதோ, அதைப்போலவே ஊர் சுற்றிக்குக் கிடைக்கக்கூடிய நிறைவான இன்பம், பயண நூல்களைப் படித்து நீங்கள் பெற முடியாது. இப்படிப்பட்ட புத்தகங்களைப் படிக்கும் வாசகர்களுக்கு, முழுக் குருடர்களைவிடக் கொஞ்சம் அதிக ஒளி கிடைக்கிறதென்பது உண்மைதான்! அந்தப் புத்தகங்களால் தூண்டப்பட்டு, அவர்கள் கொஞ்ச நாட்களுக்கு ஊர் சுற்றிகளாகவும் மாறக்கூடும்! ஊர் சுற்றி, உலகத்தின் மிகச் சிறந்த செல்வமாக ஏன் ஆகிறான்? ஏனெனில் இந்தப் புதிய உலகத்தை ஆக்கியவனே அவன்தான்! பழங்கால மனிதர்கள், வசதியாக இருக்கிறதென்று ஏதேனும் ஒரு நதி ஓரத்திலோ, குளக்கரையிலோ தங்கிவிட்டிருந்தால் உலகம் முன்னேறி இருக்குமா? மனிதனின் இந்த ஊர் சுற்றும் மனப்பான்மை, பலமுறை இரத்த ஆறுகளை ஓடச் செய்திருக்கிறது. ஊர் சுற்றிகளினால் கலவரம் நிகழ்ந்து, பலர் கொல்லப்படுவது நாம் விரும்பவில்லை தான்! ஆனால் புராதன காலத்தில் ஊர் சுற்றிகளின் போக்குவரத்து நடக்காமலிருந் திருந்தால் மனித சமுதாயம் மீளாத் தூக்கத்தில் ஆழ்ந்துவிட்டிருக்கும். மனிதர்கள் மிருகங்களைவிட வளர்ச்சியடைந்திருக்க மாட்டார்கள். பழங்கால ஊர் சுற்றிகளில் ஆரியர், சகர், ஹூணர் தங்கள் இரத்தக் கறை படிந்த செயல்களால் மனித சமுதாயத்தை முன்னேறச் செய்த விவரம், வரலாற்றினில் நமக்குத் தெளிவாகத் தென்படுவதில்லை.

ஆனால் மங்கோலிய ஊர்சுற்றிகளின் அற்புதச் செயல்களை நாம் நன்றாக அறிவோம். மேற்கத்திய நாடுகளில் விஞ்ஞான யுகத்தைத் துவக்கியவை வெடி மருந்து, பீரங்கி, கந்தகம், அச்சகம், திசைகாட்டி, மூக்குக்கண்ணாடி ஆகிய பொருட்களாகும். இப்பொருட்களை மேற்கு நாடுகளுக்குச் சென்று அளித்தவர்கள் மங்கோலிய ஊர் சுற்றிகள்தாம்! மேற்கு நாடுகள் முன்னேற வழி செய்த கொலம்பஸும், வாஸ்கோடகாமாவும் ஊர்சுற்றிகள்தாம்! ஒரு காலத்தில் அமெரிக்கா மனித நடமாட்டமில்லாமல் தான் இருந்தது. ஆசியாக் கண்டத்துக் கிணற்றுத் தவளைகளுக்கு ஊர் சுற்றுவது மறந்துவிட்டது. அதனால் அமெரிக்காவில் அவர்களால் தமது ஆதிக்கத்தை நிலைநாட்ட முடியவில்லை. இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு கூட ஆஸ்திரேலியா கேட்பாரற்றுக் கிடந்தது. சீனாவிற்கும், இந்தியாவிற்கும் தங்களின் பழமையான நாகரிகத்தின்மீது ஒரே பெருமை! ஆனால் இந்த இரு நாடுகளில் யாருக்கும் ஆஸ்திரேலியா சென்று தங்கள் கொடியைப் பறக்கவிடவேண்டுமென்ற எண்ணமே தோன்றவில்லை. இன்று நூற்று அறுபது கோடி மக்கள் சுமையினால் சீனாவும், இந்தியாவும் தத்தளிக்கின்றன. ஆனால் நிலப்பரப்பில் பெரிதான ஆஸ்திரேலியாவில் ஒரு கோடி மக்கள்கூட இல்லை. இன்று ஆசியாக்காரர்களுக்கு ஆஸ்திரேலியாவின் கதவு சாத்தப்பட்டுவிட்டது. ஆனால் இரு நூறாண்டுகளுக்கு முன், அது நம் கைக்கெட்டும் பொருளாக இருந்தது. சீனாவும் இந்தியாவும் ஆஸ்திரேலியாவின் செல்வத்தை ஏன் கை நழுவவிட்டன? அவர்கள் ஊர் சுற்றும் மனப்பாங்கை இழந்து விட்டனர்; மறந்துவிட்டனர்.

ஆம், நான் இதை மறத்தல் என்றே கூறுவேன். ஏனென்றால் பாரதமும், சீனமும் ஒரு காலத்தில் புகழ் பெற்ற ஊர்சுற்றிகளைத் தோற்றுவித்திருக்கின்றன. பல இந்திய யாத்ரீகர்கள் தெற்கிலும் கிழக்கிலும், இலங்கை, பர்மா, மலேயா, ஜாவா, தாய்லாந்து, கம்போடியா, போர்னியோ, பிலிப்பைன்ஸ் முதலிய நாடுகளில் தங்கள் செல்வாக்கினைப் பரப்பியுள்ளார்கள். ஒரு காலகட்டத்திலே நியூசிலாந்தும், ஆஸ்திரேலியாவும் கூட இந்தியாவின் பகுதிகளாகும் சூழ்நிலை இருந்தது, இருந்தும் என்ன செய்ய.

'ஏ கிணற்றுத் தவளை மனப்பான்மையே, நீ அடியோடு ஒழிக!'

'கடலின் உப்பு நீருக்கும், இந்து மதத்திற்கும் கடும் பகை' என்று பாரதத்தின் முட்டாள்கள் உபதேசிக்கத் தொடங்கினர். ஓர் இந்து, கடலைத் தொட்டாலும், அவன் உப்புக்கட்டியைப்போல் கரைந்து விடுவான் என்று அவர்கள் கதைத்து வந்தனர். சமுதாய நலனுக்காக ஊர்சுற்றி மனப்பான்மை எவ்வளவு அவசியமென்பதை நீங்கள்

ஓரளவுக்கு அறிந்திருக்கலாம். இந்த மனப்பான்மையை வளர்த்துக் கொண்ட நாடும், இனமும், இந்து மதத்தில் கூறப்பட்ட 'தர்மம், அர்த்தம், காமம், மோட்சம்' (மதம், பொருள், காதல், பிறவாளம்) என்று நான்கு பலன்களையும் பெற்றன. ஊர் சுற்றுதலை மறந்த இனத்துக்கு 'நரக'த்தில் கூட இடமில்லை. கடைசியாக, ஊர் சுற்றும் மனப்பான்மையை இழந்துவிட்டதால்தான் எழுநூறு ஆண்டுகள்வரை அன்னியரிடம் உதை வாங்கிக் கொண்டிருந்தோம். எங்கெங்கிருந்தோ வந்தவர்கள் எல்லாம் நாலு உதை விட்டுக்கொண்டே போனார்கள்.

நான் இங்கே கூறிய இந்த வாதங்கள் லௌகீகமாகவும், சாத்திரங்களுக்கு விரோதமானவையாகவும் சிலருக்குத் தோன்றலாம். அப்படியானால் மதத்திலிருந்தே எடுத்துக்காட்டுகள் தரட்டுமா? உலகத்தில் தோன்றிய மதத்தலைவர்கள் அநேகர் ஊர் சுற்றிகளாகத் தான் இருந்தார்கள். மதத் தலைவர்களில் ஆசார அனுஷ்டானங் களிலும், அறிவுக் கூர்மையிலும், நற்பண்புகளிலும் சிறந்தவராக ஒளிர்ந்த புத்தபிரான் ஊர் சுற்றிகளின் அரசராகத் திகழ்ந்தார். அவர் தம் வாழ்நாளில் பாரதத்தை விட்டு வெளிநாடு செல்லவில்லை. மாரிக்காலத்தின் மூன்று மாதங்களைத் தவிர்த்து, மற்ற காலங்களில் ஒரே இடத்தில் இருப்பது பாவம் என்று அவர் கருதினார். அவர் மட்டும் ஊர் சுற்றியல்ல; அவர் தம் சீடர்களுக்கும் எப்பொழுதும் சுற்றுப்பயணம் செய்துகொண்டிருக்குமாறு பணித்தார். பௌத்த சந்நியாசிகள் தங்கள் தலைவரின் ஆணையை எவ்வளவு தூரம் நிறைவேற்றினார்கள் என்பதைக் கூறவும் வேண்டுமா? அவர்கள் மேற்கில் மக்தூனியா, எகிப்து ஆகிய நாடுகளிலிருந்து, கிழக்கில் ஜப்பான் வரையிலும், வடக்கில் மங்கோலியாவிலிருந்து, தெற்கில் பாலித் தீவுகள் வரையிலும் சுற்றித் திர்க்கவில்லையா? ஒரு பரந்த இந்தியச் செல்வாக்கினை நிர்மாணித்தவர்களும் இவர்களே! புத்தர் மட்டுமே ஊர் சுற்றும் மனப்பான்மையை வளர்த்துவிடவில்லை. அவருக்கு முன்பே ஓரிரு ஊர்சுற்றிகளின் முக்கியத்துவம் நிறைந்திருந்த தினால்தான், புத்தரைப் போன்ற ஒரு மாபெரும் ஊர்சுற்றி தோன்ற முடிந்தது. அந்தக் காலத்தில் ஆண்கள் மட்டுமல்ல; பெண்களும் மதத்தைப் பரப்பும் நோக்குடன் ஊர் சுற்றிக் கொண்டிருந்தனர். அவர்கள் கிணற்றுத்தவளை ஆண்களைத் தோற்கடித்து வீராங்கனை களாக நாடு முழுவதும் பவனி வந்தனர்.

"பெண்களும் ஊர்சுற்றிகளாக இருக்க முடியுமா? அவர்களும் இம்மாபெரும் விரதத்தைக் கைக்கொள்ள இயலுமா?" என்று சில பெண்கள் வினா எழுப்புகின்றனர். அவர்களுக்கு நமது பதில் இது தான்; ஊர் சுற்றி மனப்பான்மை குறுகிய புத்தி படைத்ததன்று ஆகவே,

இதில் பெண்களுக்கும் நிச்சயம் இடம் உண்டு. இதில் ஆண்களுக்குள்ள உரிமையைப்போல் பெண்களுக்கும் உரிமை உண்டு. பெண்கள் தங்கள் பிறவிப் பயனை அடைந்து, சமுதாயத்துக்குப் பணிபுரிய விரும்பினால், இரண்டு கைகளாலும் ஊர்சுற்றி விரதத்தை வரவேற்கத் தயாராக இருக்கவேண்டும். ஊர்சுற்றி மனப்பான்மை பெண்கள் மனத்தில் தோன்றாமல் செய்வதற்காகவே ஆண்கள் அவர்களுக்குப் பல தடை மதில்களை ஏற்படுத்தி இருக்கின்றனர். புத்தர் பிரான் ஆண்களுக்கு மட்டுமல்லாமல், பெண்களுக்கும் இவ்விரத்தைக் கைக்கொள்ளுமாறு உபதேசித்திருக்கிறார்.

பாரதத்தின் தொன்மையான மதங்களில் ஜைன மதமும் ஒன்று. அம்மதத்தை நிறுவிய மகாவீரர் மட்டும் யாராம்? அவர்கூட ஒரு ஊர் சுற்றிதான்! ஊர் சுற்றுவதிலே வரும் சிறு பெரும் தடங்கல் களையும், பட்டம் பதவிகளையும் அவர் துறந்துவிட்டார். வீடு வாசல், பெண்டு பிள்ளைகளை மட்டுமல்ல; துணிமணிகள் அணிவதையும் கூட விட்டுவிட்டார். கையிலே கவளமும், மரத்தடி வாசமும்தான் அவரது தாரக மந்திரமாக ஒலித்துவந்தது. வானத்தையும் திசை களையுமே ஆடையாக அவர் அணிந்ததற்குக் காரணம்; ஊர் சுற்றுதலில் சிறு தொல்லையும் ஏற்பட்டுவிடக்கூடாதே என்பதற்காகத் தான்! ஜைன மதத்திலுள்ள பல்வேறு பிரிவுகள் தங்கள் தங்கள் கண்ணோட்டத்தில் மகாவீரரின் சிறப்பு இயல்புகளைக் கூறுகின்றன; ஆனால் அவர் ஒரு பெரிய ஊர் சுற்றி என்பதிலே மட்டும் எல்லாப் பிரிவுகளும் ஒருமித்த கருத்து உடையனவாயிருக்கின்றன. அவர் தம் வாழ்நாள் முழுதும் சுற்றிக்கொண்டே இருந்தார். வைசாலி நகரில் பிறந்த அவர், ‘பாவா’ என்னுமிடத்தில் இயற்கை எய்தினார். புத்தரையும், மகாவீரரையும் விடத் தான் பெரிய தியாகி, தவசி, நல்லெண்ணம் படைத்தவன் என்று எவனாவது தன்னைச் சொல்லிக் கொண்டால், அவனை நான், ‘தற்பெருமை அடித்துக் கொள்ளும் தண்டோராக்காரன்’ என்றுதான் கூறுவேன். தற்பொழுது குடில், ஆசிரமம் என்று கட்டிக் கொண்டு செக்கு மாடுகள் செக்கோடு கட்டப்பட்டிருப்பதைப் போல், ஓரிடத்திலேயே இருந்துவிடும் சிலர், தங்களை மகாத்மாக்கள் என்று கூறிக்கொள்வதில் குறைவில்லை. ஆனால் ஊர் சுற்றுதலை விட்டுவிட்டு, மாமேதைகளாக முடியும் என்றால் அப்படிப்பட்டவர்களைச் சந்து பொந்துகளிலும் காண முடியும். இப்படிப்பட்ட மேல்மூச்சு மேதாவிகளைக் குறித்து ஜாக்கிரதையாக இருக்கும்படி நான் வாசகர்களை எச்சரிக்க விரும்புகிறேன். அவர்கள் ஏற்கெனவே செக்கு மாடுகளாகிவிட்டனர்; பிறரையும் தங்களைப் போல் ஆக்கிவிடுவர்.

புத்தர், மகாவீரர் போன்ற கடவுளால் கைவிடப்பட்ட மாமேதைகளின் ஊர்சுற்றிக் கதையை அறிந்து, குகைகளிலும், தனிமையான இடங்களிலும் அமர்ந்து தவம் செய்தவர்கள், சகல சித்திகளும் பெற்றுவிட்டனர் என்று யாரும் எண்ணிவிட வேண்டாம். தவ மகிமையினால் எல்லாவற்றையும் பெற்றுவிட முடியுமென்றால், சாட்சாத் பிரமத்தின் மறு உருவமான ஆதிசங்கரர் பாரதத்தின் நாலு பக்கங்களிலும் ஏன் சுற்றிக்கொண்டிருந்தார்?

பௌத்த மதத்தை அடிப்படையாகக் கொண்ட ஊர்சுற்றி மனப்பான்மை மறைந்ததிலிருந்து, நமது நாட்டில் கிணற்றுத் தவளை மனப்பான்மை வளரத் தொடங்கியது. எழுநூறு ஆண்டுகளில் நாட்டில் அடிமைத்தனம் நிலை பெற ஆரம்பித்தது ஏதோ தற்செயலாக நிகழ்ந்த சம்பவமல்ல! சமூகத்தை வழிநடத்திச் செல்லும் தலைவர்கள், தங்களாலியன்றவரை மக்களைக் கிணற்றுத் தவளைகளாக்க முயற்சித்தனர். அப்படி இருந்தும் மூட நம்பிக்கைகளைத் தகர்த்தெறியும் சிறந்த மனிதர்கள் அவ்வப்போது தோன்றத்தான் செய்தார்கள். நமது வரலாற்றில் ‘குருநானக்’ மிகவும் பழையவர் அல்லர். அவரும் தம் வாழ்நாளில் பெரிய ஊர் சுற்றியாகத் திகழ்ந்தார். அவர் இந்தியாவோடு பாரசீகத்திலும், அரபு நாடுகளிலும் சுற்றுப் பயணம் செய்தார். ஊர் சுற்றும் விரதம் சாதாரணமானதல்ல; யோகத்தைப் போலவே விரும்பியவற்றை நல்கும் தன்மையுடையது. மனிதனை அது முதல்ரக வீரனாக்கி விடுகிறது. ஊர் சுற்றி குருநானக் மக்கா சென்று, அங்கு முஸ்லிம்களுக்குப் புனிதமான ‘காபா’ என்ற இடத்திற்கு எதிராகக் கால்களை நீட்டிப் படுத்துவிட்டார். இஸ்லாம் மதத் தலைவர்களான முல்லாக்களுக்கு இந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருக்கும் சகிப்புத் தன்மை இருந்துவிட்டால், அவர்கள் மனிதர்களாகி விடமாட்டார்களா? அவர்கள் நானக்கை எதிர்த்தனர். அவரது கால்களை வேறு பக்கமாகப் பிடித்து இழுத்தனர். ஊர்சுற்றி நானக்கின் கால்கள் எந்தப் பக்கம் திரும்பினவோ, அந்தப் பக்கமே ‘காபா’வும் திரும்பியதை அவர்கள் வியப்புடன் கண்டனர். இதுவல்லவோ அற்புதம். இன்று தங்களைச் சர்வசக்தி படைத்தவர்கள் என்று கருதிக்கொண்டு, தனிமையான ஓர் இடத்தில் அடைபட்டுக் கிடக்கும் எந்த ‘மகாத்மா’வுக்காவது நானக்குக்குள்ள அஞ்சாமையும், அற்புதங்கள் செய்து காட்டும் திறமையும் இருக்கின்றனவா?

பழைய நூற்றாண்டு வரலாற்றினை விட்டு விடுங்கள். சுவாமி தயானந்தர் மறைந்து இன்னும் ஒரு நூற்றாண்டு கூட ஆகவில்லை. அவரைச் சுவாமி தயானந்தராக மாற்றியது எது? இதே ஊர்சுற்றும் மனப்பான்மையேதான்! அவர் அநேகமாகப் பாரத நாடு முழுவதும்

சுற்றிவிட்டார். நூல்களை இயற்றிக் கொண்டும், சாத்திரங்களைப் பற்றி விவாதங்கள் புரிந்து கொண்டும் அவர் சுற்றுப்பயணம் செய்து கொண்டேயிருந்தார். சாத்திரங்களைக் கரைத்துக் குடித்து, காசியிலிருந்த பெரிய பெரிய பண்டிதர்கள் மகாகனம் பொருந்திய கிணற்றுத் தவளைகள் ஆவதிலேயே, தங்கள் பிறவிப் பயனை அடைந்துகொண்டிருந்தனர். ஆகவே தயானந்தரைப் பரந்த மனப் பான்மையுள்ளவராகவும் தர்க்கச் செம்மலாகவும் மாற்றிய சக்தியை நாம் சாத்திரங்களை விடுத்து, பிறிதொரு பொருளில்தான் தேடிப் பெற வேண்டும். அந்தப் பொருள் வேறெதுவுமல்ல; அவருடைய சதா ஊர் சுற்றல்தான்! கடல் வழியில் அயல் நாடுகளுக்குச் செல்வதால் மதம் அழிந்துவிடும் என்று கூறப்பட்ட வாதங்களை எல்லாம் அவர் தன் தர்க்கங்களால் பஞ்சாய்ப் பறக்கச் செய்தார். மனிதன் என்பவன் ஒரே இடத்தில் ஆடாமல் அசையாமல் நிற்கும் மரமல்ல; உணர்ச்சிப் பிழம்பான ஓர் அசையும் பிராணி என்பதை அவர் எடுத்துக் காட்டினார். நடந்துகொண்டே இருப்பது மனிதனின் கடமையாகும். இந்தக் கடமையை மறந்தவன், தன்னை மனிதன் என்று சொல்லிக் கொள்ளவும் தகுதியற்றவன்.

இருபதாம் நூற்றாண்டில் தோன்றிய இந்திய ஊர் சுற்றிகளைப் பற்றி விளக்க வேண்டிய அவசியமே இல்லை. மேற்கூறியவற்றைப் படித்த பிறகு, உலகத்தில் ஏதாவது மிகப் பழமையான மதமென்று ஒன்று இருக்கிறதென்றால், அது ஊர் சுற்றி மதம்தான் என்று உங்களுக்கு விளங்கி இருக்கும் அது குறுகிய புத்தி படைத்த சம்பிரதாய மல்ல; அது வானத்தைப் போல் பரந்தது; கடலைப்போல் ஆழமானது. மிக அதிகமான பேரும் புகழும் பெற்ற மதங்களும் ஊர்சுற்றி மனப்பான்மையினால்தான் அவ்வாறு புகழடைந்தன. ஏசுநாதரும் ஒரு ஊர்சுற்றிதான்! அவருடைய சீடர்களும் குருவைப்போலவே இருந்ததினால்தான் ஏசுவின் உபதேசங்களை உலகத்தில் மூலைமுடுக்கு களிலெல்லாம் பரப்ப முடிந்தது. யூத மதகுருமார்கள் ஊர் சுற்றுதலை மறந்துவிட்டனர். அதன் பலனை அவர்கள் பல நூற்றாண்டுகள் அனுபவித்தும் விட்டனர். ஊர் சுற்றும் கடமையை நிறைவேற்றாதவர் களுக்குக் கிடைக்கவேண்டிய தண்டனை பாவம், யூதர்களுக்கும் கிடைத்தது, கடைசியில் அவர்கள் உலகம் முழுவதும் ஊர்சுற்றி களாய்த் திரிய வேண்டி நேர்ந்தது. உலகம் முழுவதும் அவர்கள், இந்தியா பூராவுமுள்ள மார்வாடி சேட்டுக்களைப்போல் எடுத்தெறியப் பட்டனர். இந்தக் கடமையை மதியாதவர்கள் இரத்தக் கண்ணீர் வடிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இப்பொழுதுதான் பாவம், யூதர்கள் பல இன்னல்களை அனுபவித்து, பல வாழ்க்கைப் பாடங் களைக் கற்றுத் தமக்கென ஓர் இஸ்ரேல் நாட்டைப் பெற்றிருக்கின்றனர்.

இந்த நாட்டைப் பெற்றபின் அவர்கள் மீண்டும் தம் தவற்றை இழைக்க மாட்டார்கள் என்று எதிர்பார்க்கலாம். இந்த ஊர்சுற்றும் மனப் பான்மைதான் அவர்களை வாணிபத்திலும், தொழில்துறையிலும் நிபுணர்களாக்கியது. விஞ்ஞானம், தத்துவம், இலக்கியம், இசை ஆகியவற்றில் கூட அவர்கள் புகழ்பெற உதவியது. வாணிபத் துறை யிலுள்ள ஊர் சுற்றும் யூதர்கள், போர்க் கலையினில் சிறந்தவர்களல்லர் என்று சிலர் கருதுகின்றனர். ஆனால் அவர்கள் தம் போர்த் திறமை யினால் ஐந்து அரேபியப் பேரரசுகளை மண்ணோடு மண்ணாக்கினர். அரேபியர் யூதரிடம் மன்னிப்புப் பிச்சை வேண்டுமென மன்றாடச் செய்தனர்.

இவ்வளவு எடுத்துக்கூறிய பிறகு, ஊர் சுற்றுதலைவிடச் சிறந்த மதம் வேறெதுவுமே இருக்க முடியாது என்பதில் ஐயமிருக்க முடியாது. ஊர் சுற்றுதலின் பெருமையை நோக்கும்போது மதமும் சிறிய விஷயமென்றுதான் கூற வேண்டும். ஒருவன் ஊர் சுற்றியாக இருப்பது, அவனது அதிர்ஷ்டமென்றே சொல்லவேண்டும். இம்மதம் தன்னைப் பின்பற்றுபவர்களுக்குச் செத்த பிறகு சிவலோகத்தையும், கற்பனைச் சொர்க்கத்தையும் காட்டுவதில்லை. ஊர்சுற்றுதல் என்பது ஒரு நல்ல இலாபகரமான ரொக்க வியாபாரமாகும். இந்தக் கையால் கொடுத்து, அந்தக் கையால் வாங்க வேண்டியதுதான்!

நிச்சிந்தையாக இருப்பவன்தான் ஊர் சுற்றவும் முடியும். இக்காரியத்திற்கு வேலையற்றிருப்பது மிகவும் அவசியமாகும். அதோடு கவலையற்றிருப்பதற்கு ஊர் சுற்றுவதும் அவசியமாகும். இரண்டும் ஒன்றோடொன்று இணைந்திருப்பது இகழத்தக்கதல்ல; புகழத்தக்கது தான்! ஊர்சுற்றும்போது கிடைக்கும் நிறைவான மகிழ்ச்சி வேறெப் பொழுது கிடைக்கப் போகிறது? பார்க்கப் போனால் கவலையற்றி ருப்பது மகிழ்ச்சியின் மறு உருவம்தானே! ஊர் சுற்றும் போது துன்பங் களுக்கும் குறைவில்லை. ஆனால் அவற்றை உணவில் காரம்போலவே கருத வேண்டும் மிளகாயில் காரம் இராவிட்டால் யாராவது அந்த மிளகாயைத் தொடுவார்களா? கடுமையான பின்னணியில் வெள்ளை நிறத்தில் தீட்டப்பட்ட ஓவியம் நன்கு தெளிவாகத் தென்படுவதைப் போல, ஊர்சுற்றும் போது இடையிடையே ஏற்படும் கஷ்டங்கள், நமக்குக் கிடைக்கும் மகிழ்ச்சியின் அளவை அதிகரிக்கவே செய்கின்றன.

ஒருவனுக்கு ஊர் சுற்றுதலைவிட ரொக்க லாபம் தரக்கூடிய மதம் வேறெதுவுமில்லை. சமுதாயத்தின் எதிர்காலமே ஊர் சுற்றிகளின் தரத்தைப் பொறுத்திருக்கிறது. ஆகவே ஒவ்வொரு இளைஞனும், யுவதியும் ஊர் சுற்றும் விரதம் பூண வேண்டும் என்று கூறுவேன். இந்த விரதத்திற்கு எதிராகச் சொல்லப்படும் வாதங்கள் எல்லாம் பொய்யான வையும், கவைக்குதவாதவையும் தான்! ஊர் சுற்றுவதைத் தாய்

தந்தையார் தடுப்பார்களேயானால், அவர்களைப் பிரகலாதனின் தாய் தந்தையர்களின் மறு பதிப்பாகத் தான் கருதவேண்டும். நண்பர்கள் தடுத்தால், அவர்களைப் பகல் குருடர்கள் என்றுதான் கூறவேண்டும். யாராவது மதத் தலைவர்கள் ஊர் சுற்றுதலை நிறுத்தச் செய்வதற்குத் தகிடுதத்தமான வாதங்களைச் செய்வார்களெனில், இப்படிப்பட்ட ஏமாற்றுக்காரர்கள்தாம், உலகத்தை சரியான, இயற்கையான பாதையில் போகவிடவில்லை என்று நினைக்க வேண்டும். எந்த அரசாங்கமாவது சட்டத் தடைகள் விதிக்குமானால், பல தடவை களின் அனுபவத்தை ஆதாரமாகக்கொண்டு நாம் நிச்சயமாகக் கூறமுடியும்: ஆற்று வேகத்தைப்போல் நுரை கக்கி ஓடிவரும் ஊர்சுற்றி வேகத்தையும் தடுத்து நிறுத்த எவராலும் முடியாது. கடும் எல்லைக் காவல் நிலையங்கள் உள்ள இரு நாட்டு எல்லைகளை ஊர்சுற்றிகள், படைவீரர்களின் கண்களில் மண்ணைத் தூவித் தாண்டிச் சென்றுள்ளனர். நானே இப்படிப் பல தடவைகள் செய்திருக்கிறேன். (முதல் திபேத்தியப் பயணத்தின் போது ஆங்கிலேய, நேப்பாள, திபேத்தியப் படைவீரர்களை ஏமாற்றியே நான் செல்ல வேண்டி இருக்கிறது.)

அஞ்சாமை உள்ளவன்தான் ஊர்சுற்றி விரதம் கொள்ள முடியும். இப்படிப்பட்ட விரதம் பூண்ட வாலிபர்களுக்கும், யுவதிகளுக்கும் நான் சுருக்கமாகக் கூறுவது இதுதான். நீங்கள் யார் பேச்சையும் கேட்காதீர்கள்! தாயின் கலங்கிய கண்களிலிருந்து கொட்டும் கண்ணீரையோ, தந்தையின் பயமுறுத்தலையோ, தெரியாத்தனமாகத் திருமணம் செய்த கொண்ட மனைவியின் அழுகுரலையோ பொருட் படுத்த வேண்டாம். இளம்பெண்ணாக இருந்தால் அழுமூஞ்சிக் கணவனைக் கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டாம். ஆதி சங்கரரும் துறவு வழிகளில் செல்லும் ஞானிக்கு எந்தவிதமான நிபந்தனைகளோ, தடைகளோ கிடையாது என்று சொல்லி அருளி இருக்கிறார். உலகத்தை நன்றாகச் சுற்றிப் பார் தம்பி! இந்த வாழ்க்கை மீண்டும் உனக்குக் கிடைக்கப் போவதில்லை. “ஒருவேளை வாழ்வு எஞ்சியிருந் தாலும், இளமை எங்கிருக்கப் போகிறது?” என்று என் குருநாதரின் பொன்மொழியை நமக்கு வழிகாட்டியாகக் கொள்ள வேண்டும்.

உலகில் மனிதப் பிறவி ஒருமுறைதான் எடுக்க முடியும். அதேபோல் இளமையும் ஒரே தடவைதான் வரும். அஞ்சாமை நிறைந்த இளைஞர்களும், யுவதிகளும் இந்தக் கிடைத்தற்கரிய வாய்பைக் கை நழுவ விடக்கூடாது. எதிர்கால ஊர்சுற்றிகளே, புறப்படத் தயாராகுங்கள்! உங்களை வரவேற்க உலகம் இரண்டு கைகளையும் விரித்து நிற்கிறது.

## 2. தடைகளைத் தகர்த்தெறி!

உலக முழுவதிலும் முனிவர்களும் துறவிகளும் இல்லறம் தொல்லைகள் உடையதென்றும், ஆகவே அதைத் தகர்த்தெறிந்து விட்டு வெளியே வரவேண்டுமென்றும், உபதேசித்திருக்கிறார்கள். இதேபோல் ஊர்சுற்றிகூட இல்லறத்தைத் தகர்த்தெறிந்துவிட்டு, வெளியே வரவேண்டுமென்று நான் கூறும்போது, ஊர்சுற்றி எப்போதுமே தன்னலத்தையும், பிறரை ஏமாற்றுவதையுமே இலட்சிய மாகக் கொண்டிருக்க வேண்டுமென்று பொருள் கொள்ளக்கூடாது. இந்த "ஊர் சுற்றிப்புராண"த்தில் சொல்லப்படும் விஷயங்கள் எல்லாம், ஊர் சுற்றிகளுக்காகத்தான். முதல் வகுப்பு அல்லது இரண்டாம் வகுப்பு ஊர்சுற்றிகளாகாவிட்டால், அந்தப் பாதையிலேயே அடி எடுத்து வைக்கக்கூடாதென்பது இதனுடைய பொருளல்ல! இந்துக் களின் 'புனித' மத நூலான 'பகவத்கிதை' புதிய மொந்தையில் பழைய கள்ளைத் தந்து, வேதாந்தம் உயர்ந்த மத அனுஷ்டானம் என்ற பெயர்களில், மக்களைத் தவறான வழிகளிலேயே அழைத்துச் சென்றாலும், ஆங்காங்கே ஓரிரு உண்மைகளையும் சொல்லத்தான் செய்கிறது. வளவளவென்று பேசக்கூடியவன் ஓரிரு உண்மைகளையும் கூறத்தான் செய்கிறான் என்பதைப் போல், "ஆயிரம் மனிதர்களில் ஒரு சிறந்த துறவி தோன்றுகிறான்" என்று "கிதை" ஒரு உண்மையை வெளியிடுகிறது.

ஆகவே ஒரு முதல் வகுப்பு ஊர்சுற்றியைத் தோற்றுவிக்க, ஆயிரம் இரண்டாயிரம் ரக ஊர்சுற்றிகள் தேவைப்படுகிறார்கள். ஒரு இரண்டாம் வகுப்பு ஊர்சுற்றி தோன்றுவதற்கு ஆயிரம் மூன்றாம் ரக ஊர்சுற்றிகள் வேண்டும். இதுபோல் இலட்சக்கணக்கானவர்கள் ஊர்சுற்றிப் பாதையிலே செல்லத் தொடங்கினால், அவர்களிலிருந்து ஒரு சிலர் சிறந்த ஊர்சுற்றிகளாக ஆகக் கூடும்.

தடைகளைத் தகர்த்தெறிந்து வெளிவர வேண்டியது ஊர்சுற்றிக்கு மிகவும் அவசியமாகும். உலகம் புரிந்த எந்த வாலிபனுக்காவது,

ஊர்சுற்ற வேண்டுமென்ற ஆசை தோன்றாமலிருக்குமா? தம் நரம்புகளில் சூடான ரத்தம் ஓடும் எவரும், தம் வீட்டு மதிற்சுவர்களைத் தகர்த்தெறிந்து, வெளியில் போக வேண்டுமென்று விரும்பாமல் இருக்கமாட்டார்களென்பது அடியேனின் தாழ்மையான கருத்தாகும். இவர்களுடைய முன்னேற்றப் பாதையிலே தடைக்கற்கள் ஏராளம்! வெளி உலகத்தின் தடைகளை விட மனிதனின் உள்ளத்திலேதான் அதிகத் தடைகள் இருக்கின்றன. வாலிபர்கள் தம் கிராமங்களையும், பேட்டைகளையும் நினைத்து அழவாரம்பித்து விடுகின்றனர். அவர்கள் தமக்கு அறிமுகமான வீடுகள், கிராமங்கள், நகரங்கள், சாலைகள் ஆறுகள் ஏரிகள் ஆகியவை தம் பார்வையிலிருந்து மறைந்து போனதுமே வேதனையடைந்துவிடுகின்றனர். ஊர் சுற்றிக்குத் தன் பிறந்த மண்ணின்மேல் பாசம் இருக்கக்கூடாது என்பது இதன் பொருளல்ல! பிறந்த பூமி சொர்க்கத்தை விடச் சிறந்ததென்பதும் உண்மைதான்! ஆனால் பிறந்த மண்ணுக்குத் தொலைவில் இருக்கும் போதுதான், ஒருவன் அதற்குரிய அன்பும் மரியாதையும் செலுத்த இயலும். அப்பொழுது தான் பிறந்த பூமியின் அழகுச் சித்திரம் அவனுடைய மனத்திரையில் அழுத்தமாகப் பதியும். அவன் உள்ளம் பலவித இனிய நினைவுகளுடன் இரண்டறக் கலந்து சங்கமிக்கும். தடைகள் போன்ற அச்சமேதும் இல்லாவிட்டால், ஊர்சுற்றி ஐந்து அல்லது பத்து ஆண்டுகளுக்குப் பின் தன் பிறந்த ஊரைப் பார்த்து வரலாம். தம் பழைய நண்பர்களைச் சந்தித்துப் பேசுவதிலும் தவறொன்றும் இல்லை. ஆனால் பற்று என்பது பிறந்த மண்ணோடு முடிச்சுப் போட்டுப் பிணைத்து வைப்பதல்ல. ஊர் சுற்றும் வாழ்க்கையில் ஒருவன் எவ்வளவு தூரம் போகிறானோ, அவ்வளவுக் கதிகமாக அவனுக்கு நண்பர்கள் அதிகமாகிவிடுகிறார்கள். எல்லா இடங்களிலும் அன்பும், காதலும் அவனைப் பிணைத்துப் போட முயற்சிக்கின்றன. இந்த வலையில் அவன் விழ விரும்பினாலும் எல்லா ஆசைகளையும் நிறைவேற்ற அவனால் இயலுமா? எந்த மண்ணிலே, கிராமத்திலே, நகரிலே பிறந்தோமோ அதற்கு நமது பல கோடி வணக்கங்கள்! அதன் இனிய நினைவு நமக்கு விலை மதிப்பற்ற செல்வம். ஆனால் அதே மண் நம் கால்களைக் கெட்டியாகப் பிடித்து, நம்மை அசையும் பொருளிலிருந்து, அசையாப் பொருளாக மாற்ற ஆசைப் பட்டால் தவறான விஷயமாகும்! மனிதனிலிருந்து மிருகமாவதல்ல, ஒரேயடியாக மரமாகிவிடுவது, மனிதனுக்குப் பெருமையளிப்பதல்ல! ஒவ்வொருவனுக்கும் தன் பிறந்த மண்ணுக்கான கடமை, தம் உள்ளத்திலே அதைப் பற்றிய இனிய நினைவும், நன்றியுணர்ச்சியும் பெருக்கிக்கொள்வதில் முழுமையடைகிறது.

## தாய்

ஊர் சுற்றுவது எந்த வயதில் துளிர்க்கிறது, எந்த வயதில் முழுமை யடைகிறது, எந்தச் சமயத்தில் பெரும் பயணத்தைத் துவங்க வேண்டும் என்பவை எல்லாம் அடுத்த அத்தியாயங்களில் சொல்லப்படும். ஆனால் தடைகளைத் தகர்த்தெறிவதைப்பற்றிய இந்த அத்தியாயத் திலேயே வருங்கால ஊர் சுற்றிகள் இளம் நெஞ்சையும், சிந்தனை யையும் விலங்கிடுவதில் யார் அதிகப் பொறுப்பாளிகள் என்பதைக் கூறிவிட வேண்டும். பகைவனோ அல்லது பாசமற்றவனோ மனிதனை விலங்குகளினால் பிணைத்து வைத்திருக்க இயலாது. எல்லாவற்றையும் விட அன்பே மனிதனைக் கட்டிப் பிணைத்திருக்க வல்லது. அந்த அன்பும் கள்ளம் கபடமற்றதாக இருந்துவிட்டால், அதன் சக்தியே அதிகரித்துவிடுகிறது. ஊர்சுற்றி தன் தாயின் பாசத்தையும், கண்ணீரையும் பொருட்படுத்தினால், அவனால் வீட்டை விட்டு வெளியேறவே முடியாது என்பது ஊர்சுற்றிகளின் அனுபவமாகும். 15-20 வயதுடைய வாலிபர்களிடம் பதிலே சொல்லமுடியாததை போல் தோன்றும் கீழ்க்காணும் கேள்விகள் சாதாரணமாகக் கேட்கப் படுகின்றன: "உன் நெஞ்சு என்ன கல் நெஞ்சா? தாயின் அன்பு உள்ளத்தைப் பார்க்க மாட்டாயா? அவள் தன் கனவுகளை எல்லாம் உன்னைச் சுற்றியே பின்னி வைத்திருக்கிறாள். உன்னைப் பத்து மாதம் சுமந்த அவள், உன்னைத் தாலாட்டி, சீராட்டி வளர்த்த அவள் நீ வீட்டைவிட்டுப் போனதுமே, அழுது புரண்டு செத்துவிடுவாளே! அவள் கண்ணின் ஒளியே நீதான்!" இக் கேள்விகளும் உபதேசங்களும் ஊர்சுற்றியின் திட சங்கற்பத்தையும் உற்சாகத்தையும் மண்ணோடு மண்ணாக்குவது மட்டுமல்ல; அன்னையின் பரிதாப நிலையின் வர்ணனை கேட்டு அவன் மனமும் பலவீனமடைந்து விடுகிறது, தாயின் பாசம் நல்ல விஷயந்தான்; நல்லது மட்டுமல்ல; அதை விடவும் இனிமையான, அழகான, புனித அன்பு வேறெதுவுமே இருக்க முடியாது. தாயின் நன்றிக் கடனைத் தீர்க்கவே இயலாது. ஆனால் அந்த நன்றிக் கடனைத் தீர்க்கும் வழி வாலிப மகன் தன் தாயின் மடியிலேயே அமர்ந்து விடுவதல்ல. மீண்டும் அன்னையின் வயிற்றுக்குள் புகுந்து ஐந்து மாதக் கர்ப்பமாகிவிடுவதல்ல, தாயின் புகழை ஒளி பெறச் செய்வதே தாய்க்குச் செய்யும் நன்றிக்கடனாகும். தன் நற்காரியங்களாலும், நற்புகழாலும் தாயின் பெயரைப் பல்லாண்டு வாழச் செய்பவனே உண்மையான மகனாவான். ஊர் சுற்றியினால் இதையெல்லாம் செய்ய இயலும். பல அன்னையர் தம் ஊர்சுற்றி மகன்களால் அமரர்களாகி விட்டனர். ஊர்சுற்றிகளின் அரசரான புத்தர் "மாயாதேவியின் மகன்" என்ற பெயருடன் தன் தாய் மாயாவைச் சிரஞ்சீவியாக்கிவிட்டார். சுவர்ணாட்சியின் மகனான

சமஸ்கிருதப் பெரும் கவிஞர் அஸ்வகோஷ், கிழக்குப் பாரதத்திலிருந்து காந்தாரம் (ஆப்கானிஸ்தான்) வரை சுற்றித் திரிந்து, தன் அமர காவியங்களாலும், ஞானத்தாலும் மக்கள் உள்ளங்களை ஒளி பெறச் செய்தும், மகிழ்ச்சியுறச் செய்தும், அயோத்தியைச் சேர்ந்த தன் தாய் சுவர்ணாட்சியின் பெயரை நிலைபெறச் செய்துவிட்டார். தாய்மார்கள் தமது சொற்ப சுயநலத்தினால் தமது ஊர்சுற்றி மகன்களைப் புரிந்து கொள்வதில்லை. அவர்கள் தமது வயது வந்த மகன்களும், தாம் வாழ்ந்திருக்கும் வரை, தம் அருகிலேயே வாழ்நாள் கைதிகளாக விழுந்து கிடக்க வேண்டுமென்று விரும்புகிறார்கள். படிப்பில்லாத சாதாரண தாய்மார்கள் மட்டுமல்லாமல் படித்த தாய்மார்கள் கூட இந்த விஷயத்தில் முட்டாள்தனமாக ஊர்சுற்றி வேள்வியில் தடை களைத் தோற்றுவிக்கிறார்கள். ஒன்றுமே உணர்ந்து கொள்ள இயலாத தாய்மார்களின் புத்திரர்களுக்கு நான் கூறுவது இதுதான். கண்களை மூடிக்கொண்டு யாருக்கும் தெரியாமல் வீட்டை விட்டுப் புறப்பட்டு விடுங்கள்! முதலில் பட்ட காயம் வலி கொடுக்கத்தான் செய்யும். தாய்மார்கள் நிச்சயமாக வேதனையடைவார்கள். ஆனால் வாழ்நாள் பூராவும் அவர்கள் அழுதுகொண்டிருக்கப் போவதில்லை. சில நாட்கள் அழுது புலம்பிய பின் அவர்கள் கண்ணீர் உலர்ந்து போய் விடும். கண்களில் படர்ந்த செம்மை மறைந்து போய்விடும். தாய்க்கு அதிகம் பேர் குழந்தைகள் இருப்பினும், வேதனை பொறுத்துக் கொள்ளத் தக்கதாகிவிடும். உண்மையில் சகோதர சகோதரிகளுடன் பிறந்த ஊர்சுற்றி, சற்றும் சிந்திக்கத் தேவையே இல்லை. குறுகிய அளவிலேயே சிந்திக்கக் கூடிய தாய்க்கு நம்மால் எப்படிச் சமாதானம் சொல்ல முடியும்?

கல்வியறிவுள்ள அன்னையரும் கலவரமடைவதை நாம் காண்கிறோம். ஒரு தாயின் பிள்ளை எஸ்.எஸ்.எல்.ஸி. தேர்வு எழுதிவிட்டு வீட்டை விட்டு ஓடிவிட்டான். இரண்டு மூன்றாண்டு களாகியும் அவனைப் பற்றிய தகவலே இல்லை. “நாங்கள் எத்தனை பாசத்துடன் அவர்களை வளர்க்கிறோம்! ஆனாலும் இந்தக் கல் மனம் படைத்த பிள்ளைகள் வேதனை தந்துவிட்டு ஓடிப்போய் விடுகிறார்கள்!” என்று கூறி ஒரு தாய் என் அனுதாபத்தைப் பெற முயன்றாள். நானோ ஊர்சுற்றியின் தாயானதற்காக அவளை வாழ்த்தினேன். ஊர்சுற்றியின் தாயே உண்மைத் தாயாவார்! இப்பொழுது உங்கள் உதவி இல்லாததால், அவன் எங்கோ தன்னிறைவு பெற்ற ஆண் மகனைப் போல் சுற்றித் திரிந்து கொண்டிருப்பான். உங்களுக்கு இன்னும் மூன்று குழந்தைகள் இருக்கிறார்கள். கணவன் மனைவியான நீங்கள் இருவருக்குப் பதிலாக மூன்று பேரை நமது நாட்டிற்குத் தந்திருக்கிறீர்கள். இந்த ஒரு தலைமுறையிலேயே ஒன்றரை

மடங்கு மக்கள் தொகை வளர்ச்சி! கந்து வட்டியைப் போல இப்படியே பல தலைமுறைகளுக்குப் பின், இந்தியாவில் காலூன்றவாவது இடமிருக்குமா?" என்னுடைய இந்த வாதங்களைக் கேட்டு அந்த அன்னை தன் மனக் குமுறலை வெளியிடாவிட்டாலும், அவளுக்கு என் பேச்சு பிடிக்கவில்லை. கல்வியறிவில்லாத தாய்க்கு "ஊர்சுற்றிப் புராண"த்தைப் பற்றி என்ன தெரியப்போகிறது? ஆனால் படித்த தாய்மார்கள் இதைப் படித்த பின் என்னைத் திட்டுவார்கள். எனக்குச் சாபம் தருவார்கள். என்னை நரகத்துக்குக்கூட அனுப்புவார்கள் என்பதை நான் அறிவேன். நான் அவர்களுடைய எல்லா வசை மொழிகளையும், சாபங்களையும் தலையில் சுமக்கத் தயாராயிருக் கிறேன். இந்தப் "புராண"த்தைப் படித்து இந்த நூற்றாண்டின் இறுதிக்குள் குறைந்தது ஒரு கோடி ஊர் சுற்றிகளாவது தமது தாய்மார்களை விட்டு ஓடிவிடவேண்டுமென்பது எனது கோரிக்கை யாகும். இதற்காக எப்படிப்பட்ட பாவமானாலும், அதை ஏசுநாதரைப் போல் சிலுவையைத் தலையில் சுமந்து அதில் அறைபடவும் நான் தயாராயிருக்கிறேன்.

படிப்பறிவுடன் ஒரு அன்னை புத்திசாலியாகவும் இருந்தால், தன் மகனுக்குத் தரையில் தவழ்வதுடன் மெல்ல நடக்கக் கற்றுக் கொடுத்துவிட்டு, தன் கடமையை நிறைவேற்றிவிட்டதாகத் திருப்திப் பட்டுக் கொள்ளலாம். பறவைகள் தம் குஞ்சுகள் முட்டையிலிருந்து வெளிவந்து இறக்கைகள் முளைக்கும் வரையில் மட்டுமே அவற்றின் பொறுப்பை வகிக்கின்றன. அதன் பிறகு பறவைக் குஞ்சுகள் இந்தப் பரந்த உலகில் சுதந்திரமாகப் பறக்கத் தொடங்கிவிடுகின்றன. பதினைந்து - பதினாறு வயதுப் பையன்கள் எப்படிச் சுதந்திரமாக வாழ முடியும் என்று சில அப்பாவித் தாய்மார்கள் நினைக்கிறார்கள். பறவைக் குஞ்சுகளைவிட மனிதக் குழந்தையிடம் மிக அதிகமான வாழும் வழிகள் இருக்கின்றன என்பதை அவர்கள் மறந்து விடுகின்றனர். குளிர் காலத்தில் சைபீரியாவிலிருந்து நமது நாட்டிற்கு வரும் "லால்ஸர்" போன்ற பல பறவைகள் ஏப்ரல் மாதத்தில் இமயமலையை நோக்கிப் பறந்து போவதைக் கவனிக்கலாம். கோடையில் திபேத்திலுள்ள ஏரிகளின் பக்கத்திலுள்ள மலைகளில் அவை முட்டையிடுகின்றன. அந்த முட்டைகளைச் சாப்பிடும் அதிர்ஷ்டம் எனக்கும் கிடைத்திருக்கிறது. அந்த முட்டைகள் குஞ்சுகளாக மாறுகின்றன. குஞ்சுகள் சற்றுப் பெரியவையானதுமே, தனிக் குழுக் களாகவே பறப்பதைக் காணலாம். இந்தப் பறவைக் குஞ்சுகள் இதற்கு முன் பார்த்தறியாத வழியில், இயற்கையறிவு காட்டிய வழியில், கோடையில் இமயமலைச் சாரலில் பறந்து "பைகால்" ஏரியை அடைகின்றன. அங்குப் பனி பெய்ய ஆரம்பித்ததுமே அவை மீண்டும்

பார்த்தறியாத புதிய பிரதேசமான இந்தியாவின் நடுப்பகுதிக்கு வழியிலே இளைப்பாறிக் கொண்டே பறந்து வந்து சேர்ந்துவிடுகின்றன. தன்னிறைவே அவற்றுக்கு இந்தச் சக்தியை அளித்தது. தன் மகனுள் மற்றவர்களை அண்டிப்பிழைக்கும் குணத்தை வளர்க்கும் தாயின் வளர்ப்பு, பயனற்றதென்பதே என் கருத்து.

அந்தத் தாய் நல்ல தாயாகவும், எதிர்காலத்தைப் பகுத்துணரும் தாயாகவும் இருக்க வேண்டுமானால், அவள் முட்டாள் தாயாக மாறாமல் புத்திசாலித் தாயாக வேண்டும். பையனிடம் ஊர்சுற்றும் சுபாவம் இருந்தால், அதை ஊக்குவிக்க வேண்டும். தன் சக்தியைப் பொறுத்து அவனுக்குச் சில நூறு ரூபாய்கள் தந்து "மகனே! இரண்டு மூன்று மாதம் இந்தியாவைச் சுற்றி வா!" என்று விடை கொடுத்தனுப்ப வேண்டும். இப்படிச் செய்தால் அந்தத் தாய்க்கு இலாபம்தான்! அந்தப் பையன் ஊர் சுற்றும் திறமை இல்லாதவனாக இருந்தால், மீண்டும் விரைவிலேயே தன் வீட்டுக்குத் திரும்பி வந்து விடுவான். அவனுடைய ஊர் சுற்ற வேண்டுமென்ற பொய்யான ஆசையும் அடங்கிப் போய்விடும். தாயோ மகனைத் தன்னுடனேயே பிணைத்து வைத்துக் கொள்ள விரும்புகிறாள்; ஆனால் அவன் வளர்ந்து திருமணம் செய்துகொண்டபின் மனைவியின் கவர்ச்சியிலும், குழந்தைகளின் பாசத்திலும் கட்டுண்ட பிறகு, தன் தாயை முன்னைப் போலவே நேசிப்பான் என்பதற்கு என்ன உறுதி இருக்கிறது? மாமியார்- மருமகள் சண்டையும், மகன் தன் மனைவியின் பக்கம் இருப்பதையும் நாம் சாதாரணமாகப் பார்க்கிறோமல்லவா? மகனுடைய ஊர் சுற்ற வேண்டுமென்ற நல்லெண்ணத்துக்குத் தடையாக இல்லாமலிருப்பதே தாய்க்கு அழகு. முட்டாள் தாயின் பிடிவாதத்தைப் பொருட்படுத்தாமல் மாபெரும் இலட்சியப் பாதையில் நடைபோட்டுச் செல்வதே மகனுக்கு அழகு!

## தந்தை

தாய்க்குப் பிறகு தந்தை, மகனுடைய ஊர் சுற்றும் மனப் பான்மையை முறிக்க அதிக முயற்சி செய்கிறார். மகன் பதினைந்து-பதினாறு வயதைவிடச் சிறியவனாக இருந்தால், அவன் வீட்டை விட்டு வெளியேறும் சிறு சாகஸம் செய்தால்கூட, தந்தை தடி கொண்டு அவனைச் சரிப்படுத்த நினைக்கிறார். ஊர் சுற்றும் அபிலாஷையைத் தடி கொண்டு அடித்து அழித்துவிட முடியுமா? எந்தத் தந்தையும் அடக்குமுறையினால் வெற்றி பெறவில்லை என்பதறிந்தும், புதிய தந்தைகளும் அதையே மீண்டும் மீண்டும் பயன்படுத்துகின்றனர். அடக்குமுறைத் தந்தை இருப்பது ஊர்சுற்றி மகனுக்கும் நல்லதுதான்! ஏனெனில் இப்படிப்பட்ட தந்தையிடம்

அவனுக்கு எந்தவித மரியாதையும் இருக்காது. அவரை ஏமாற்றிவிட்டு வீட்டைவிட்டு ஓடியதும், சுலபமாகத் தந்தையை மறந்தும் விடுகிறான். ஆனால் எல்லாத் தந்தைமார்களும் முட்டாள்களாக இருப்பதில்லை. முட்டாள் தந்தைகளும் பதினைந்தாண்டுகள் வரையிலேயே அடக்கு முறையை ஆயுதமாகக் கொள்கின்றனர்.

"மகனை ஐந்தாண்டு வரை அன்புடன் சீராட்ட வேண்டும். பத்தாண்டு வரை அடக்கியாள வேண்டும். பதினாறாண்டுகளாகி விட்டாலோ, அவனை நண்பனாகவே கருத வேண்டும்!" என்ற "நீதி சாஸ்திர"த்தை அவர்கள் படித்தார்களோ!

மகன் வீட்டை விட்டு ஓடிப்போனதும், அவனைத் தேடும் பொறுப்பு தந்தையின் மேல் விழுகிறது, பாவம், தாயாரோ வீட்டுக் குள்ளேயே அழுது புலம்பிக் கொண்டிருந்து விடுகிறாள். சில பொதுவான கவலைகள் பொதுவாக இருக்கின்றன. பல ஆண் குழந்தைகள் இருந்தாலும், ஒருவன் வீட்டைவிட்டு ஓடிப்போய் விட்டால், தன் குலமே வாரிசு இல்லாமல் அழிந்து போய்விடும் என்று தந்தை கருதுகிறார். ஒரு குலத்திலுள்ள கோத்திரங்களையும் ஆட்களின் எண்ணிக்கையையும் பார்த்தால் இலட்சக்கணக்காக இருக்கும். அவர்களில் சில பேர் வாரிசுகளை உண்டாக்காவிட்டால் என்ன குடிமுழுகிப் போய் விடும்? மகன் வீட்டைவிட்டு ஓடிப்போய் விடுவதாலும் வாரிசுகள் இல்லாமற் போய்விடுவதாலும் தன் பெயர் தழைக்காது என்ற வாதத்தை எடுத்துக் கொள்வோம். மெத்தப் படித்தவர்களே தம் கொள்ளுத் தாத்தாவின் பெயரைச் சொல்ல முடியாமற் போனதை நான் கண்டிருக்கிறேன். நமது நாலாவது தலைமுறையின் பெயரையே மறந்துவிடும் போது, பெயரை விளங்கச் செய்ய வேண்டுமென்பது முட்டாள்தனமானது அல்லாமல் வேறென்ன? பழங்காலத்திலே "மகனில்லாமல் மோட்சமில்லை" என்ற வாக்கு பொருளுடையதாக இருக்கலாம். ஏனெனில் இரண்டாயிரம் வருடங்களுக்கு முன்பு நம் நாட்டில் காடுகள் அதிகமிருந்தன. மக்கள் தொகை மிகக்குறைவு, காடுகளோ பயங்கர மிருகங்கள் நிறைந்திருந்தன. அந்தக் காலத்தில் நம் தொகை பெருக வேண்டும், எண்ணிக்கை வலுவால் பகைவர்களை வெல்ல வேண்டும். வாழத்தேவையான பொருட்களை அதிக அளவில் உற்பத்தி செய்யவேண்டும் என்பதிலே தான் மக்கள் கண்ணுங்கருத்துமாய் இருந்தனர். ஆனால் இன்று மக்கள் தொகை நாட்டில் தேவைக்கதிகமாகவே இருக்கிறது. இனியும் மக்கள் தொகை பெருகினால் நமக்கு அபாயந்தான்! எண்ணிப் பாருங்கள்! 1949-ல் நமது மக்களுக்கு அரை வயிறு உணவளிக்கக்கூட நாற்பது இலட்சம் டன் தானியங்கள் அயல் நாடுகளிலிருந்து இறக்குமதி செய்ய நேர்ந்தது. இதுவரை இரண்டாவது உலகப் போர்க் காலத்தில்

சேமித்து வைத்த வெளிநாட்டுச் செலாவணியைக் கொண்டு, உணவு தானியங்களை இறக்குமதி செய்து கொண்டிருக்கிறோம். இனி நமது நாட்டிலேயே போதுமான உணவு தானியங்களை உற்பத்தி செய்யாமற்போனால், நாம் அனாதைச் சாவு சாக வேண்டியதுதான்! தற்போதைய மக்கள் தொகையே சமாளிக்க முடியாததாக இருக்கிற தென்றால் ஒவ்வோர் ஆண்டும் ஐம்பது இலட்சம் புதிய ஜீவன்கள் கந்துவட்டி விகிதத்தில் பெருகி வருகின்றனர். "மகனில்லாவிட்டால் மோட்சமில்லை" என்ற பழைய வாக்கை "மகனிருப்பதால் மோட்ச மில்லை" என்ற புதிய வாக்காக மாற்ற வேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டது. புதிய உயிர்களை உலகிற்குக் கொண்டுவர விரும்பாத ஆண் பெண்கள் இன்று புண்ணியவான்களாகக் கருதப்படவேண்டும். புண்ணியத்தில் உங்களுக்கு நம்பிக்கை இல்லையெனில், அவர்களை மரியாதைக்குரியவர்கள் என்றுதான் சொல்வோமே! அவர்கள் நாட்டின் பளுவைக் குறைக்கின்றனர். புத்திசாலித் தந்தைமார் குழந்தைகளைப் பெற்று, தம் கடமையை நிறைவேற்றிவிட்ட தாகக் கருத மாட்டார்கள் என்று எதிர்பார்க்கிறோம். அவர்கள் "பிண்டதானம்" இல்லாமல் நரகத்திற்குப் போவோமே என்று கவலைப்பட வேண்டாம். ஏனெனின் "சுமேரு" மலையின் மேல் இருப்பதாகக் கூறப்பட்ட சொர்க்கமும் பாதாளத்தில் இருப்பதாகச் சொல்லப்பட்ட நரகமும் பொய்யானவை என்று தற்காலப் பூகோள சாஸ்திரம் ஐயந்திரிபின்றி நிரூபித்துவிட்டது. அவர்கள் பேரும் புகழும் பெற வேண்டுமென்று விரும்பினால், அவர்களுடைய ஊர்சுற்றி மகன்களே அவற்றைத் தரவல்லவர்கள். அப்பாவிடம் அண்டியிருந்தாலே தந்தைக்கும் மகனுக்கும் அன்பும் நல்லுறவும் இருக்குமென்பது தவறு. தந்தையும் மகனும் காலமெல்லாம் சேர்ந்திருப்பதினால் அவர்களிடையே நிலவ வேண்டிய நேசமும் பாசமும் மறைந்து கசப்பான அனுபவங்களே மிஞ்சுகின்றன. மகனுடைய ஊர் சுற்றும் முடிவில் தடைக்கல்லாக இல்லாமலிருப்பதே தந்தைக்கு நல்லது. மகன் மீது பெரிய பெரிய ஆசைகள் வைத்து, வயோதிக காலத்தில் அவை நிறைவேறவில்லையே என்று அவர் புலம்ப வேண்டாம். ஒரு வேளை இளம் வயதிலேயே மகன் இறந்து விட்டால், கிழத் தந்தைக்கு மகனின் ஆதரவு எப்படிக் கிடைக்கும்? மாபெரும் இலட்சியத்தை முன்னோக்கிச் செல்லும் மகன் முட்டாள் தந்தையைப் பொருட்படுத்தக் கூடாது. எல்லாவற்றையும் துறந்து வீட்டைவிட்டு ஓடிவிட வேண்டும்.

## மனைவி

ஊர்சுற்றும் பாதையில் அடியெடுத்து வைப்பவர்களுக்குத் தடைகள் இவை மட்டுமல்ல. சாரதாச் சட்டம் அங்கீகரிக்கப்பட்ட

பிறகும், பலர் தம் குழந்தைகளுக்குச் சிறு வயதிலேயே திருமணம் செய்து வைத்துவிட்டனர். பதினைந்து- பதினாறு வயதுள்ள ஊர்சுற்றி இளைஞன் தன் பாதையில் அடி எடுத்து வைக்கத் தயாராகும் போது அவனுக்கு ஒரு சிறுமியுடன் விலங்கிடப்பட்டிருப்பதைப் பார்க்கலாம். இப்படிப்பட்ட சட்ட விரோதமான விலங்கை நொறுக்கிப் போட ஒவ்வொருவருக்கும் உரிமையுண்டு. “நீ போய் விட்டபின் உன் பெண்டாட்டியின் கதி என்ன?” என்று கேட்பது பொருளற்றது. நமது அரசியல் சட்டத்தில் 21 வயதடைந்தவர்களுக்கே ஓட்டுரிமை வழங்கப்பட்டுள்ளது. இதன் பொருள், 21 வயதைவிடக் குறைந்தவர்கள் நல்லது- கெட்டதை அறிய மாட்டார்கள், தம் பொறுப்பினைச் சரியாக உணர மாட்டார்கள் என்பதுதான்! அப்படி யென்றால் 21 வயதடைவதற்கு முன்னால் வாலிபனுக்கோ, யுவதிக்கோ கல்யாணப் பொறுப்பில்லை என்று பொருள். அப்படிப்பட்ட திருமணத்தை நீதியும், அறிவும் சட்ட விரோதமானதாகக் கருதுகின்றன. வாலிபர்களும், யுவதிகளும் இப்படிப்பட்ட விலங்குகளைப் பொருட் படுத்த வேண்டியதில்லை. “பொறுப்பு இருக்கட்டும்! நீ சென்று விட்ட பிறகு உன்னோடு பிணைக்கப்பட்ட அவள் கதி என்னவாகும்?” என்ற கேள்வி எழுப்புவர். இந்தக் கேள்வி என்ற வலை மிகவும் அபாயகரமானது. இந்தக் கேள்வி அறிவால் அல்லாமல், உள்ளத்தால் கேட்கப்படுகிறது. கொண்டவளின்மேல் கருணை காட்ட வேண்டு மென்ற சாக்கில், உன் சிறகுகள் வெட்டப்படுகின்றன. உலகில் வேதனை நிறைந்திருக்கிறது; கவலைகள் மண்டிக்கிடக்கின்றன. அவற்றைக் களைய வேண்டுமென்றால் வேரோடும் வேரடி மண்ணோடும் பிடுங்கி எறிய வேண்டும். இலைகளில் நீர்விட்டு மரத்தைச் செழிப்படையச் செய்ய முடியாது. பெரியவர்கள் தம் பொறுப்பை உணராமல், ஒரு அப்பாவி இளைஞனுக்கு விலங்கு மாட்டிவிட்டால், அவன் தன் விலங்கை முறித்துக்கொள்ள முயற்சிப்பதை, எப்படித் தவறென்று கூறமுடியும்? ஊர்சுற்றி தன் விலங்கினை- மனைவியை- விட்டுச் செல்லும் போது வீடு வாசலையோ ஆஸ்தியையோ தன்னுடன் கொண்டு போவதில்லை. அவனுக்குப் பெண் கொடுத்தவர்களும் அவனைப் பார்த்து அல்லாமல், வீடு வாசலைப் பார்த்தே கொடுத்தனர். வீடு வாசல் இருக்கிறது. “மகள் அங்கே விழுந்து கிடக்கட்டும்!” என்று நினைத்தே பெற்றோர் தம் மகளைக் கொடுத்துவிடுகின்றனர். அவள் தனக்குக் கொடுமை இழைக்கப்பட்டதாகக் கருதினால், சமுதாயத்தைப் பழி வாங்கட்டுமே! அவள் தன் பாதையைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள உரிமை படைத்தவள். பழங்காலத்தில் நம் நாட்டில் விவாகரத்து மிகச் சாதாரணமாகக்

கருதப்பட்டது. கணவன் காணாமற் போய் விட்ட மூன்றாண்டு களுக்குப் பிறகு, மறுமணம் செய்து கொள்ள அவளுக்கு உரிமையுண்டு. இன்றும் எழுபது சதவீத இந்துக்கள் அப்படிச் செய்கின்றனர். "இந்துகோட்" சட்டத்தில் மறுமணம் செய்துகொள்ளும் உரிமை பெண்களுக்கு அளிக்கப்பட்டதால்தான் பழம் பஞ்சாங்கங்கள் கூக்குரல் எழுப்புகின்றனர். விவகாரத்தை ஒப்புக் கொள்ளாவிட்டால் அந்தப் பெண்களை வீட்டிற்குள்ளேயே வைத்திருங்கள்! இலட்சக் கணக்கில் விதவைகள் ஏற்கெனவே இருந்து வருகின்றனர். அவர் களுடன் சில ஆயிரம் பேர் ஊர் சுற்றிகளின் மனைவிமார்களையும் சேர்த்துவிடுவதால், வானம் இடிந்து விழப் போவதில்லை. விதவை களின் உருவிலும் ஊர்சுற்றிகளின் மனைவிமார்களின் உருவிலும், குழந்தைகளைப் பெறுவதைத் தடுப்பது நல்லதுதான்! ஊர் சுற்றி தெரிந்தோ, தெரியாமலோ கொண்ட மனைவியை விட்டுவிட்டுப் போய் விட்டால் நாட்டுக்கு நன்மைதான் பயக்குமே தவிர, கேடு விளைவிக்காது.

மனைவியை நேசிக்கும் ஊர்சுற்றியின் மனத்தில் இக்கேள்வி பிறக்கலாம்; கடுமையான பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடித்துச் சூரிய மண்டலத்தைத் தாண்டி, பிரம்மலோகத்தை வெற்றி கொள்ளும் எண்ணம் எனக்கில்லை அப்படி இருக்கும்போது ஆசை மனைவியை விட்டுச் செல்வதில் என்ன பயன்? இதன் பொருள் மனைவியுடன் இருப்பதில் ஏதோ பயன் இருக்கிறது என்பதுதான்! குறிப்பிட்ட நேரங்களில் நாலு காலுடன் இருப்பது- ஆண்- பெண் கலந்திருப்பது - ஊர் சுற்றுவதற்குப் பெரும் தடையாக இல்லாவிட்டாலும், நாலு கால்களுடனேயே தம்மைக் குறுக்கிக் கொள்வது இயலாத காரியமாகி விடும். நாலு காலிலிருந்து ஆறு கால், எட்டுக் கால், கடைசியில் எண்ணற்ற கால்களாகிவிடும். மனைவிகூட ஊர் சுற்றும் மனப் பான்மையுள்ளவளாக இருந்தால் - கணவன் மனைவி இருவருக்குமே உடனடியாகப் பிள்ளை பெற்றுக் கொள்ள வேண்டுமென்ற விருப்பம் இல்லாதிருந்தால்- இரண்டு பேருமே ஒன்று சேர்ந்து ஊர் சுற்றுத் துவங்கலாம். ஆனால் சுமை அதிகமாகும். கணவன் - மனைவி இருவரும் சேர்ந்து திரிந்தாலும் ஒருவர் மீது ஒருவர் சார்ந்து இருக்கக்கூடாது. பயணத்தில் ஒருவர் மற்றொருவர் முன்னேறுவதற்குத் தடையாக இருந்தால், ஒருவரை விட்டு ஒருவர் விலகிச் செல்வதுதான் சிறந்தது என்று முடிவு செய்து கொள்ள வேண்டும். எனினும் உண்மையான இரண்டு ஊர் சுற்றிகள் கலந்து திரிந்தாலும் மேற்கூறிய சந்தர்ப்பம் வாய்க்காது.

சுற்றத்தார்களுடையவும், நண்பர்களுடையவும் அன்புத் தளைகள் விஷயமும் இதுவேதான்! ஆயிரக்கணக்கான பொறுப்புகள் இருந்தாலும்,

ஊர் சுற்றிப் பாதை அவற்றையெல்லாம் கடந்தது என்பதை உணர வேண்டும்.

வெளியுலகத் தடைகளுடன் கூட மாபெரும் உள்ளுணர்வுத் தடை கூட ஒன்று இருக்கிறது, அதுதான் மனத்தின் பலவீனம். ஆரம்பத்தில் ஊர்சுற்றிப் பாதையிலே அடியெடுத்துவைக்க நினைப்ப வனுக்கு அது புதிய பாதையாகையால், சற்று அச்சம் தோன்றலாம். ஒரு வேளை ஆஸ்திகனானால் அவன் உள்ளத்தில் "உலகை யெல்லாம் காப்பாற்றும் கடவுள் இருக்கும்போது வாழ்வைப்பற்றிய கவலை ஏன்?" என்ற கேள்வியும் தோன்றும். ஊர் சுற்றிகளில் பல பேர் கடவுளை மட்டுமே நம்பி வீட்டைவிட்டு வெளியேறி விட்டனர். ஆனால் அறிவாளிகளான முதல் தர ஊர் சுற்றிகள் கண்ணை மூடிக்கொண்டு கடவுளை நம்புபவர்களல்ல. எனினும் சொந்த அனுபவத்தைக் கொண்டு புதிய பாதையிலே தாவிப் பாயக் கொஞ்சமும் சிந்திக்க வேண்டிய தேவையே இல்லை என்று நான் கூறுவேன். மனிதன் ஒவ்வொரு நாளும் இப்படிப்பட்ட முயற்சி செய்துகொண்டே இருக்கிறான். டெல்லி, கல்கத்தா போன்ற பெரும் நகரங்களில் ஒவ்வொரு ஆண்டும் கார், பஸ்களின் கிழ் விழுந்து ஆயிரக்கணக் கானவர் இறக்கவில்லையா? இதைக்காணும் போது நமது வீட்டி லிருந்து வெளியே வந்து சாலையிலே அடியெடுத்து வைப்பதும் அபாயகரமானதுதானே! வீட்டிற்குள்ளே மட்டும் அபாயமில்லையா? நில நடுக்கத்தின்போது சுவர்களும் மேல்தளங்களும் எத்தனையோ உயிர்களைப் பலி கொள்கின்றன. ரயில் விபத்துக்களைக் கண்டு பயந்து பயணிகள் ரயில் பிரயாணம் செய்வதை நிறுத்திக் கொள் கிறார்களா?

ஒரு சமயம் என்னுடன் காரில் வந்துகொண்டிருந்த ஒரு நண்பர், ஸிலிகுரியிலிருந்து கல்கத்தாவுக்கு விமானத்தில் போவதைப்பற்றிப் பேச்சு எழுந்தபோது, "எனக்கும் விமானத்தில் பயணம் செய்ய ஆசைதான்! ஆனால் பயமாக இருக்கிறது!" என்றார்.

"பயமெதற்கு? விமான விபத்தில் சிக்கி இறப்பவர்கள், யோகிகளைப் போல் நல்ல சாவு சாகிறார்கள். கால், கை முடமாகி வாழ்வதில்லை. சில வினாடிகளில் மரணம் ஏற்பட்டு விடுகிறது!" என்றேன் நான்.

என் நண்பர் யோகியின் மரணத்தை அடைய விரும்பவில்லை. நானே தொடர்ந்தேன். "விமானத்தில் பயணம் செய்பவர்கள் எல்லாருமா செத்துவிடுகிறார்கள்? விமான விபத்துக்களில் மரணமடைபவர்கள் வெகு சிலரே! இலட்சம் பேருக்கு ஒருவர். இலட்சம் பேரில் ஒருவரே சாக நேரும்போது, நீங்கள் 99,999 பேரோடு இருக்க விரும்பாமல், ஒரேயொருவருடன் இருக்க ஏன் விரும்புகிறீர்கள்?"

என் வாதத்தை அவர் ஒப்புக்கொண்டுவிட்டார். பாக்டோக்ரோ விமான நிலையத்தில் நாங்கள் விமானமேறி, ஒண்ணே முக்கால் மணி நேரத்தில் கல்கத்தா வந்தடைந்துவிட்டோம். விமானத்தில் ஏறிய பிறகு அவர் ஜன்னல் வழியாக வெளியுலகத்தைப் பார்த்துத் திருப்தி கொள்ளவில்லை; விமானமோட்டியின் அருகில்கூடச் சென்று பார்க்க விரும்பினார். விமானமேறிய பிறகு அவருடைய பயம் எங்கே போய் மறைந்துவிட்டதோ! இதேபோல ஊர் சுற்றும் பாதையில் அடியெடுத்து வைப்பதற்கு முன்னர் அனுபவமில்லாததினால் முதலில் மனம் அச்சம் கொள்கிறது. வீட்டை விட்டு ஓடிப்போனவர்களில் இலட்சம் பேரில் ஒருவர் மட்டுமே பட்டினியால் செத்திருக்கலாம். ஒரொரு சமயம் துன்பமும் நேருகிறது. ஆனால் அந்தத் துன்பம் ஊர்சுற்றும் சமையலில் உப்பைப் போன்றது. ஊர் சுற்றியின் பாதை மிருதுவான மலர்ப் பாதையல்லதான்!- மலர்ப்பாதையும் ஒரு பாதையா? என்றாலும் அவனுக்கு வழியிலே உதவி செய்யும் கைகள் எத்தனையோ எதிர்ப்படும். இந்தக் கைகள் கடவுளின் கைகளல்ல; மானுடத்தின் கைகள், தற்கால மனிதனின் சுயநலத்தைப் பார்த்து, சிலர் நம்பிக்கையின்மையைப் பிரச்சாரம் செய்யவாரம்பித்திருக்கின்றனர், ஆனால் மனிதனின் மனிதாபிமானமே கடவுளாக மாறி ஊருக்குப் புதியவனான பரதேசிக்கு எல்லாவித உதவியும் செய்ய முனைந்துவிடுகிறது. உண்மையில் மனிதன் எவ்வளவுக்கு அறிமுகமில்லாதவனாக இருக்கிறானோ அவ்வளவுக்கு அவனிடத்தில் அனுதாபம் சுரக்கிறது. ஊர்சுற்றிக்குப் புதிய பிரதேசத்தின் மொழி தெரியாவிட்டால், அங்குள்ளவர்கள் அவனுக்கு உதவி செய்வதைத் தமது கடமையாகக் கொள்கின்றனர்.

உண்மையில் நாம் நமது வாழ்க்கையை ஒரு நீர்க்குமிழியாகக் கருதுவது, மிகவும் தவறான ஒரு கருத்தாகும், மனித வாழ்க்கை நிலையானது; அற்புதமானது. நடுக்கடலில் கப்பல் மூழ்கிவிட்டால், உடைந்த ஒரு சிறு பலகையைப் பிடித்துக் கொண்டு சிலர் உயிர் பிழைத்து விடுகின்றனர். மற்றவர்களைக் காப்பாற்ற வேறு கப்பல் வந்துவிடுகிறது. பயங்கரமான காடுகளில் கூட நமக்கு உதவி செய்ய நமது அறிவோடு வேறு யாராவது வந்துவிடுகிறார்கள். உண்மையில் மனிதாபிமானம் வளர்ச்சியடைந்ததைத் தொடர்ந்து, மனித உயிருக்கு ஆபத்துக்களும் மிகக் குறைவாகவே வருகின்றன. நீங்கள் உங்கள் நகரைத் துறக்கத் தயாரானால், ஆயிரக்கணக்கான நகரங்கள் உங்களை வரவேற்க முன்வரும். நீங்கள் உங்கள் கிராமத்தை விட்டு வெளியேறுங்கள்; ஆயிரக்கணக்கான கிராமங்கள் உங்களை வரவேற்கத் தயாராயிருக்கும். ஒரு சில நண்பர் சுற்றத்தாருக்குப் பதிலாக ஆயிரக்கணக்கான நண்பர்களும், சுற்றத்தாரும் உங்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். நீங்கள் தனியானவரல்ல. இங்கு நான் மீண்டும்

ஆயிரம் பொய்களையும், ஓரிரு உண்மைகளையும் எடுத்துக் கூறும் இந்துக்களின் புனித நூலாகக் கருதப்படும் "பகவத்கீதை"யின் சுலோகத்தை மேற்கோள் காட்டுவேன்.

"நீ உன் உள்ளத்தில் பலவீனத்தை விட்டு விட்டு எழுந்து வா, அர்ச்சுனா!"

நீ உன்னுடைய மன பலவீனத்தைத் துறந்துவிட்டால் உலகத்தையே வெற்றி கொள்ளலாம்! உலகத்தின் எந்த மூலைக்கும் கையில் சல்லிக் காசில்லாமல் செல்லலாம்! வீட்டை விட்டு வெளியேறக்கூடிய தைரியம்தான் இங்குத் தேவை! வீரனைப்போல் மரணத்தைக் கண்டும் சிரிக்கக்கூடிய திராணி தேவை! ஒருவேளை சாவே கூட ஏற்பட்டு விட்டால் என்ன குடி முழுகிப்போய்விடும்? சாவு எங்காவது வரத்தானே செய்யும்? துன்பங்களை எதிர் கொள்ளவும் மனிதன் தெரிந்திருக்க வேண்டும். சிங்கத்தை வேட்டையாடப் புறப்பட்டவன், பயந்து கொண்டிருப்பானேயாகில், அவன் புறப்படத் தேவையே இல்லையே! வருங்கால ஊர்சுற்றி வயதிலும், அனுபவத்திலும் சிறியவனானால், அவன் துவக்கத்தில் சிறு சிறு பயணங்களை மேற்கொள்ளலாம். புதிய சிறகுகள் கொண்ட குஞ்சுகள் முதலில் கொஞ்சம் உயரம் வரையில் தான் பறக்கத் துவங்கும்.

முதல் பிரயாணங்களின் போது, வீட்டிலிருந்து கொஞ்சம் பணம் கிடைக்கும் வாய்ப்பிருந்தால், வைராக்கிய வெறியில் அதை எடுத்துக் கொள்ள வேண்டாமென்று நான் சொல்ல மாட்டேன். நம்மிடம் மறைத்து வைத்துக்கொள்ளும் பணத்துக்கு எவ்வளவோ மதிப்பிருக் கிறது. அதனால் வீட்டிலிருந்து கொஞ்சம் பணம் எடுத்துக்கொள்வதில் தவறில்லை. பெற்றோரின் சொற்ப பணத்தை எடுத்துக் கொள்வதை எந்த மதநூலும் திருட்டு என்று கூறாது. அறிவுள்ள வாலிபன் எவ்வளவோ ஜாக்கிரதையாகப் பாதுகாக்கப்படும் பணத்திலிருந்து கொஞ்சம் எடுத்துக்கொள்ளத் தவறுவதில்லை. ஆஸ்தி முழுவதையும் விட்டுச் செல்கின்ற அவன், கொஞ்சம் பணம் எடுத்துக் கொள்வதனால், என்ன அப்படிப் பெரும் குற்றம் இழைக்கிறான்? ஆனால் வீட்டிலிருந்து எடுத்துக் கொண்டு செல்லும் பணத்தால் யாரும் முதல் அல்லது இரண்டாம் ரக ஊர்சுற்றியாக ஆக முடியாது. ஊர் சுற்றி தன் சட்டைப் பையின் மீதல்லாமல், தன் அறிவு, பலம், தைரியம் ஆகியவற்றின் மீது நம்பிக்கை வைக்க வேண்டும். வீட்டுப் பணம் எத்தனை நாளுக்குத் தாங்கும்? கடைசியிலாவது தன் அறிவையும், பலத்தையுமே நம்பியாக வேண்டும்.

## 3. கல்வியும் வயதும்

இந்திய நாடு முழுவதுமே வீடு வாசல் துறந்து ஊர் சுற்றியாகி விட்டாலும், கவலைப்படத் தேவை இல்லை. எனினும் ஊர்சுற்றுதல் என்பது ஒரு மரியாதைக்குரிய பெயரும் பதவியுமாகும். முதல் ரக ஊர்சுற்றிகளில் எல்லா விதமானவர்களையும் சேர்க்க இயலாது. நமது பல வாசகர்கள் முதல் இரு அத்தியாயங்களையும் படித்து, மகிழ்ந்து, "இனி நாம் படிக்க வேண்டிய அவசியமே இல்லை. எதுவுமே செய்ய வேண்டிய தேவையும் இல்லை. இப்பொழுதே வீட்டைவிட்டுப் புறப்பட்டு விடுவோம்! உலகத்தில் ஏதாவது ஒரு வழி பிறக்காமலா போய்விடும்?" என்று சிந்தித்துக் கொண்டிருக்கலாம். இப்படிப்பட்டவர்கள் ஊர்சுற்றிப் பாதையில் அடியெடுத்து வைத்தால் தொடர்ந்து அவர்களால் பயணம் செய்ய முடியாது. அவர்களால் மகத்தான லட்சியங்களை கைக்கொள்ள முடியாது. ஒரு நல்ல பதவியை அடைய சில வழிமுறைகள் தேவைப்படுகின்றன. ஊர் சுற்றிப்பாதையில் செல்ல சிறுவர்களால் கூட முடியும் என்று நான் ஏற்கெனவே கூறியிருக்கிறேன். வாலிபர்களைப் பற்றியும், யுவதிகளைப் பற்றியும் வேறு சொல்ல வேண்டுமா? ஆனால் எல்லாச் சிறுவர்களின் முயற்சிகளும் வெற்றி பெறுமென்று சொல்வதற்கில்லை. ஊர்சுற்றி, சமுதாயத்திற்குச் சுமையாக இருக்கக்கூடாது. சமுதாயத்தினரும், உலகத்தின் எல்லா நாட்டினரும் உதவி செய்வார்களென்று ஊர்சுற்றி எதிர்பார்க்கலாம். ஆனால் நிம்மதியாகப் பிச்சையெடுப்பது அவன் தொழிலல்ல. உலகத்திடமிருந்து பெறுவதைக் காட்டிலும், நூறு மடங்கு அதிகமாக அவன் உலகத்திற்குத் தரவேண்டும். இந்த நோக்கத்துடன் வீட்டைவிட்டு வெளியேறுபவனே வெற்றியுடன் புகழ்மிக்க ஊர் சுற்றியாக ஆகமுடியும். ஊர் சுற்றும் விதை ஆரம்பத்திலேயே விதைக்க முடியும் என்பதும் உண்மைதான்! இந்த நூலைப் படிப்பவர்களில் யாரும் பன்னிரண்டு வயதுக்குக் குறைந்தவர்கள் அநேகமாக இருக்கமாட்டார்கள். நமது பன்னிரண்டு- பதின்மூன்று வயதுடைய இளம் வாசகர்கள் இந்நூலை நன்றாகப் படியுங்கள்,

ஊர் சுற்ற வேண்டுமென்ற எண்ணத்தை உறுதிப்படுத்திக்கொள்ளுங்கள்! ஆனால் இந்த வயதில் வீட்டைவிட்டு வெளியேற வேண்டுமென்ற அவாவினை அடக்கிக் கொள்ளுதல் நலம்! அதனால் அவர்களுக்கு ஒன்றும் நஷ்டமில்லை.

நமது இளம் வாசகர்கள் நான் சொல்வதைக் கேட்டு, நான் அவர்களுடைய பெற்றோரின் கையாளாகி விட்டேன் என்று என்மேல் சந்தேகமும் கொள்ளலாம். அவர்களின் உற்சாகத்தைத் தடுத்து, அவர்களைப் பின்னுக்கு இழுக்கிறேன் என்றும் கருதலாம். ஆனால் அவர்கள் அப்படிக் கருதுவது எனக்கு இழைக்கப்படும் அநியாய மாகும்; அப்படி நினைப்பது அவர்களுக்கும் நல்லதல்ல! நான் முதல் முதலாகக் கிராமத்தை விட்டு காசி மாநகரை அடைந்தபோது எனக்கு ஒன்பது வயதுகூட ஆகவில்லை. என் சிற்றப்பா என்னைக் கையைப் பிடித்துக் கங்கா நதிக்கு அழைத்துச் சென்று கொண்டிருந்தார். இதை நான் பெரிய அவமானமாகக் கருதினேன். சுதந்திரமாகவும் தனியா கவும் நகரின் சில பகுதிகளைச் சுற்றிப் பார்த்து சில புத்தகங்களையும் வாங்க விரும்பினேன். ஒருநாள் நான் சிற்றப்பாவுக்குத் தெரியாமல் இரண்டு மூன்று மைல் தூரம் சுற்றிவிட்டு வந்தேன். சின்னஞ்சிறு கிராமத்திலிருந்து வந்த ஒரு ஒன்பது வயதுச் சிறுவன் காசி மாநகரின் தெருக்களில் தனியாகத் திரிவது பயப்படக்கூடிய விஷயந்தான்! ஆனால் என்னுள் உறங்கிக் கிடந்த ஊர் சுற்றும் எண்ணம்தான் அப்படி வெளிப்படுகிறது என்று அப்பொழுது எனக்குத் தெரியாது. அடுத்த படியாக நான் பதினாலாவது வயதில் ஒரு நீண்ட பிரயாணத்தைத் தொடங்கினேன். அதுவே நீண்ட பயணங்களில் முதலாவதாகும். எனினும் பதினாறாவது வயதிலிருந்து தான் முறையாக நான் ஊர் சுற்றும் விரதத்தை ஆரம்பித்தேன். என்னைப் பின்பற்ற விரும்பினால் என் வாசகர்களை நான் தடுக்கப்போவதில்லை. ஆனால் என் அனுபவம் அவர்களுக்குப் பயன்பட வேண்டுமென்று விரும்புகிறேன். சில விஷயங்களை முன்னதாகவே முடிவு செய்து கொண்டுவிட்டால், மனிதனின் வாழ்க்கையில் பன்னிரண்டு ஆண்டுகளில் சாதிப்பதை இரண்டே ஆண்டுகளில் சாதிக்க முடியும். இரண்டாண்டுகளில் செய்து முடிக்கும் காரியத்திற்காகப் பன்னிரண்டாண்டுகள் சுற்றித் திரிவது பயனற்றது என்று நான் கூற மாட்டேன். சிலருக்கு அதுகூடத் தேவைப்படலாம். எல்லாவற்றையும் ஆராயும்போது நமக்குத் தெரிவது இவைதான். ஊர்சுற்றி எந்த வயதிலாவது ஒரு திடமான முடிவு செய்துகொள்ள வேண்டும். அவ்வப்போது தன் பாதையிலே வரும் தடைகளைத் தகர்த்தெறிய வேண்டும் என்றாலும் முழுத் தயாரிப்புகள் செய்து கொண்ட பின்னரே ஊர் சுற்றப் புறப்பட வேண்டும். இதன் பொருள் மனத்தை ஊர் சுற்றத் தயார்ப்படுத்திக்

கொள்ள வேண்டும். உடல் அதற்காகத் தயாராவதில் சற்றுத் தாமதம் ஏற்பட்டாலும் அதைப் பொறுத்துக் கொள்ளவேண்டும். முராதாபாத் நகரில் ஒரு சேட் தயார் செய்துவைத்திருந்த திட்டத்தை நான் வாசகர்களுக்குச் சிபாரிசு செய்யமாட்டேன். அவர் மிகவும் வசதியாக வாழ்ந்து வந்தார். கோடைக் காலத்தில் விசிறியின் குளிர் காற்றில் இளைப்பாறும் அவருக்குக் கோடையின் கொடுமை எப்படித் தெரியப் போகிறது! பாவம், அவருக்கு மற்றவர்களைப் பார்த்துத் தானும் "யோகி"யாகிவிட வேண்டுமென்ற ஆசை வந்து விட்டது. அவர் வீட்டைவிட்டு வெளியுலகில் சுற்ற விரும்பினார். அவர் பத்து திருவோடுகளைக் கூட வரவழைத்துத் தயாராக வைத்திருந்தார். "ஒவ்வொருவராகப் பத்துப்பேர் சேர்ந்த பிறகு நாங்கள் வீட்டைவிட்டுக் கிளம்புவோம்" என்று சொல்லிக் கொண்டிருந்தார். அவர் இப்படி முடிவு செய்த எத்தனை வருடங்களுக்குப் பிறகு, நான் அவரைச் சந்தித்தேனோ தெரியாது. மீதி எட்டுப் பேரை எதிர் பார்க்கும் பொறுமை எனக்குக் கிடையாது. ஊர் சுற்றிக்குப் பொறுமையின்மை மிகவும் அவசியம். இந்தப் பொறுமையின்மையே பலமான தடை களைக் கூடத் தகர்த்தெறிவதிலே அவனுக்கு உதவி செய்கிறது.

பின் எங்களைத் தடுத்து நிறுத்த வேண்டிய அவசியம் என்னவென்று வாசகர்கள் கேட்கலாம். அவசியம் இருக்கிறது. என்று நம் மனம் விரக்தியடைகிறதோ, அன்றே நாம் வீட்டைவிட்டு வெளியேற வேண்டும். நீங்கள் மூன்றாம், நான்காம், ஐந்தாம், ஆறாம் ரக ஊர் சுற்றியாக ஆகவேண்டுமானால் முன் தயாரிப்பின்றியே நீங்கள் வீட்டைவிட்டுப் புறப்படலாம். ஆனால், நான் நீங்கள் முதல் அல்லது இரண்டாம் ரக ஊர்சுற்றிகளாக ஆகவேண்டுமென்று விரும்புகிறேன்; அதனால் தான் முன் தயாரிப்புகள் இருக்க வேண்டு மென்று கூறுகிறேன். தன் எதிர்கால வாழ்க்கையைப் பற்றி ஒரு திடமான முடிவு செய்து கொள்வது, ஊர் சுற்றி வாழ்வின் முதற்படி யாகும். இந்த முடிவு எவ்வளவு விரைவில் செய்துகொண்டாலும், அவ்வளவு நல்லது. பன்னிரண்டிலிருந்து பதினான்கு வயதுக்குள் இந்த முடிவைத் தவறாமல் எடுத்துக்கொண்டுவிட வேண்டும், பன்னிரண்டு வயதுக்கு முன்பு வெகு சிலருக்கே இப்படிப்பட்ட முடிவெடுக்கக்கூடிய அறிவும், அனுபவமும் இருக்கும். ஆனால் பன்னிரண்டு - பதினான்கு வயதினரில் சுறு சுறுப்புள்ள சிறுவர்கள் முடிவுகள் எடுப்பதில் திறமையுள்ளவர்களாகவே இருப்பார்கள். முதல் தர ஊர் சுற்றியாவதற்கு அறிவுள்ளவனாயிருத்தல் அவசியம். ஊர் சுற்றிப் பாதையில் செல்பவர்கள், முதல் தர அறிவுள்ள வாலிபர் களாகவும், யுவதிகளாகவும் இருக்கவேண்டுமென்று நான் விரும்பு கிறேன். மற்ற ரக ஊர் சுற்றிகளினால் கூடச் சமுதாயத்திற்கு எவ்வளவோ

நன்மையுண்டு என்பதை ஏற்கெனவே கூறியுள்ளேன். 12-14 வயதில் உள்ளத்தில் ஊர் சுற்ற வேண்டுமென்ற முடிவை ஏற்படுத்திக்கொண்டு, உல்லாசப் பிரயாணம் என்ற சாக்கில் அவ்வப்போது சிறுசிறு பிரயாணங்களை மேற்கொள்ள வேண்டும்.

இளைஞர்கள் எந்தச் சமயத்தில் வீட்டை விட்டு வெளியேற வேண்டும்? குறைந்தது 16 அல்லது 17 வயதிருக்க வேண்டும். படிப்பும் குறைந்தது எஸ்.எஸ்.எல்.சி அல்லது அதற்குச் சமமான தகுதி இருக்க வேண்டுமென்பது என் கருத்தாகும். எஸ்.எஸ்.எல்.சி என்றால் அந்தத் தேர்வில் தேறியிருக்க வேண்டுமென்பதல்ல, இலக்கியம், பூகோளம், வரலாறு, கணக்கு ஆகியவற்றின் சாதாரண அறிவு ஊர் சுற்றிக்கு இருந்தால் போதுமானது. ஒரு தடவை புறப்பட்டு விட்ட பிறகு அவன், சாதாரண அறிவைப் பெற, ஓரிடத்தில் நின்றுவிடக் கூடாது.

வீட்டை விட்டு வெளியேறக் குறைந்த வயது 16-18 வருடங்கள், அதிகபட்ச வயது 23-24 வருடங்கள் என்று நான் கருதுகிறேன். இருபத்து நான்கு வயதுக்குள் வீட்டை விட்ட வெளியேறிவிட வேண்டும். இல்லையெனில் மனிதன் பல தவறான பழக்கங்களுக்கு அடிமையாகி விடுகிறான். புத்தி கெட்டு விடுகிறது. மனம் குறுகி விடுகிறது. உடலுழைப்பிற்கு பழக்கப்படாமல் போய் விடுகிறது. பல மொழிகளைச் சுலபமாகக் கற்கும் வயதும் கடந்து போய்விடுகிறது. ஆகவே 16-லிருந்து 24 வயதுக்குள் வீட்டை விட்டுப் புறப்பட வேண்டும். இதற்கிடையேயுள்ள எட்டு வருடங்களில் அதாவது இருபதாம் வயதில் வீட்டை விட்டுப் புறப்படுவது சிறப்புடையது. முதல் ரக ஊர் சுற்றி கவிஞனாகவோ, எழுத்தாளனாகவோ அல்லது கலைஞனாகவோ உலகின் முன் தோன்றுகிறான் என்பதை நினைவில் வைத்துக் கொள்ளவேண்டும். கவிஞனும் எழுத்தாளனும், கலைஞனும் அறிவில் சிறந்தவர்களாக இல்லாவிட்டால், அவர்களின் படைப்புக்களில் ஆழம் இருக்காது. ஒரு விஷயத்தைப் பற்றிச் சரியாக அறிந்திராதவன் அதை நேரில் கண்டாலும் சரியாகப் புரிந்து கொள்ளமாட்டான். படிக்கவேண்டுமென்ற திட சங்கற்பம் செய்து கொண்ட பின்னர் தனக்கு எந்த விஷயத்தில் ஆர்வம் இருக்கின்றதென்பதை அவன் தெரிந்துகொள்ள வேண்டும். பிறகு அதற்கேற்றாற் போல் படிப்பைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும். குறைந்தது எஸ்.எஸ்.எல்.சி. இருக்கவேண்டுமென்று முதலில் கூறிய நான் இப்பொழுது மேலும் நான்கு வருடங்கள் படிக்க வேண்டுமென்று கூறுவதைக் கேட்டு, பல்லைக் கழகப் பட்டதாரி (பி.ஏ.) ஆக வேண்டுமென்று யோசனை கூறுவதை வாசகர்கள் புரிந்துகொண்டிருப்பார்கள். அப்படிப் புரிந்துகொள்வது தவறானதல்ல. என் வாசகர்கள் மீண்டும் என்னைக்

கோபித்துக் கொள்வார்கள். பொறுமையை இழப்பார்கள். ஆனால் அவர்களின் அற்ப கோபத்தைக் கண்டு உண்மையையும், அவர்களின் நலனுக்குகந்ததையும் சொல்லாமல் இருக்க மாட்டேன். மாபெரும் ஊர் சுற்றியாவதற்கான அறிகுறிகள் தன்னகத்தே கொண்டவன், சில ஆண்டுகள் துன்பப்பட்டாலும், தனக்கான பாதையைத் தவறாமல் வகுத்துக் கொள்வான். ஆகவே பொறுமையற்ற வாலிபர்களின் பாதையில் நான் தடைக்கல்லாக இருக்க விரும்பவில்லை. ஆனால் நாற்பதாண்டு கால ஊர் சுற்றி அனுபவத்தைக் கொண்டு, துவக்கத்தில் சில வருடங்களை முன் தயாரிப்பில் செலவிட்டால் பிற்காலத்தில் நல்ல பயன் இருக்குமென்று கூறுவேன். புத்தகங்கள் எழுதும் போதெல்லாம் நான் அனுபவித்த கஷ்டங்களை நினைவிலிருத்திக் கொண்டேன். நான் 1916-லிருந்து 1932 வரை பதினாறு வருடங்களில் ஈட்டிய பௌத்தமத அறிவைப் பன்னிரண்டு நூல்களில் வடித்திருக் கிறேன். மற்றவர்கள் அவற்றைப் படித்து, நான் பதினாறு வருடங் களில் சம்பாதித்த அறிவை, வெறும் மூன்று நான்காண்டுகளில் சம்பாதித்துக் கொள்ள முடியும். இப்படிப்பட்ட ஒரு வசதி எனக்கு முன்பு இருந்திருந்தால், எவ்வளவு பயன்பட்டிருக்கும்? கல்வியைப் பற்றிய விஷயத்தைப் போலவே ஊர்சுற்றுவதற்கான சாதனங்களைத் திரட்டிக் கொள்வதிலும் முன் அனுபவமில்லாதவர்களுக்குப் பல வருடங்கள் கழிந்துவிடுகின்றன. நீங்கள் 12-14 வயதில் ஊர்சுற்ற வேண்டுமென்று திடசங்கற்பம் செய்து கொண்டால் 16-ம் வயதில் எஸ்.எஸ்.எல்.சி. தேறிவிட்டால், சாதாரண உலக அறிவைப் பெற்று விட்டால், உலகப் படத்தைப் பார்க்கத் தெரிந்து கொண்டு விட்டால், பூகோள அறிவைப் பெற்றுவிட்டால், உலக நாடுகளை நீங்கள் புரிந்துகொண்டுவிடுவீர்கள்.

நீங்கள் ஊர் சுற்ற வேண்டுமென்ற முடிவெடுத்துக் கொண்டதும் சுற்றுப்புறத்திலுள்ள நூல் நிலையங்களிலும் பள்ளி நூல் நிலையத்தி லுள்ள பயண நூல்களையும், வாழ்க்கை வரலாறுகளையும் நன்கு படித்துக் கற்க வேண்டும். நல்ல நாவல்களும் சிறுகதைகளும் ஊர் சுற்றிக்கு விருப்பமானவைதான். ஆனால் பயணப் புத்தகங்கள் அவனுக்கு மிக மிக விருப்பமானவை. முதலில் நீங்கள் தற்கால இந்தியப் பயணிகளின் நூல்களைப் படிக்க வேண்டும். பிறகு புகழ் பெற்ற அயல்நாட்டுப் பயணிகளின் பயண வரலாறுகளைக் கற்க வேண்டும். பழங்கால ஊர்சுற்றிகளும், தற்கால ஊர்சுற்றிகளும் அனைவருமே ஒரே குடும்பத்தைச் சார்ந்தவர்கள். அவர்களுடைய அனுபவத்தையும் அறிவையும் கற்றுத் தேர்வது வாலிபர்களுக்கு மிகவும் பயனளிக்கக் கூடியதாகும். எஸ்.எஸ்.எல்.சி. முடிப்பதற்குள் நூற்றைம்பது அல்லது இருநூறு பயண நூல்களைப் படித்துவிட வேண்டும்.

ஊர்சுற்றி தன் பயணக் காலத்தில் பல மொழிகளையும் கற்க வேண்டி வரும். சில மொழிகளைப் பதினாறாம் வயதுக்குள் கற்கலாம். இந்திக்காரர்கள் வங்க மொழியையும், குஜராத்தியையும் இரண்டு மாதங்களுக்குள் கற்றுக் கொண்டுவிட முடியும். ஆங்கிலம் நமது பள்ளிகளில் கட்டாய பாடமாகக் கற்றுத் தரப்படுவதால், ஆங்கிலப் புத்தகங்களைப் படிக்கும் வாய்ப்பும் இருக்கிறது. காலப் போக்கில் ஆங்கிலத்தின் முககியத்துவம் குறைந்துவிட்டாலும், ஊர்சுற்றி அதையும், மற்ற மொழிகளையும் கற்றுத்தானாக வேண்டும். உலகத்தின் நாலாப் பக்கங்களிலும் மொழித் தடங்கல் இல்லாமல் சுற்றித் திரிய ஆங்கிலம், ரஷியமொழி, சீனம், பிரெஞ்சு ஆகிய மொழிகளின் சாதாரண அறிவு மிகவும் அவசியம். இல்லாவிட்டால் மொழி தெரியாததால் அந்நாட்டின் பயணம் மகிழ்ச்சிகரமானதாகவும், அறிவூட்டக்கூடியதாகவும் அமையாது.

எஸ்.எஸ்.எல்.சி. தேறியபின் நான்காண்டுகளில் முன் தயாரிப்பாக ஊர்சுற்றி என்னென்ன செய்ய வேண்டும். அவனுக்குப் பூகோள அறிவும் உலகப்பட அறிவும் மிகவும் அவசியம். எஸ்.எஸ்.எல்.சி.க்குள் அவன் பெறும் பூகோள அறிவும்; உலகப்பட அறிவும் போதுமானவையல்ல. நீங்கள் எந்த ஒரு பயண நூலைப் படிக்கும் போதும் உலகப் படத்தைக் கவனித்துக் கொண்டே படிக்க வேண்டும். படத்தைப் பார்த்தால் மட்டும் பயனில்லை. படத்தைப் பார்த்துக் குளிர் காலத்தில் அங்குள்ள பூமி எப்படி இருக்கும் என்று தெரிந்துகொள்ள இயலாது. உலகப் படத்தில் லெனின்கிராட் நகரைப் பார்ப்பவன், அங்கே குளிர் காலத்தில் - 24, - 30 சென்டிகிரேட் வரை பனி உறைந்து விடுகிறதென்பதை அறிய முடியாது. இவ்வளவு மோசமான சீதோஷ்ண நிலையைப் பூகோள நூல்களைப் படித்துப் புரிந்து கொள்ள முடியாது. இமய மலைகளில் ஆறாயிரம் அடிகள் உயரம்கூடப் போகாத நமது வாசகர்கள், கடுங்குளிரைக் கற்பனை கூடச் செய்ய இயலாது. உங்கள் கைகளில் அரைக்கிலோ பனிக் கட்டியைச் சில நிமிடங்கள் வைத்துக் கொண்டால், அதைக் கொஞ்சம் கொஞ்சம் புரிந்து கொள்ளலாம். எனினும் இளம் ஊர்சுற்றி வீட்டைவிட்டுக் கிளம்புவதற்கு முன்னால், பலதரப்பட்ட வானிலைகள் உள்ள பிரதேசங்களில் சிறிய சிறிய பிரயாணங்களைச் செய்ய வேண்டும். நீங்கள் ஜனவரி மாதத்தில் இமயமலை அடிவாரத்திலுள்ள சிம்லாவிலும் நைனித்தாலிலும் இருந்திருந்தால், சீன யாத்ரீகர்களான ஹுவான்சாங்கும், பாஹியானும் வர்ணித்துள்ள பனிப் பிரதேசப் பயணங்களைப் புரிந்து கொள்ள முடியும். லெனின்கிராடின் உறைந்துவிடும் பனியையும் கற்பனை செய்ய முடியும். முன் தயாரிப்புகளுடன் செய்யும் காலத்தில்கூட,

சிறிய சிறிய பயணங்களை மேற்கொள்ளலாம். எனினும் என் யோசனையை வாலிபர்கள் அவசியம் வரவேற்பார்கள்.

பூகோளமும் வரலாறும் தவிர மாணவர்கள் பயண நூல்களையும், படிக்கலாம். கல்லூரியில் படிக்கும் போது சுயமாக எழுதவும் படிக்கலாம். இந்தப் பருவத்தில் கொஞ்சம் கற்பனை வளம் படைத்த வாலிபனுக்கும் யுவதிக்கும் கவிதை எழுதும் எண்ணம் தோன்றும். சிறு கதை போன்றவற்றை எழுத உள்ளத்தில் ஆசை பிறக்கும். நமது இளைஞர்கள் இந்தப் பருவத்தில் மிக அதிக அளவில் எழுத முயற்சிக்க வேண்டும். ஆனால் அவற்றையெல்லாம் அச்சில் பார்க்க வேண்டு மென்ற ஆசை மட்டும் இருக்கக்கூடாது. பக்குவமடையாத வயதில் கட்டுரைகளும், கவிதைகளும் பத்திரிகைகளில் வெளிவந்தால் வாலிபரின் மகிழ்ச்சி நிச்சயம் அதிகரிக்கும். ஆனால் இதில் கெடுதலும் இல்லாமலில்லை. உரிய காலத்திற்கு முன்பாக அவசரமாய்ப் புகழ் பெற்ற பல இளைஞர்களின் திறமை, மலராமலேயே கருகிப் போய் விட்டிருக்கிறது. நான்கு அழகான கவிதைகளை எழுதியதுமே புகழ் தானாகக் கிடைத்துவிடுகிறது. கவியரங்குகளிலும் பங்கு பெற அழைப்புகள் கிடைத்துவிடுகின்றன. தற்போதைய தலைமுறையில் பலரும் இந்தத் திடீர்ப் புகழினால் அழிந்து விட்டனர். புதிய படைப்புகள் செய்வதில் அவர்களுக்கு நாட்டமே இருப்பதில்லை. ஒரு புதிய நகரில் நடக்கும் கவியரங்கில், பழைய கவிதைக்குள் கை தட்டல் கிடைக்கும்போது, புதிய கவிதைகளை ஏன் எழுத வேண்டும்? ஊர் சுற்றிக்கு இத்தனை மலிவான புகழ் தேவையில்லை. அவனுடைய வாழ்க்கை கை தட்டல் பெறுவதற்காக அமைந்ததல்ல. அவன் இரண்டு மூன்று வருடங்கள் பணி புரிந்து ‘பென்ஷன்’ வாங்கிக் கொள்பவனல்ல. ஊர்சுற்றி என்னும் நோய் காசநோயைப் போன்றது. அது மரணத் துடன்தான் முடியும். அதில் எவருக்குமே விடுமுறையோ பென்ஷனோ கிடைப்பதில்லை.

இலக்கியத்துடன்கூட ஊர் சுற்றிகளுக்குத் தேவையான பல விஷயங்களைப்பற்றி நாம் பின்னர் கூறப் போகிறோம். இங்கு முக்கியமாக நாம், வாலிபர்களுக்கு அவசியமான உடற்பயிற்சியைப் பற்றிச் சொல்ல விரும்புகிறோம். ஊர் சுற்றியின் உடல் மலரைப்போல் மிருதுவாக எப்பொழுதுமே இருக்கக்கூடாது. உருக்கைப் போன்ற அவனுடைய உள்ளத்தையும் துணிவையும் போலவே, உடலும் உருக்குபோல் இருக்கவேண்டும். ஊர் சுற்றி கப்பல், ரெயில், விமானப் பிரயாணங்களையும் செய்யலாம். ஆனால் இவைகளில் மட்டுமே பயணம் செய்துகொண்டிருந்தால், அவன் முதல் ரக ஊர் சுற்றியாக வோ, இரண்டாம் ரக ஊர் சுற்றியாகவோ ஆகவே முடியாது. இந்தப்

பிரயாண சாதனங்கள் நுழைய இயலாத இடங்களில் கூட ஊர்சுற்றி திரியவேண்டி வரலாம். ஒரு சில இடங்களில் மாட்டு வண்டியும், கோவேறு கழுதையும் கிடைக்கலாம்; ஆனால் பல இடங்களில் அவன் தன் சாமான்களைத் தன் முதுகின்மேலேயே சுமந்து போக நேரும். முதுகில் பளு சுமப்பது ஒருநாளில் வரக்கூடியதல்ல, உங்களுக்குப் பழக்கமில்லாது போனால், ஒரு சில கிலோக்கள் சுமையை இரண்டு மைல் தூரம் சுமந்து போனதுமே உலகத்தையெல்லாம் ஏசத் தொடங்கி விடுவீர்கள். ஆகவே இடையில் கிடைக்கும் நான்காண்டு அவகாசத்தின் போது ஊர்சுற்றி, தன் உடலை உழைப்புக்கு ஈடு கொடுக்கக்கூடியதாகத் தயார் செய்ய வேண்டும். முதுகில் பளு சுமந்து அவ்வப்பொழுது இரண்டு மூன்று மைல் தொலைவு போய் வந்து பழகவேண்டும். உடம்பை உறுதிப்படுத்த உடற்பயிற்சியும் செய்யலாம். ஆனால் ஊர்சுற்றி காட்டா குஸ்தி செய்து திரிய வேண்டியதில்லை. உறுதியான உடல் ஆரோக்கியத்துடன் இருக்கும் பல விதமான பயிற்சிகள் உடலை உறுதியாக்கும். ஆனால் எல்லாவற்றையும் விட முதுகில் பளுவுடன் ஐந்தாறு மைல் நடந்து செல்வதும் மண்வெட்டியை எடுத்து ஒரே மூச்சில் இரண்டு மூன்று பூப்பாத்திகள் வெட்டுவதும் அதிக நன்மை பயக்கும். இவ்விரண்டும் ஓரிரு நாட்களில் வந்து விடுவதில்லை. தொடர்ந்து பல மாதங்கள் வரை செய்து கொண்டிருக்க வேண்டும். உடலுழைப்பைப் பழக்கப்படுத்திக் கொண்டுவிட்டால், எந்த நாட்டிற்குச் சென்றாலும், மற்றவர்களுக்குச் சுமையாய் இல்லாமல் இருக்கலாம். நீங்கள் உங்கள் ஊர் சுற்றி வாழ்க்கையின் போது தென் அமெரிக்காவிலுள்ள டிரினிடாட், கயானா ஆகிய நாடுகளுக்குப் போகிறீர்கள் என்று வைத்துக் கொள்ளுவோம். இவ்விரு நாடுகளிலும் ஏற்கெனவே லட்சக்கணக்கான இந்தியர்கள் வாழ்கின்றனர். அங்கிருந்து நீங்கள் சிலி அல்லது ஈக்வெடார் நாட்டுக்குச் செல்லலாம். உங்களுக்கு எந்தத் தொழிலுமே தெரியாமலிருந்தாலும், அல்லது நீங்கள் அறிந்த தொழில் அங்குப் பயன்படாவிட்டாலும், நீங்கள் உங்கள் உடலுழைப்பைக் கொண்டே, அங்கிருக்கும் ஒரு விவசாயிக்கு, அவன் வேலையில் உதவி செய்ய முடியும். பின்னர் நீங்கள் அந்த விவசாயியின் விருந்தாளியாக ஒரு மாதம் இருக்க விரும்பினாலும், அவன் மகிழ்ச்சியாக உங்களை ஏற்றுக் கொள்வான். நீங்கள் முதல் தர ஊர்சுற்றியாக இருந்தால், உங்கள் உழைப்புக்கு வருவாயை எதிர் பார்க்கமாட்டீர்கள். நீங்கள் பல நாடுகளில் பெற்ற பலதரப்பட்ட அனுபவங்களைக் கதைகதையாகக் கூறுவீர்கள். அங்குள்ள மக்களுடன் இரண்டறக் கலந்து உங்களுக்குப் புகலிடம் அளித்தவருக்கு நெருக்க மானவராகி விடுவீர்கள். இப்போது உடலுழைப்பின் மதிப்பு உலகத்தில் பெருகி வருகிறதென்பதை நினைவிலிருத்திக் கொள்ளுங்கள்.

நமது நாட்டிலேயும் கூடச் சென்ற பத்தாண்டுகளில் உடலுழைப்பவர் களின் சம்பளம் பல மடங்கு பெருகியிருக்கிறது என்பதைக் கவனியுங்கள். இந்த நிலையில் உலகத்தின் எந்த நாட்டிலுமே கூட, ஊர் சுற்றி உடலால் உழைத்து உணவும் உடையும் பெற்றுவிடலாம் அல்லவா?

உடலுழைப்பு என்பது உங்கள் சட்டைப் பையிலுள்ள ரூபாய் நோட்டைப் போன்றது மட்டுமல்ல: அது அன்றே சந்தித்த மனிதனையும் நெருக்கமானவனாக ஆக்கிவிடுகிறது. என்னுடைய நண்பர் ஒருவர் பதினேழு ஆண்டுகள் ஜெர்மன் நாட்டில் இருந்து விட்டு, அண்மையில்தான் பாரதம் திரும்பினார். அங்குள்ள இரண்டு பல்கலைக்கழகங்களில் நான்கு 'டாக்டரேட்' விருதுகளைப் பெற்றார். மாபெரும் பெர்லின் பல்கலைக் கழகத்தில் அவர் இந்தியத் தத்துவப் பேராசிரியராக இருந்தார். இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு வீழ்ச்சியடைந்துவிட்ட ஜெர்மனியில், தமது கல்விமுறை பயனற்றது என்ற கருத்து மேலோங்கியது. அப்பொழுது என் நண்பர் ஒரு கிராமத்தில் ஒரு விவசாயியின் வீட்டில் இருந்துகொண்டு, மாடு களையும் குதிரைகளையும் மேய்த்துக்கொண்டும், வயல்களில் வேலை செய்து கொண்டும் இரண்டு வருடங்களைக் கழித்தார். அந்த விவசாயியும், அவன் மனைவியும், மகள்களும் என் நண்பரைத் தம் குடும்பத்தைச் சேர்ந்தவராகவே கருதி அன்பைப் பொழிந்தனர்: அவர் அங்கேயே இருந்துவிட வேண்டுமென்றும் விரும்பினார். எனது நண்பர் அந்த விவசாயியின் பொன்னிறக் கூந்தலுடைய அழகிய மகளைத் திருமணம் செய்துகொள்ள ஒப்புக்கொண்டிருந்தால் அவர்கள் மிகவும் மகிழ்ந் திருப்பார்கள். அன்பும் காதலும் கெட்டவையென்று நான் இளம் ஊர்சுற்றிகளிடம் சொல்ல மாட்டேன்! ஆனால் அசையும் ஜீவனி லிருந்து அசையாத மரமாக மாறிவிடுவது மட்டும் கெட்டதுதான்! தூணில் கட்டிய மாட்டைப் போல் மனிதன் ஆகிவிடக்கூடாது: அதற்காக ஊர்சுற்றி தன் உள்ளத்தை எங்கேயாவது பறிகொடுத்து விடக்கூடாது. ஆகவே தற்போதைய உலகில், ஆரோக்கியமான உடலினால், உடலுழைப்பைப் பழகிக் கொள்வது ஊர்சுற்றிக்கு மிகவும் பயனளிப்பதாகும்.

வாலிபர்கள் அடுத்த நான்காண்டுகளில் தம் கல்வியில் கவனம் செலுத்தினால், அவர்கள் தம் அறிவையும், உடலுறுதியையும் பெருக்கிக் கொள்ளலாம். இந்த லாபத்துடன் அவர்களுக்குப் பல்கலைக்கழகப் பட்டதாரிகளாகும் லாபமும் கிடைக்கும். ஊர்சுற்றி பி.ஏ. ஆக வேண்டுமென்ற அவசியம் ஒன்றுமில்லை. அவன் பட்டதாரியாக இருந்தாலும், நிலைமையில் பெரிய மாறுதலேதும் ஏற்பட்டுவிடப் போவதில்லை. ஆனால் பட்டதாரியாக இல்லாவிட்டால், அவன்

வருங்காலப் பயணங்கள் செய்யும் போது, எங்கேயாவது பட்டம் பெற வேண்டுமென்ற எண்ணத்துடன், படிப்பதற்காகத் தங்கிவிடுவான். இந்த ஆசையை நிறைவேற்றிக்கொண்டு அவன் புறப்பட்டால், பிறகு அவன் எங்கேயும் நிற்க வேண்டியதில்லை. பட்டம் பெற்ற ஊர்சுற்றியை முதன் முதலாகச் சந்திக்கும் மனிதன், அவனைக் கல்வியறிவுள்ளவனாகவும், பண்பாடுடையவனாகவும் கருதுவான். கல்லூரியில் நான்காண்டுகள் படிக்கும் இளைஞன் தனக்கு விருப்பமான விஷயங்களையே தேர்ந்தெடுப்பான். கல்லூரிப் புத்தகங்களோடு மற்ற நூல்களையும் படித்து, தன் அறிவைப் பெருக்கிக் கொள்ளும் வாய்ப்பு அவனுக்கு ஏற்படும். இந்தச் சமயத்திலேயே ஊர் சுற்றிக்குத் தேவையான நாட்டியம், இசை, ஓவியம் போன்ற முக்கியமான கலைகளையும் பழகலாம். இப்படி வீட்டை விட்டு வெளியேற நான்கு ஆண்டுகள் தாமதமானாலும் பரவாயில்லை. இருபது இருபத்திரண்டு வயதுக்குள் அவன் பல்கலைக் கழகக் கல்வி கற்று ஊர் சுற்றத் தேவையான தகுதியைப் பெற்றுவிடுவான் என்பதில் ஐயமில்லை. யாரானாலும் உலகம் புரியவாரம்பித்ததுமே திடமுடிவு செய்து கொண்டு, வீட்டை விட்டுப் புறப்பட்டு விடலாம். பின்னர் அவனுடைய அறிவும், துணிவுமே அவனுக்கு உதவிசெய்யும் என்றாலும் பன்னிரண்டாவது வயதில் வீட்டை விட்டுப் போக வேண்டுமென்று முடிவு செய்து கொண்டு பதினாறாவது வயதுவரை அதற்கான முன் தயாரிப்புகளைச் செய்து கொள்வது சி றப்பாக இருக்குமென்று எடுத்துக் கூறுவதே இந்த அத்தியாயத்தின் நோக்கமாகும். ஊர் சுற்றுவதற்கான எல்லாக் கல்வியறிவும் பெற்ற பின்னர், அதற்காக உடலை உறுதியாக்கிக்கொண்ட பிறகு, வீட்டைவிட்டு வெளியேறுவது தான் சிறந்த வெளியேற்றமாக இருக்கமுடியும். இருபத்திரண்டு அல்லது இருபத்து நான்கு வயதுக்குள் வீட்டைவிட்டுப் புறப்படும் இளைஞன் மேற்கூறிய அறிவுச் செல்வத்தையும், உடலுழைப்புச் செல்வத்தையும் தன்னகத்தே கொண்டிருப்பான். எதிர்காலத்தில் அவனுக்கு எங்கேயும் ஏமாற்றமும், கவலையும் ஏற்படா.

பொருளாதாரக் கஷ்டங்களால் வீட்டிலிருந்துகொண்டு கல்வி கற்க இயலாதவர்கள், உள்ளம் விரக்தியடைந்த அன்றைக்கே வீட்டை விட்டுப் புறப்பட்டு விட வேண்டும்.

# 4. தன்னிறைவு

ஊர் சுற்றும் எண்ணம் ஒரு நாட்டிற்கோ, இனத்திற்கோ, வர்க்கத்திற்கோ சொந்தமானதல்ல. ஒரு நாட்டின் தேசிய வாழ்வு முன்னேற்றப் பாதையில் சென்றுகொண்டிருந்தால் மட்டுமே, பணக்காரக் குடும்பத்தில் கூட ஊர்சுற்றி பிறக்க முடியும். வீழ்ந்து கொண்டிருக்கும் சமுதாயத்தைச் சேர்ந்த பணக்காரன், வீழ்ச்சியிலும் பணக்கார வர்க்கத்தைச் சேர்ந்தவன்தான். என்றாலும் ஊர்சுற்றும் எண்ணம் எல்லோருக்குமே தோன்றலாம். ஊர்சுற்றி பணக்காரக் குடும்பத்தில் பிறந்தாலும், ஏழைக் குடும்பத்தில் பிறந்தாலும் அல்லது என்னைப் போன்று நடுத்தரக் குடும்பத்தைச் சேர்ந்தவனானாலும் அவனுள் மற்ற நல்ல குணங்களுடன் தன்னிறைவு கூட அளவுக்கதிக மாகவே இருக்க வேண்டும். வசதி படைத்த குடும்பத்தில் பிறந்து, அவ்வசதிகளை நம்பியே ஊர் சுற்றப் புறப்பட்டால், அவன் நிச்சயம் தன் முயற்சியில் தோல்வி அடைந்து விடுவான். உண்மையில் செல்வமும் பணமும் ஊர் சுற்றும் பாதையில் தடைகளாகலாம். பணமும் செல்வமும் எல்லா இடங்களிலும் ஊர் சுற்றியைச் செயலாற்றல் படைத்தவனாக்குகின்றன என்று கருதப்படுகிறது. இது மிகத் தவறான கருத்தாகும். செல்வமும், பணமும் ஊர் சுற்றியை ரயிலிலும், கப்பலிலும், விமானத்திலும் ஏற்றி விடலாம். ஆடம்பர ஓட்டல் களிலும், சிற்றுண்டி விடுதிகளிலும் சேர்க்கலாம். ஊர் சுற்றி மனவுறுதி இல்லாதவனாக இருந்தால், இவ்விடங்களில் அவனுடைய மனோபலம் வீழ்ந்துவிடலாம். ஆகவே நமது வாசகர்களில் ஊர் சுற்ற வேண்டு மென்ற எண்ணமுடைய பணக்காரர்கள் யாராவது இருந்தால் அவர்கள் முதலில் செல்வத்துடனுள்ள தம் தொடர்பை அறுத்துக் கொள்ள வேண்டும். பிச்சை எடுக்க வேண்டிய அவசியம் ஏற்படாத அளவுக்கு வீட்டிலிருந்து சொற்பப் பணத்தையே எடுத்துக்கொள்ள வேண்டும். ஓட்டல்களிலும் விடுதிகளிலும் தங்குவதற்குத் தேவையான பணம் அவர்களிடம் இருக்கவே கூடாது. வெவ்வேறு வர்க்கங் களையும் சேர்ந்த ஊர் சுற்றிகள் ஒரே நிலைக்கு வர வேண்டுமென்பது தான் இதன் பொருளாகும்.

ஊர் சுற்றும் அறம் எந்த விதமான ஜாதி வேற்றுமைகளையும் பாராட்டாது. மதம் நிறம் ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்துள்ள வர்க்க பேதங்களையும் அது ஒப்புக்கொள்ளாது. ஓர் ஊர்சுற்றி மற்றொரு ஊர் சுற்றியைக் காணும்போது நெருங்கிய உறவினன் ஒருவனைக் கண்டதைப் போன்ற உணர்ச்சி மேலிட வேண்டும். உண்மையில் ஒரு ஊர் சுற்றி பண்பட்டதின் அறிகுறியே இதுதான்! உயர் ரக ஊர்சுற்றிகள் தம்மிடையே நெருங்கிய பிணைப்பை உணர்வார்கள். அவர்களிடையே, தான் தன்னுடையது என்ற வேற்றுமையே மறைந்து போகும். புகழ் பெற்ற சீன ஊர் சுற்றிகளான ஃபாஹியான், ஹுவான்சுவாங் ஆகியோரின் பயண வரலாறுகளைக் கவனித்தால், அவர்கள் தமக்குத் தென்பட்ட புதிய துறவிகளிடம் எத்தனை அன்பாக நடந்துகொண்டார்கள் என்பது தெரியவரும். வரலாற்றில் விரிவான கடினமான சிரமங்களை அனுபவித்த ஊர் சுற்றிகளைப்பற்றி அவர்களிருவரும் மதிப்புடனும் அனுதாபத்துடனும் வர்ணித்திருக்கின்றனர்.

ஊர் சுற்றுதல் என்பது ஒருவிதமான சுவையாகும். இது காவியச் சுவையைவிடக் குறைவானதல்ல. கடினமான பாதைகளைக் கடந்து, ஒரு புதிய இடத்தை அடையும்போது உள்ளத்தில் ஏற்படுகின்ற உவகை, ஒரு அற்புதமான அனுபவமாகும். அந்த அற்புதச் சுவையை நாம் கவிதைச் சுவையுடன் தாராளமாக ஒப்பிடலாம். சிலருக்குப் பிரம்மத்தின் மீது நம்பிக்கை இருந்தால், அவர்கள் அதைப் பிரம்மச் சுவை என்றே கருதிக் கொள்ளலாம். ஆனால் கையில் நிறைய பணத்தை எடுத்துக் கொண்டு ஊர் சுற்றக் கிளம்புகிறவன் இந்தச் சுவையைக் கண்டிப்பாக அனுபவிக்க இயலாது. நிறைய பணத்தைச் செலவு செய்துகொண்டும், வசதியான ஓட்டல்களில் தங்கிக்கொண்டும், விமானங்களில் பறந்து கொண்டும் இருப்பவனை ஊர்சுற்றி என்று கூறுவது, அந்தச் சொல்லையே அவமானப்படுத்துவதாகும். ஆகவே, வசதியுள்ள குடும்பத்தில் பிறப்பது ஊர் சுற்றிக்குப் பெருமையளிப்பதில்லை. அவனுக்கு இது ஒரு தடங்கல்தான்! இதைத் தகர்த்தெறிய எவ்வளவோ சிரமப்பட வேண்டும்.

அப்படியென்றால், எல்லாவற்றிலிருந்தும் துறவறம் பூண்டு எதையும் கையிலெடுத்துக்கொள்ளாமல் ஊர் சுற்றிப் புறப்பட வேண்டுமா என்ற கேள்வி எழக்கூடும். பணமும் செல்வமும் ஊர் சுற்றிக்குக் கெடுதல் விளைவிப்பதைப் போலவே, அவனுக்குச் சுயமரியாதையும் தேவையான ஒன்றாகும். சுயமரியாதையற்ற எவனும், உயர்தரமான ஊர்சுற்றியாக முடியாது. உயர்தரமான ஊர் சுற்றி, தன்னைப் போன்ற ஊர் சுற்றிகளுக்கும், ஊர் சுற்றி அறத்திற்கும் கெட்ட பெயர்

உண்டாக்கக் கூடாது. ஒரு ஊர்சுற்றி உயர்ந்த லட்சியங்களையும், மதிப்பிற்குரிய நடத்தையையும் கொண்டிருந்தால் அவனால் நிகழ்கால வருங்கால ஊர்சுற்றிகள் அனைவருக்கும் பயன் உண்டாகும். ஆயிரக் கணக்கான ஊர் சுற்றிகளில் சிலர் கெட்டவர்களாகவும் இருக்கலாம். அவர்களால் ஊர் சுற்றும் அறத்துக்குக் களங்கமும் உண்டாகலாம். ஆனால் இதைக் குறித்து அவ்வளவாகக் கவலை கொள்ளத் தேவையில்லை. ஊர் சுற்றியின் உண்மை நிலையை எல்லோராலும் புரிந்து கொள்ளச் செய்ய முடியாவிட்டாலும், விஷயந்தெரிந்த பண்பட்ட ஆண்- பெண்களின் உள்ளங்களிலாவது ஊர் சுற்றிகளின் பால் அனுதாபத்தையும், ஆதரவையும் தோன்றச் செய்வது, ஊர் சுற்றியின் முக்கிய கடமையாகும். அவன் தன் பாதையைச் செப்பனிடுவது மட்டுமல்ல; அங்கே முட்கள் இருந்தால், அவற்றை எடுத்துத் தூர வீசி எறிய வேண்டும். வருங்கால ஊர் சுற்றிகள் அந்தப் பாதையில் வரும் போது, தொல்லைப்படக்கூடாது. தன்மானமுள்ள ஊர் சுற்றியினால் தான், இதையெல்லாம் தன் மனத்திலிருத்திக் கொள்ள இயலும். உண்மையான ஊர் சுற்றி முகஸ்துதியை விரும்பமாட்டான். ஆனால், அவன் யாரையும் மதிக்காதவனாகவும், பண்பாடு தெரியாத முரடனா கவும் இருக்கவேண்டுமென்பது இதன் பொருளல்ல. உலகத்தில் எவரையுமே தன்னைவிட உயர்ந்தவர்களாகவும் அதே சமயத்தில் தன்னைவிட தாழ்ந்தவர்களாகவும் எண்ணா மனோநிலையை ஊர்சுற்றி பெற்றிருக்க வேண்டும். சமநிலைப் பார்வையும், நெருக்கமான நட்புறவும் அவன் கொண்டிருக்க வேண்டும்.

தன்மானமுள்ளவன் எப்போதுமே பிச்சைக்காரனாகவும் பிச்சை எடுப்பவனாகவும் இருக்கக் கூடாது. ஆனால் பிச்சை எடுத்து வாழ்கின்ற பௌத்த சந்நியாசிகள், ஊர் சுற்றித் தகுதி படைத்தவர்களல்ல என்பது இதன் அர்த்தமல்ல. உண்மையில் அப்படிப்பட்ட பிச்சைக்கும் ஊர் சுற்றுதலுக்கும் தகராறு இல்லை. ஒருவன் தன்மானத்தை இழந்து அனுதாபத்துக்குரியவனாகி, தீனமாகவும் ஈனமாகவும் பிச்சை எடுப்பதே கெட்ட விஷயமாகும். ஆனால் பௌத்த பிட்சுக்கள் வாங்கும் பிச்சை, பௌத்த மதம் பரவியுள்ள நாடுகளுக்கே பொருந்தும், மற்ற நாடுகளில் அது நடக்கக்கூடியதல்ல. மாபெரும் ஊர்சுற்றியான புத்தர், பிச்சை யையும் தன்மானத்தையும் இணைத்த விதம் வியப்பை உண்டாக்கக் கூடியதாகும். பௌத்த மதம் பரவிய நாடுகளில் ஊர்சுற்றும் பௌத்த சந்நியாசிகளே பூரணமான மகிழ்ச்சியை அடையமுடியும். அந்நாடு களில் உள்ள எல்லாப் பௌத்த சந்நியாசிகளுமே ஊர்சுற்றிகள் என்று கூற முடியாது. முதல் தர ஊர்சுற்றிகளின் எண்ணிக்கை அங்கே மிகவும் குறைவு. என்றாலும் அவர்களுடைய முதல் வழிகாட்டி (புத்தர்)

செப்பனிட்ட பாதையில் இப்பொழுது புல்லும் முள்ளும் மண்டிக் கிடப்பதாலும், அந்தப் பாதையை மிகச்சுலபமாகவே சரி செய்துவிட முடியும்.

பௌத்த சந்நியாசிகளின் விஷயத்தை விட்டுவிட்டாலும் ஊர் சுற்றி தன்னுடைய தன்மானத்தைப் பாதுகாத்துக் கொள்ள, தன்னிறைவு அடைவதற்கான சில விஷயங்கள் மிகவும் முக்கியமாகும். நாம் ஏற்கெனவே தன்னிறைவு பற்றிய சில விஷயங்கள் கூறினோம். இன்னமும் கூறுவோம். இங்கேயும் சில விஷயங்களைச் சொல்வோம்.

ஒருவன் தான் சம்பாதித்த பணத்தைக் கொண்டு உல்லாச வாழ்க்கை வாழ வேண்டுமென்பதல்ல தன்னிறைவின் பொருள். ஊர் சுற்றிக்கும் உல்லாச வாழ்விற்கும் தொடர்பே இல்லை. தன்னிறைவு என்பது பணத்தைச் சம்பாதித்து, அதிலே தன் குடும்பத்தை நடத்துவதுமல்ல. ஊர்சுற்றும் அறத்துக்கும், குடும்பத்துக்கும் சம்பந்தம் இல்லை. குடும்பமும், குழந்தை குட்டிகளும் ஓரிடத்திலேயே அசைவற்று நிற்கும் மனிதனைச் சேர்ந்தவை. ஆனால் ஊர்சுற்றியோ ஓரிடத்தில் நில்லாமல் சுற்றித் திரிந்து கொண்டே இருப்பவன். ஒரு சமயம் ஊர் சுற்றிக்கு ஓராண்டோ இரண்டாண்டோ ஒரே இடத்திலும் இருக்க வேண்டிவரலாம். ஆனால் தன்னிச்சையாக ஒரே இடத்தில் இருப்பதற்கு இதுவே மிகவும் நீண்ட காலமாகும். இதைவிட நீண்ட காலம் ஒரே இடத்தில் தங்கி இருப்பவனால் தன்னுடைய விரதத்தை நிறைவேற்ற முடியாது. ஆகவே ஒருவன் தீனக்குரலில் பிச்சை எடுக்காமலிருப்பதே தன்னிறைவின் பொருளாகும்.

கல்வியும் பண்பாடும் இல்லாதவனை ஊர்சுற்றி என்று சொல்ல இயலாது. கல்வியும், பண்பாடும், தன்மானமும் ஊர்சுற்றிக்கு இருக்க வேண்டிய முக்கிய குணங்களாகும். அவன் எவரையுமே தன்னைவிட உயர்ந்தவர்களாகவோ, தாழ்ந்தவர்களாகவோ கருதுபவனல்ல; ஆதலால், எவருடைய வேடம் அணிந்தும் அவனால், அவர்கள் பக்கம்போய் உட்கார்ந்துவிடமுடியும். கிழிந்த ஆடைகளும், அழுக்கு உடலும், எலும்பும் தோலுமாக துறவிகளுடன் நகரத்திலோ, காட்டிலோ இரண்டறக் கலந்து விடுவதும் ஒரு கலையாகும். அத்துறவி களில் பலரும் முதல் தர அல்லது இரண்டாந் தரமானவர்களாகவும் கூட இல்லாமலிருக்கலாம். ஆனால் அவர்களிலும் சிலர் உலகத்தின் பெரும் பகுதியைச் சுற்றி வந்தவர்களாகவும் இருக்கக்கூடும். பல நாடுகளிலும் தாம் கண்ட காட்சிகளைப் பற்றியும், கேட்ட விஷயங் களைப் பற்றியும் அவர்கள் இயற்கையான மொழியில் எடுத்துச் சொல்லக் கேட்கும்போது, மிகவும் மகிழ்ச்சியாக இருக்கும். உள்ளத்திலே உற்சாகம் பொங்கித் ததும்பும். பண்பும் கல்வியறிவு

முள்ளவர்களைக் காட்டிலும், மூன்றாம் தர ஊர் சுற்றிகளிடம், நான் அன்பையும் நெருங்கிய நட்பையும் கண்டிருக்கிறேன்.

மிகச் சாதாரண மக்களுடன் கலந்து போய் விடக்கூடிய ஊர் சுற்றி, உடலுழைப்பால் வெட்கப்படமாட்டான். ஊர் சுற்றி உடலுறுதி யுடன் இருப்பது மட்டுமல்ல, உடலால் உழைத்துக்கொண்டுமிருக்க வேண்டும். உடலுழைப்பு செய்யும் சக்தி அவனுக்கிருக்க வேண்டும். ஓரோர் சமயம் தற்காலிகமாக வாழ்வதற்காக, உடலுழைப்பை விற்கவும் அவனுக்கு நேரலாம். பிறருடைய பெட்டி, படுக்கைகளைச் சுமந்து போவதிலோ துணிகளைத் துவைப்பதிலோ ஊர்சுற்றிக்கு என்ன சிறுமை இருக்க முடியும்? மிகச் சாதாரண தொழிலாளி செய்யும் வேலைகளைச் செய்யக்கூடிய திறனிருந்தால் உயர் ரக ஊர்சுற்றியாக முடியும். சாதாரண தொழிலாளிகளிடமிருந்து ஊர்சுற்றி பல விஷயங் களைக் கற்றுக்கொள்ள முடியும். தன்னிறைவு பெற, உடலுழைப்பு மிகவும் உதவிகரமாக இருக்கும். தன்னிறைவு பெறுவதற்கு மற்ற சாதனங்கள் இருந்தாலும் உடலுழைப்பை அலட்சியம் செய்வது சரியல்ல.

தான் செல்லப் போகும் நாட்டினர் தான் பேசும் மொழியைப் புரிந்துகொள்ளமாட்டார்கள் என்ற உண்மையும் ஊர் சுற்றிக்குத் தெரிந்திருக்க வேண்டும். அந்த நிலையில் அவனுடைய புத்தக அறிவு ஒன்றும் பயன்படாது. அப்படிப்பட்ட இடங்களில், மொழியறிவு அவசியமில்லாத தொழில்களைக் கற்றிருந்தால் மிகவும் நல்லது. எடுத்துக்காட்டுக்கு சிகையலங்கரிக்கும் தொழிலையே எடுத்துக் கொள்ளுங்கள். இன்று எல்லோருமே ஸேஃப்டி ரேஸரோடு ஷேவிங் செய்து கொண்டிருந்தாலும், முகச் சவரம் செய்வதையும், சிகையலங் கரிப்பதையும் கற்றுக் கொள்வது எல்லோருக்கும் சுலபமல்ல. தன்னிறைவு பெறுவதற்காகச் சிகையலங்கரிக்கும் கலையைக் கற்றுக் கொள்வது உதவிகரமாக இருக்கும். நல்ல அறிவுள்ள இளைஞனுக்கு இதைக் கற்றுக்கொள்வது அவ்வளவு கடினமான விஷயமல்ல. இதற்காக அதிக நேரத்தைச் செலவிடத் தேவையும் இல்லை. ஊர் சுற்றும் எண்ணமுடைய இளைஞன், சிகையலங்கரிக்கும் தொழிலாளி ஒருவனுடன் நட்பு கொள்ள வேண்டும். மெல்ல மெல்ல அந்தக் கலையைக் கற்கவேண்டும். பல நாடுகளிலும் இந்தத் தொழில் பரம்பரைத் தொழிலல்ல. அதாவது "நாவிதர்" என்ற சாதி அங்கெல்லாம் இல்லை. இதைக் காண மிகத் தொலைவு செல்ல வேண்டியதில்லை; இமயமலைப் பிரதேசங்களிலேயே காணலாம். அங்கே உங்களுக்கு யாராவது ஒரு நாவிதர் தென்பட்டால், அவர் கீழ்ப் பிரதேசமான மைதானத்திலிருந்து வந்தவராகத்தான் இருப்பார். மேல் ஸத்லஜ்

பிரதேசத்தில் ( கின்னர நாட்டில்) 1948-ல் நான் சுற்றிக் கொண்டி ருந்தேன். மூன்று நான்கு மாதங்களுக்கொரு முறை நான் முடிவெட்டிக் கொள்ள வேண்டும். ஊர்சுற்றி முடியையும் தாடியையும் வளர்த்துக் கொண்டிருந்தாலும் பரவாயில்லை. ஆனால் நான் அதை விரும்புவ தில்லை. அதனால் மூன்று, நான்கு மாதங்களுக்கு ஒருமுறை முடிவெட்டிக் கொள்வது அவசியம். "சினி"யில் ( கின்னர நாட்டில்) நான் முடி வெட்டிக் கொள்ள நேர்ந்தது. அங்கிருந்த நடுநிலைப் பள்ளியின் தலைமையாசிரியர் முடி வெட்டும் கருவிகளை வைத்திருப்ப தாகவும், அவரே நன்றாக முடிவெட்டுவதாகவும் தெரிய வந்தது. அந்தத் தலைமையாசிரியர் தானே முடி வெட்டி விடுவார்; ஆனால் கருவிகளை மட்டும் வேறு யார் கைகளிலும் தர மாட்டாரென்றும் தெரிந்தது. தலைமையாசிரியர் கருவிகளை மற்றவர் கைகளில் தராததற்குக் காரணம் அவர்கள் கருவிகளைச் சரியாகப் பயன்படுத்தாமல் அவற்றைப் பாழடித்து விடுவார்கள் என்ற அச்சமே! அவரே வந்து எனது தலைமுடியை வெட்டிவிட்டார். நமக்காக என்றால் முடி வெட்டும் மிஷின் ஒன்றே போதுமானது. ஆனால் சிகையலங்கரிக்கும் தொழிலால் தற்காலிகத் தன்னிறைவு அடைய வேண்டுமென்றால், அரைகுறையாக ஷேவிங் செய்யக் கற்றுக் கொண்டுவிட்டால் மட்டும் போதாது. நீங்கள் அந்தக் கலையில் நல்ல தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும்; சினியிலிருந்த தலைமையாசிரியரும், அவருடைய சுமார் ஒரு டஜன் சீடர்களும் தேர்ச்சி பெற்றிருப்பதைப் போல! சிகை அலங்கரிக்கும் தொழில் அப்படியொன்றும் குறைந்தகூலி கிடைக்கும் தொழிலல்ல. ஐரோப்பிய நாடுகளிலுள்ள ஒரு நாவிதன் ஒரு பேராசிரியரின் வருவாயைப் பெறுகிறான். ஆசியாவின் பல பகுதி களிலும் கூட ஒருவர் அல்லது இருவருக்கு முடி வெட்டிய வருவாயுடன், நாலைந்து நாட்களைக் கழித்துவிடலாம். பிளேடினால் ஷேவிங்கும், மிஷினால் முடிவெட்டுவதுடன் இந்தக் கலையில் சிறந்த தேர்ச்சி பெறவேண்டுமென்று நான் வருங்கால ஊர்சுற்றி வாலிபர்களுக்குக் கூறுவேன். இந்தக் கலையை உயர்நிலைப் பள்ளியில் படிக்கும் போதே, இறுதி இரண்டாண்டுகளில் கற்கலாம், கல்லூரிப் படிப்பின் போது நல்ல தேர்ச்சியும் பெறலாம்.

ஊர்சுற்றி வாலிபர்களுக்கு முடி வெட்டும் கலை பயன் தருவதைப் போல, அழகுபடுத்தும் கலை ஊர்சுற்றி யுவதிகளுக்கு நல்ல பயனளிக்கும். தமது ஓய்வு நேரங்களில் அவர்கள் இதை நன்கு கற்றுக் கொள்ளலாம். உலகத்தின் எல்லா நாடுகளிலுமே அழகுக்கலை ஊர் சுற்றும் யுவதிகளுக்கு உதவிகரமாக இருக்கும். அவர்களுக்கு அந்தக் கலை தேவையாயில்லாவிட்டாலும், மற்றவர்களுக்கு அது தேவைப் படுகிறது. அழகுக் கலை நன்றாகத் தெரிந்த ஊர்சுற்றி யுவதிகள்,

ஆங்காங்கு தற்காலிகமாக வாழ்வதற்கான வருவாயைப் பெறமுடியும். சிகையலங்கரிக்கும் கருவிகளைச் சுலபமாக எடுத்துச் செல்ல முடிவதைப் போல, அழகுச் சாதனங்களையும் ஒரு சில சீசாக்களையும் சுலபமாக எடுத்துச் செல்ல முடியும். ஆனால் ஒவ்வொரு ஊர்சுற்றியும் ஒவ்வொரு தொழிலையோ, கலையையோ, கற்றுக்கொள்ள முடியு மென்பது இதன் பொருளல்ல, ஒரு கலையைக் கற்றுக் கொள்ள உழைப்பும் ஆர்வமும் அவசியமாகும். உழைப்போடும் ஆர்வத்தோடும் இயற்கையான திறமையும் இருந்தால் தான், ஒரு கலையில் தேர்ச்சி யடையமுடியும். ஆகவே வலுக்கட்டாயமாக எந்தக் கலையையுமே கற்க இயலாது. ஒரு கலை நமக்கு வரவில்லை என்றால், மற்றொரு கலையை முயற்சி செய்ய வேண்டும்.

எழுத்துக்களும் மொழிகளும் தேவையில்லாத பல கலைகளும் தொழில்களும், ஊர்சுற்றிக்கு உலகத்தின் ஒவ்வொரு பகுதியிலும் பயன்படக்கூடும். அவற்றின் உதவிகொண்டு, சீனத்திலும், ஜப்பானிலும், அரேபியாவிலும், துருக்கியிலும், பிரேசிலிலும், அர்ஜென்டினாவிலும் சுலபமாகச் சுற்றித் திரியலாம். தச்சு வேலையையும், இரும்புத் தொழிலையும், நகைத் தொழிலையும் எடுத்துக் கொள்ளலாம். இன்னும் நம் நாட்டில் ஒரு பட்டதாரி குமாஸ்தாவை விட, ஒரு தச்சுத் தொழிலாளி குறைந்த வருவாயைப் பெறவில்லை அத்துடன் தச்சுத் தொழிலாளிக்கு எங்கேயும் வேலை கிடைக்கும். தச்சுத் தொழிலாளிக்கு உலகத்தின் எந்த நகரத்தில், கிராமத்தில் வேலை கிடைக்காது? நீங்கள் கொரியா நாட்டின் ஒரு கிராமத்துக்குப் போகிறீர்கள் என்று வைத்துக் கொள்வோம். அங்குள்ள ஒரு விவசாயியின் வீட்டில் அன்று மாலை நீங்கள் விருந்தினர். மறுநாள் காலை அந்த விவசாயியின் வீட்டின் பாழடைந்த ஒரு பகுதியை நீங்கள் மராமத்து செய்கிறீர்கள். அதைக் கண்டு விவசாயி சங்கோஜத்துடனே பழுதடைந்த பல சாமான்களை ரிப்பேருக்காக உங்கள் முன் வைக்கிறார். நீங்களே கூட நினைவுச் சின்னமாக ஒரு புதிய பொருளைத் தயார் செய்து விவசாயிக்குத் தரலாம். இதனால் அந்த விவசாயியுடன் மட்டுமே உங்களுடைய அறிமுகம் நிற்காது. கிராமத்திலுள்ள அனைத்து விவசாயிகளுமே உங்கள் அறிமுகம் நாடுவார்கள். இதன் பிறகு நீங்கள் நான்கைந்து மாதங்கள் அங்கே தங்க விரும்பினாலும், ஆட்சேபணை இருக்காது. கிராமத்தினர் அனைவருமே உங்களுக்கு நெருக்கமானவர்களாகி விடுகிறார்கள். ஊர் சுற்றி வெறும் கூலிக்காக மட்டுமே வேலை செய்ய மாட்டான். அவன் நன்றாகவும், அதிகமாகவும் கூட வேலை செய்வான். ஆனால் தனக்குத் தேவையான அளவுக்குக் குறைந்த பிரதிபலனையே வாங்கிக்கொள்வான். தச்சு வேலை, இரும்புத் தொழில், நகைத் தொழில், தையல், ஆடை வெளுத்தல் ஆகியவை மிகவும் பயனுள்ளவையாகும்.

கடிகார ரிப்பேர், இயந்திர ரிப்பேர் முதலிய தொழில்கள், நாகரிக நாடுகள் அனைத்திலுமே நல்ல மதிப்புடையவையாகும். இவற்றை வாலிபர்கள் உயர்நிலைப் பள்ளி இறுதியாண்டுகளிலும், கல்லூரியிலும் கற்றுக்கொள்ளலாம். தான் கற்ற கலைகளும், தொழில்களும் காலத்தில் பயன்படும் என்பதை ஊர்சுற்றி நினைவிலிருத்திக் கொள்ளவேண்டும். அவனுடைய பொதியில் எல்லாவிதமான அம்புகளுமே இருக்க வேண்டும். எந்தச் சமயத்தில் எந்த அம்பு தேவைப்படுமோ, யாருக்குத் தெரியும்? ஆனால் உலகத்திலுள்ள கலைகளையெல்லாம் தொழில் களையெல்லாம் கற்றுக்கொள்ளவே, அவன் தன் வாழ்க்கையில் பாதியைக் கழித்துவிடவேண்டுமென்பதல்ல. இங்குக் குறிப்பிடப்படும் கலைகளையும் தொழில்களையும் இயற்கையான திறமை படைத்த வர்கள் சுலபமாகக் கற்றுக் கொள்ளலாம்.

புகைப்படக் கலையும் ஊர் சுற்றிக்குப் பயனுள்ளதாக இருக்கும். உயர்தரமான ஊர் சுற்றி உலகத்தின் முன்னே எழுத்தாளனாகவும், கவிஞனாகவும், ஓவியனாகவும் தோன்றுகிறான் என்பதை மேலே சொல்லப் போகிறோம். ஊர்சுற்றி எழுத்தாளனாகி, சிறந்த பயண இலக்கியத்தைப் படைக்க முடியும். பயண நூல் எழுதும் போது அவனுக்குப் புகைப்படங்களும், சித்திரங்களும் தேவைப்படும். ஊர் சுற்றி, தான் பார்த்த காட்சிகளையும், நிகழ்ச்சிகளையும், வருங்கால ஊர் சுற்றிகளின் உபயோகத்திற்காக எழுதிவைக்க வேண்டும். நாம் நமது ஊர்சுற்றி முன்னோர்களின் எழுத்துக்களால் எவ்வளவோ பயனடைந் திருக்கிறோம். அதே போல் நாமும் நமது அனுபவங்களுக்கு எழுத்து வடிவம் கொடுத்து, வருங்காலச் சந்ததியினருக்குப் பயன்பட வேண்டும். பயண வரலாறு எழுதுவோருக்கு பேனா, காகிதத்தைப் போல் புகைப்படக் கேமிராவும் அவசியமாகும். படங்களுடன் கூடிய பயண வரலாறு பயனுடையதாக இருக்கும். புகைப்படக் கலையைக் கற்றிராத ஊர்சுற்றிகளை, அவர்கள் செய்யும் பயணங்களே அதைக் கற்றுக் கொள்ளக் கட்டாயப்படுத்தும். இதற்கு எடுத்துக்காட்டாக நானே இருக்கிறேன். சுற்றுப் பிரயாணம் என்னை எழுதத் தூண்டியது என்று சொல்வதில் கருத்து வேற்றுமை இருந்தாலும் அதுவே என்னை கேமரா வைத்துக்கொள்ளத் தூண்டியது என்பதில் ஐயமில்லை. புகைப் படத்துடன் கூடிய பயண வர்ணனை சிறப்பாக இருக்கும். நீங்கள் பார்த்த காட்சிகளைப் படங்களின் மூலமாக உங்கள் வாசகர்களுக்குக் காட்டலாம். அத்துடன் பத்திரிகைகளிலும், புத்தகப் பக்கங்களிலும் உங்கள் காலத்திய பிரமுகர்களையும், பொருட்களையும், கட்டடங் களையும், இயற்கைக் காட்சிகளையும், நிகழ்ச்சிகளையும் புகைப்படங் களின் வாயிலாக நிரந்தரமாக்கி விடலாம். புகைப்படமும், எழுது கோலும் உங்கள் எழுத்துக்களுக்கு அதிக வருவாயும் தேடித் தரலாம்.

கல்வியும், பொருளாதார நிலையும் மேம்பட மேம்பட, பத்திரிகை களின் விநியோகமும் அதிகமாகத்தான் செய்யும். அப்பொழுது அதனை அனுசரித்துக் கட்டுரைகளுக்குக் கிடைக்கும் ஊதியமும் அதிகமாகத் தான் இருக்கும். அந்தக் காலத்தில் மாதத்தில் ஓரிரண்டு கட்டுரைகள் எழுதினாலும் போதும், இந்திய ஊர்சுற்றி எழுத்தாளனுக்கு நல்ல வருவாய் கிடைக்கும். நீங்கள் உங்களுடன் புகைப்படத்தைக் கழுவும் பொருட்களையும் எடுத்துச்சென்றால் தடங்களிலின்றி உங்கள் பயணத்தைத் தொடரலாம். எல்லா இடங்களிலும் புகைப்படத்தின் மொழி ஒன்றே ஒன்றுதான்! ஆகவே அது எங்கேயுமே பயன் விளைக்கும்.

தன்னிறைவு ஏற்படுத்தும் கலைகளைப் பற்றியும், தொழில்களைப் பற்றியும் இங்கே விரிவாகச் சொல்ல இயலாது. கிராமங்களிலும், நகரங்களிலும் எந்தத் தொழில்களுக்கு நல்ல கிராக்கி இருக்கிறதோ, அவற்றைப்பற்றிக் கொஞ்சம் விவரித்தோம். அவற்றைச் சுலபமாகக் கூடக் கற்றுக்கொள்ள முடியும். ஊர் சுற்றி ஜோதிடத்தையும், கைரேகையையும் கற்றுக்கொள்ள வேண்டுமென்றும் சிலர் சொல்லக் கூடும். மக்களில் பெரும் பகுதியினர் இவற்றை நம்புகின்றனர் என்பது உண்மைதான். ஆனால் மக்களின் இந்தப் பலவீனத்தைப் பயன்படுத்திக் கொள்வது, ஊர் சுற்றிக்குப் பெருமையளிப்பதல்ல என்பதே என் கருத்து. ஏமாற்று வேலை ஊர்சுற்றி அறத்துக்கு எதிரிடையானது. ஆகவே அவன் ஏமாற்றுக்காரனாக மாறக்கூடாது. மனித சமுதாயத்தைப் பலாத்காரமாக ஏழை- பணக்காரர்களாகப் பிரித்துவைத்துள்ள பல நாடுகளிலும், மக்களின் எதிர்காலம் நிச்சயமற்றதாக இருக்கிறது. ஆகவே பாவம், லட்சட்சணக்கானவர்கள் ஆரூடத்திலும் ஜோதிடத் திலும் நம்பிக்கை கொள்கிறார்கள். ஐரோப்பாவிலுள்ள முன்னேற்ற மடைந்த நாடுகளிலும் கூட ஜோதிடர்களுக்கும், கைரேகை பார்க்கிறவர்களுக்கும் நல்ல கிராக்கி இருக்கிறது. ஊர்சுற்றி மாஜிக்கையும், வசீகர சக்தியையும் கற்றுக்கொண்டால், அவற்றால் மக்களுக்கு உதவியும் செய்யலாம். அவர்களுக்குப் பொழுது போக்காகவும் பயன்படுத்தலாம். இதனால் ஊர்சுற்றி மற்றவர்களைச் சார்ந்து நிற்காமல், தன்னிறைவு அடைவதில் உதவிகரமாக இருக்கும்.

கடைசியாக, ஊர்சுற்றிக்கு மிகவும் பயனுள்ள ஒரு கலையைப் பற்றிக் கூற விரும்புகிறேன். அது முதலுதவிச் சிகிச்சையாகும். ஒவ்வொரு ஊர்சுற்றிக்கும் இது அவசியம் தெரிந்திருக்க வேண்டும். காயம் பட்டால் எந்த மருந்துகளைப் போட்டு, எப்படிக் கட்டுப்போட வேண்டுமென்பதைக் கற்றுக்கொள்ள மிகவும் சிரமப்படத் தேவை யில்லை. சாதாரண வியாதிகளுக்கான சிகிச்சையைக்கூட ஓரிரண்டு

புத்தகங்களைப் படித்தோ அல்லது ஒரு வைத்தியரிடம் கொஞ்சம் பயிற்சி பெற்றோ தெரிந்துகொள்ளலாம். சாதாரண ஆபரேஷனையும், ஊசி போடுவதையும்கூடச் சுலபமாகக் கற்றுக் கொள்ளலாம். சமயத்தில் மனிதனைச் சாவிலிருந்து காப்பாற்ற வல்ல 'பெனிசிலின்' போன்ற சில மருந்துகளும் வந்துவிட்டன. இவற்றைத் தெரிந்து கொள்ளவும் நீண்ட காலம் தேவையில்லை. ஊர்சுற்றிக்கு இப்படிக் கொஞ்சம் மருத்துவம் தெரிந்திருப்பது மிகவும் அவசியம். அரைக் கிலோ நிறையுள்ள சிகிச்சைப் பொருட்களை எடுத்துச் செல்வதும் பெரிய காரியமல்ல. டாக்டர்களும், ஆஸ்பத்திரியும் இல்லாத தூரப் பிரதேசங்களில் நோய்வாய்ப்பட்ட மனிதனின் பரிதாப நிலையைக் கண்டு, ஊர்சுற்றி, தான் ஏன் மருத்துவம் கற்றுக்கொள்ளவில்லை என்று பச்சாதாபப்படுவதுண்டு. ஊர்சுற்றியிடமிருந்தும் நோயாளி அனுதாபத்தையும் ஆதரவையும் எதிர்பார்க்கிறான். அவனுடைய நிலையைக் கண்டு ஊர்சுற்றியின் உள்ளமும் கரைந்துவிடுகிறது. ஆனால் எளிய சிகிச்சை கூடத் தெரியாவிட்டால் மிக அதிக வேதனை உண்டாகும். ஆகவே மற்றவர்களுக்கு உதவி செய்வதற்காக இல்லாவிட்டாலும், தன் உள்ளத்தின் நிம்மதிக்காகவாவது, ஊர்சுற்றி சாதாரண சிகிச்சை முறைகளைத் தெரிந்துகொண்டிருக்க வேண்டும்.

# 5. சிற்பமும் கலையும்

ஊர்சுற்றி மற்றவர்களுக்குச் சுமையாக இல்லாமல் தன்னிறைவுடன் விளங்கத் தேவையான சில விஷயங்களை எடுத்துச் சொன்னோம். முடிவெட்டுதல், புகைப்படக் கலை, உடலுழைப்பு ஆகியவை மிகவும் பயனுனள்ளவை என்பதில் ஐயமில்லை. ஆனால் இவையெல்லாம் ஊர் சுற்றியின் புறப்பயணத்திற்குத்தான் உதவிகரமாக இருக்கும். இவற்றின் உதவியினால் அவன் உயர்ந்த நிலையை அடைய முடியாது. சமுதாயத்தின் எல்லா வர்க்கத்துடனும் இரண்டறக் கலக்கமுடியாது. ஊர்சுற்றி நுண்கலைகளைக் கற்றுத் தேர்ந்திருந்தால், தன் படைப்பு களை மக்கள் முன்வைக்கும் நல்வாய்ப்பு அவனுக்குக் கிட்டும். ஆனால் நுண்கலைகளை வெறும் உழைப்பினால் மட்டும் கற்க இயலாது. அவற்றைக் கற்க இயற்கையான ஆர்வம் இருக்க வேண்டும். மென்கலை களில் நாட்டியமும் வாத்திய இசையும், வாய்ப்பாட்டும் இயற்கை ஆர்வம் இருந்தால் மட்டுமே கைவரக்கூடியவை. நாட்டியத்தைவிட வாய்ப்பாட்டு கடினமானது. வாய்ப்பாட்டிலும், வாத்திய இசையிலும் எது அதிகக் கடினமானதென்பதை விஷயமறிந்தவர்கள்தான் கூற வேண்டும். இம்மூன்றையும் கற்க எவ்வளவு காலம் பிடிக்கும் என்பதும், எப்படி உழைக்க வேண்டுமென்பதும் எனக்குத் தெரியாது. ஆனால் ஒரு புதிய நாட்டிற்குச் சென்ற பிறகு, அங்கு இக்கலைகளின் உபயோகம் தெளிவாகத் தெரிகிறது. ஊர் சுற்றவேண்டுமென்ற விரதம் கொண்டவன், கடினமான பாதைகளைக் கடந்து புதிய புதிய இடங்களுக்குப் போக விரும்புபவன், ஒரு நாட்டியக் குழுவைத் தன்னுடன் அழைத்துக் கொண்டு வெற்றி வாகை சூடப் புறப்படுவான் என்று நாம் எதிர்பார்க்கவில்லை. உண்மையில், "சிங்கங்கள் கூட்டமாக இருப்பதில்லை" என்பதைப் போலவே, ஊர் சுற்றிகளும் கூட்டமாகத் திரிந்துகொண்டிருக்க மாட்டார்கள். ஒரோர் சமயத்தில் ஊர்சுற்றிகள் இருவரோ, மூவரோ ஒன்றாகக்கூடிச் சில நாட்கள் திரிந்தாலும், கடைசியில் ஒவ்வொருவரும் தமது பயணத்தைத் தனியாகவே முடிக்க வேண்டியதிருக்கிறது. ஆனால் யுவதிகள் மட்டும் மூன்று, மூன்று

பேராகக் கலந்தே சுற்றுப் பயணம் செய்ய வேண்டும். ஊர் சுற்றி யுவதிகளைக் குறித்துப் பின்னால் விவரமாகக் கூறுகிறேன். அவர்கள் தன்னம்பிக்கையை வளர்க்கவும், ஆண்களின் அக்கிரமங்களிலிருந்து தம்மைக் காத்துக்கொள்ளவும் யுவதிகள் குழுக்களாகவே திரிய வேண்டும்.

நாட்டியத்தில் பல ரகங்கள் இருக்கின்றன. எனக்கு எல்லாவற்றின் பெயர்களும் தெரியாது. சாதாரணமாக ஒவ்வொரு நாட்டின் நடனமும் கிராமிய நடனமாகவும் சாஸ்திரீய நடனமாகவும் (கிளாஸிகல்) உள்ளது. சாதாரண உடற்பயிற்சி நமது மனத்தை வாட்டி வதைக்கிறது. ஆனால் நடனமாடும்போது நம் மனத்திற்கு எந்த விதமான சிரமமும் இல்லை. நடனமாடும்போது நாம் உடற்பயிற்சியும் செய்கிறோம் என்ற விஷயமே நமக்குத் தெரிவதில்லை. உடலைச் சுறுசுறுப்பாக வைத்திருக்க பழங்கால மனிதன் நடனத்தைக் கண்டுபிடித்தான், நடனத்தின் பயனையும் அவன் புரிந்து கொண்டான். நடனம் உடம்பைத் திடமாகவும் சுறுசுறுப்பாகவும் வைத்திருப்பதோடு, அங்கங்களையும் அழகாகவும், எடுப்பாகவும் உருவாக்குகிறது. ஊர் சுற்றிகள் மட்டுமல்ல, மற்றவர்களும்கூட நடனத்தைப் பற்றிய விஷயங் களைத் தெரிந்திருக்க வேண்டும். நமது நாட்டில் கடந்த ஏழெட்டு நூற்றாண்டுகளாக நடனக் கலையைத் தாழ்வானதாகக் கருதினார்கள். இது வருந்ததக்க விஷயமாகும். உயர் வர்க்கத்தினர் என்று சொல்லப் படுபவர்கள், இந்தக் கலையைக் கீழ்த்தரமான கலையாகக் கருதி விட்டு விட்டனர். கிராமங்களில் உள்ள விவசாயத் தொழிலாளர்களும், மற்ற ஏழைக் கூலிகளும் கிராமிய நடனங்களைத் தம்மிடையே பாதுகாத்து வந்தனர். ஆனால் அவர்களும் கல்வி வாசனை பெறப்பெற ‘மேல் தனக்காரர்களைக் ‘காப்பி அடித்துக் கிராமிய நடனத்தை மறக்கத் தொடங்கினர். சென்ற முப்பதாண்டுகளில் ‘ஃபரீ’ (இடையர்கள்) நடனம் உத்தரப்பிரதேஷ் பீகார் மாநிலங்களில் பல மாவட்டங்களில் மறைந்து போய் விட்டது. அந்தக் காலத்தில் மணமக்களின் உறவினர் களும், தாயார்களும் மாமியார்களும் பங்குகொண்ட கிராமிய நடனமில்லாமல், இடையர்களின் திருமணங்களே நடக்காது, நான் சோவியத் யூனியனில் இருந்தபோது, அவர்களின் சிரமம் மிகுந்த நடனத்தைக் கண்டதும், எனக்கு நம் நாட்டு இடையர்களின் நடனம் நினைவுக்கு வந்தது. 1939-ல் இடையர் நடனம் பார்க்க விரும்பிய போது, வெகு சிரமத்தின் பேரில் கோரக்பூர் மாவட்டத்தில் ஒரு கிராமத்தில் பார்க்க முடிந்தது. சிறுவயதில் கண்டு களித்த நடனத்தைப் போலவே, இப்போது பார்த்த நடனமும் அற்புதமாகவே விளங்கியது. ஆனால் இப்படிப்பட்ட அழகான நடனம் இத்தனை விரைவாக

அழிந்துகொண்டிருக்கிறதே என்று வருந்தினேன். அதன் பிறகு இந்தக் கிராமிய நடனத்தை வளர்க்கக் கொஞ்சம் முயற்சியும் செய்தேன். ஆனால் அதை நானே கற்றுக்கொள்ளும் பருவம் கடந்து விட்டது. அந்த நடனத்தின் வளர்ச்சிக்கு உழைக்கக்கூடிய நேரம்கூட என்னிடம் இல்லாமற் போய்விட்டது.

இடையர் நடனம், தவிர, நம் நாட்டின் பல பிரதேசங்களிலும் பல விதமான அழகிய நடனங்கள் வழக்கத்தில் இருக்கின்றன. சென்ற முப்பதாண்டுகளாக நம் நாட்டில் இசையையும் நடனத்தையும் உயிர்ப்பிக்க முயற்சி செய்யப்பட்டு வருகிறது. கண்ணியமான பெண் களுக்கு இசையும் நடனமும் கூடாது என்ற நிலை மறைந்து, அப்படிப் பட்ட குடும்பங்களிலிருந்து வந்த மாணவிகளுக்கும் இன்று இசையும், நடனமும் பள்ளிகளிலேயே கற்பிக்கப்படுகின்றன. ஆனால் இன்றும் நாம் மேல்தட்டு மக்களுக்கு இசைவான சாஸ்திரீய சங்கீதத்தின் வளர்ச்சியிலும், சாஸ்திரீய நடனத்தின் வளர்ச்சியிலும் கவனம் செலுத்திக் கொண்டிருக்கிறாமே தவிர, சாதாரண மக்கள் கலை களைப் புறக்கணித்துத்தான் வருகிறோம். உண்மையில் மக்கள் கலை புறக்கணிக்கத் தக்கதல்ல. மக்கள் கலையின் தொடர்பில்லையேல், சாஸ்திரீய சங்கீதமும், நடனமும் ஜீவனற்றதாகிவிடும். மக்கள் கலையின்பாலுள்ள உதாசீன மனோபாவம் மறைந்து, அது ஊக்குவிக்கப்படுமென்று நம்புவோமாக! ஊர்சுற்றி ஏதாவதொன்றை மட்டுமே கற்க வேண்டுமென்று கூறமாட்டேன். என்னைக் கேட்டால் மக்கள் இசை, மக்கள் நடனம், மக்கள் வாத்தியம் எல்லாவற்றையுமே ஊர்சுற்றி கற்றுத் தேறவேண்டுமென்று கூறுவேன். அதன் பிறகு சாஸ்திரீய கலைகளையும் பயில வேண்டும்.

ஊர்சுற்றி வாழ்க்கைக்குச் சில எல்லைகள் இருக்கின்றன. இதனாலேயே நான் மக்கள் கலைகளுக்கு முக்கியத்துவம் தருகிறேன், உயர்தர ஊர்சுற்றி அரை டஜன் சூட்கேஸ்களையும், பெட்டி படுக்கை களையும் சுமந்து திரிந்துகொண்டிருக்க மாட்டான். தான் சுயமாகச் சுமந்து செல்லக்கூடிய அளவுக்கே அவனிடம் சாமான்கள் இருக்க வேண்டும். ஊர் சுற்றி, ஸிதார், வீணை, பியானோ போன்ற பெரிய வாத்தியங்களை மட்டுமே இசைக்கக் கற்றிருந்தால், அவைகளைச் சுமந்து செல்வது கடினமாகிவிடும். அவன் புல்லாங்குழலை எங்கே வேண்டுமானாலும் கஷ்டமில்லாமல் சுலபமாகக் கொண்டு போகலாம். அவசியம் ஏற்பட்டால் ஒரு சாதாரண மூங்கிலில் துளை போட்டு, புல்லாங்குழலைத் தயார் செய்து கொள்ளலாம். ஊர் சுற்றிக்குப் புல்லாங்குழலே சிறந்த வாத்தியமாக விளங்கும். அது எவ்வளவு

சாதாரணமானது, பளுவில்லாதது, மலிவானது! அத்துடன் எத்தனை உபயோககரமானது! சிறந்த முறையில் புல்லாங்குழலை வாசிக்கும் ஒருவன் தன் நாட்டின் மக்கள் கலையையும், சாஸ்திரீய கலையையும் புல்லாங்குழலில் வாசிக்க முடிவதைப் போலப் புல்லாங்குழலை இசைக்கும் கை தேர்ந்த ஒருவன் ஒரு நாட்டின் பாடல்களையும் (நடனங்களையும்) தன் குழலில் இசைத்துக்காட்ட முடியும். கண்ணனின் குழலின் பெருமையை நாம் கேட்டிருக்கிறோம். நான் அப்படிப்பட்ட பெருமையைப் புகழத் தயாரில்லை. நான் இங்கு ஊர்சுற்றியின் கண்ணோட்டத்திலிருந்து குழலின் முக்கியத்துவத்தை எடுத்துக்கூற விரும்புகிறேன். ஒரு ராகத்தை இசைக்கக் கூடக் குழலில் நல்ல தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும். புல்லாங்குழலில் பாடல்களை இசைக்கச் சுலபமாகக் கற்றுக் கொள்ளலாம். நமது ஒரு ஊர்சுற்றி புல்லாங்குழல் வாசிப்பதில் சிறந்தவன் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவன் கிழக்குத் திபேத்திலுள்ள 'கம்'பிரதேசத்துக்குப் போகிறான். அவனுக்குத் திபேத்திய மொழியில் ஒரு சொல் கூட வராது. அந்தப் பிரதேசத்தின் பல பகுதிகளில் மலைகள் காடுகள் சூழ்ந்திருக்கின்றன. இமயமலைச் சாரலில் வாழும் பெண்களைப் போலவே, அங்குள்ள மங்கையரும் புல்லுக்காகவும், விறகுக்காகவும், மாடு மேய்க்கவும் காடுகளுக்குச் சென்றால், மூச்சைப் போலவே இசையையும் நிரந்தரம் பயன்படுத்து கிறார்கள். நமது இளம் ஊர்சுற்றி அந்தச் சமயத்தில் அந்தக்காட்டில் போய்க்கொண்டிருப்பவன் குயிலைப் போன்ற குரலுடைய பெண்ணொருத்தியின் பாட்டைக் கவனமாகக் கேட்கிறான். பக்கத்தில் சட்டைப் பையில் இருக்கும் புல்லாங்குழலை நிதானமாக வெளியில் எடுக்கிறான். குழலை வாயில் பொருத்தி மெல்ல மெல்ல அப்பெண்ணின் பாட்டை இசைக்க முயற்சிக்கிறான். சற்றைக்கெல்லாம் நன்றாகவே இசைக்கவாரம்பித்து விடுகிறான். நாட்டுப் பாடல்களின் ராகங்கள் மிக எளிமையாக இருக்கும். ஆனால் அவற்றில் இனிமை குறைவென்று இதற்கு அர்த்தமல்ல. நமது இளம் ஊர்சுற்றி பத்து நிமிடச் சிரமத் திற்குப் பின், அங்குள்ள ஒரு தேவதாரு மரநிழலில் அமர்ந்து, அந்தப்பெண்ணின் இனிய பாடலைக் குழலில் வடிக்கத் தொடங்கி விடுகிறான். குழலின் இசை அக்கம் பக்கத்திலுள்ள மற்றப் பெண் களையும் தன்னருகே இழுக்குமென்பதில் சந்தேகமில்லை. நமது ஊர்சுற்றி இளைஞன் தானாக எவரையும் அறிமுகம் செய்து கொள்ளவேண்டிய அவசியமே இல்லை. பாடிய அப்பெண்ணும், அவளுடைய மற்ற அழகிய தோழிகளும் தேனினுமினிய புல்லாங் குழலின் இசையைக் கேட்டுக் கேட்டு யமுனைக் கரையில் பிருந்தா வனத்துக்கோபியரைப் போல் மெய்மறந்துவிடுவார்கள். நமது

ஊர்சுற்றிக்கு அவர்களின் 'கம்பா' மொழி தெரியாது. இவனுடைய உருவம் மங்கோலியனைப் போலில்லாததால், இவன் யாரோ ஒரு அந்நிய நாட்டுக்காரன் என்பதை அவ்வழகி புரிந்து கொண்டுவிடுவாள். ஆனால் அவன் குழலில் இசைக்கும் ராகம் அந்நியமானதல்ல. இப்பொழுது மொழித் தடங்கல் மறைந்து போய்விடுகிறது. நமது ஊர்சுற்றி அவர்களுக்கு மிக நெருங்கியவனாகி விடுகிறான். சாடை களாலேயே அவள் எல்லா விஷயங்களையும் புரிந்து கொள்வாள். இந்தத் திக்கற்ற பரதேசியை அங்கே தனியாக விட்டுச் செல்லக் கூடாதென்று அவளே முடிவு செய்து கொள்வாள். மேலும் இரண்டொரு ராகங்களைக் கற்றுக் கொண்டால் போதும், அவன் அந்தத் திபேத்திய நாட்டிலும் இந்தியாவின் ஒரு பகுதியில் இருப்பதைப் போலவே உணர்வான். வீணையையும், ஸிதாரையும் போன்ற பெரிய வாத்தியங்களையும் நமது ஊர்சுற்றி இசைத்து அங்குள்ள மக்களைக் கவரலாம். ஆனால் அவன் அவற்றைப் புல்லாங்குழலைப்போல் அவ்வளவு தூரம் சுலபமாகக் கொண்டுபோக முடியுமா? அதனால் தான் குழலை நான் ஊர்சுற்றியின் சிறந்த வாத்தியமென்று கூறுகிறேன்.

இசையில் இயற்கையான ஆர்வம் உள்ளவனால் மட்டுமே புல்லாங்குழலோ அல்லது வேறு எந்த வாத்தியமோ இசைக்கக் கற்றுக் கொள்ள முடியும். நான் ஒரு பன்னிரண்டு, பதின்மூன்று வயதுடைய பையனை அறிவேன். அவனுக்குப் புல்லாங்குழலை வாசிப்பதில் அலாதிப் பிரியம். விளையாட்டாகவே அவன் குழலை வாசிக்கக் கற்றுக்கொண்டுவிட்டான். எந்த ஒரு குருவிடமும் போய்க் கற்றுக் கொள்ளவில்லை. யார் பாடக்கேட்டாலும், அதை அப்படியே குழலில் வாசிக்க முயற்சி செய்வான். இப்படிப் பயிற்சி செய்தே அவன் பன்னிரண்டு, பதின்மூன்று வயதிலேயே குழல் வாசிப்பில் தேர்ந்து விட்டான். இயற்கையான ஆர்வமுள்ளவர்கள் குழலைக் கற்றுக் கொள்ளலாம். மற்ற வாத்தியங்களில் விருப்பமுள்ளவர்கள் அவை களைத் தொடக்கூடாதென்பது இதன் பொருளல்ல. ஒவ்வொருவரும் புல்லாங்குழலை அவசியம் கற்க வேண்டும். அதன் பிறகு மற்ற இசைக் கருவிகளையும் கற்கலாம். வாய்ப்பு கிடைத்தால் ஒன்றிரண்டு அயல் நாட்டு வாத்தியங்களையும் கற்றுக் கொள்வது சிறப்பாக இருக்கும். முதல் முறையாக நான் ஐரோப்பாவுக்குக் கப்பலில் சென்றுகொண்டி ருந்தேன். அதில் ஐரோப்பிய ஆண், பெண்களும் அதிகமாகவே பயணம் செய்துகொண்டிருந்தனர். ஒவ்வொரு மாலையும் கப்பலில் கூட்டு நாட்டியமும் நடந்து கொண்டிருந்தது. பெரும்பாலும் அவர்கள் 'கிராம ஃபோன்' இசைத்தட்டுக்களைப் பயன்படுத்திக் கொண்டி ருந்தனர். என்னுடைய இந்திய நண்பரொருவரும், அதிலே பிரயாணம்

செய்துகொண்டிருந்தார், அவர் இந்திய வாத்தியங்களுடன் பியானோவும் வாசிக்கத் தெரிந்திருந்தார். ஐரோப்பியர் அவரை அழைத்து வந்து பியானோவை வாசிக்கச் செய்தனர். இரண்டு நாட்களுக்குள்ளாகவே அவர், அனைத்து வாலிபர்களுக்கும் யுவதிகளுக்கும் நெருங்கிய நண்பராகிவிட்டார். கப்பலில் நிகழ்ந்ததைப் போலவே, அவர் ஐரோப்பாவில் எந்த ஒரு கிராமத்துக்குச் சென்றாலும் இதுவே நடக்கும்.

வாத்தியத்தைப் போலவே, நடனமும் நமக்கு மற்றவர்களை நண்பர்களாக்கி விடுகிறது. ஒரு நாட்டின் பலதரப்பட்ட நடனங்களை அறிந்தவன், அவனுள் ஆர்வம் இருந்தால், வெளிநாட்டு நடனத்தையும் எளிதாகக் கற்றுக்கொண்டுவிடுவான். அவன் மற்றவர்களுடன் நடனத்தில் பங்கேற்றால் சொல்லவும் வேண்டுமா? நடனமோ, வாத்தியமோ, இசையோ ஒன்றுமே வரப்பெறாத நான் அதிர்ஷ்டக் கட்டை என்றே நினைக்கிறேன். இளமையிலேயே முயற்சித்திருந் தாலும் அவற்றைக் கற்றுக் கொண்டிருப்பேனோ என்பது சந்தேகந் தான்! நடனமோ, வாத்தியமோ, இசையோ கற்காமல் ஊர்சுற்றி வெற்றி பெற முடியாதென்று நான் கூறவில்லை. உழைப்பு ஒன்றினால் மட்டுமே மனிதன் இவற்றையெல்லாம் கற்க இயலுமென்றும் நான் சொல்லவில்லை. ஆனால் இந்த நுண்கலைகளின் பயன் கருதியே வருங்கால ஊர்சுற்றிகளுக்கு இவற்றைக் கற்றுக்கொள்ளுங்களென்று சிபாரிசு செய்கிறேன்.

வாத்தியம், வாய்ப்பாட்டை விடவும் நடனம் சற்றுச் சுலபம் போல் தோன்றுகிறது. பல தடவைகள் தம்முடன் நடனமாட அழைத்த இளம் பெண்களின் கோரிக்கையை என்னால் தீர்த்து வைக்க முடியவில்லை. எனக்கு நடனமாட வராதென்று நான் சொன்ன போது, பலரும் அதை நம்பவில்லை. 1948-ல் கின்னரப் பிரதேசத்தில் நடந்த ஒரு நிகழ்ச்சி ஞாபகம் வருகிறது. அன்று அந்தக் கிராமத்தில் 'பயணத் திருவிழா' நடந்து கொண்டிருந்தது. அங்குள்ள கோயிலின் தரப்பிலேயே சாராயம் குடம் குடமாக வினியோகம் செய்யப்பட்டது. வாத்தியம் முழங்கத் தொடங்கியதுமே, நடன அரங்கில் ஆண்களும் பெண்களும் வளையமாக நின்று இசைக்கேற்ப அடி போடவாரம்பித்துவிட்டனர். சற்று நேரத்துக்குள்ளாகவே ஒரு வளையம் மூன்று வளையங்களாகி விட்டது. கின்னரப் பிரதேசத்துப் பெண்களின் இனிய குரலைப் போலவோ, அவர்களுடைய இதயங் கவரும் எளிமையான இசையைப் போலவோ அவர்கள் நடனம் இருக்கவில்லை. அந்த நடனமாடுவதில் எந்தவிதமான சிரமமும் தெரியவில்லை. வளையமாகக் கூடி நின்று, அவர்கள் மெல்ல அசைவதைப் போல் தோன்றியது. வாத்திய இசைக்கேற்ப உடல் கொஞ்சம் அப்படியும் இப்படியும் அசைகிறது.

இப்படி அந்த நடனம் கவர்ச்சிகரமாக இல்லாவிட்டாலும், அனைவருமே அதில் பங்குகொள்ள ஆர்வம் காட்டினர். அங்கே என்னுடன் வந்திருந்த குமாஸ்தாக்களும், சேவகர்களும் சிலர் இருந்தனர். ஒரு சில நிமிடங்களுக்குள்ளாகவே சாராயத்தின் சொர்ணை அவர் கண்களுக்குள் இறங்கியதுமே, அவர்களும் மற்றவர்களுடன் கலந்து நடனமாடத் துவங்கிவிட்டனர். நான் அங்கே விசேஷ விருந்தினனாகச் சென்றிருந்தேன். எனக்காக ஒரு நாற்காலி கொண்டுவந்து போடப்பட்டது. நான் அதை விரும்பவில்லை. நான் நடனத்தைக் கொஞ்சமாவது கற்றிருந்தால், எவ்வளவு நன்றாக இருந்திருக்கும்! எனக்கு மட்டும் சற்று நடனம் வந்திருந்தால் அன்று அப்படி நாற்காலியில் விழுந்து கிடந்திருக்க மாட்டேன்; நடனக் குழுவுடன் சேர்ந்து கொண்டிருப்பேன், அப்பொழுது நான் அவர்களுடன் இரண்டறக் கலந்துவிட்டிருப்பேன். முதலில் நான் தூரப் பிரதேசத்துக் கனவானாகக் கருதப்பட்டேன். நான் நடனத்தில் கலந்து கொண்டிருந்தால் அவர்களுக்கு நெருங்கியவனாகிவிட்டிருப்பேன். ஊர்சுற்றி நடனக் கலையைக் கற்றுத் தன் பிரயாணங்களைக் கவர்ச்சிகரமாகவும், சுவையுள்ளவையாகவும் ஆக்கிக் கொள்ளலாம். அந்த நிலையில் அவனுக்கு எல்லா இடங்களிலும் நெருங்கிய நண்பர்கள் கிடைத்து விடுவார்கள். நடனமும், வாத்தியமும், சங்கீதமும் வெறும் கலைகள் மட்டுமல்ல; அவை அற்புதசக்தியும் படைத்தவை. ஊர்சுற்றி எல்லாரையுமே சமானமாகக் கருதுகிறான் என்று ஏற்கெனவே கூறியிருக்கிறேன். நடனக்கலை அங்குள்ள மக்களுக்கு, ஊர்சுற்றியை நெருங்கியவனாக்கிவிடுகிறது.

இசையில் ஆர்வமுள்ளவர்கள் இந்திய இசையுடன் கொஞ்சம் ஐரோப்பிய இசையையும் கற்றுக்கொள்ள வேண்டும். நமக்கு நம் நாட்டு உணவைப் போலவே நம் நாட்டு இசையும் நன்றாக இருக்கும். துவக்கத்தில் அனைவருமே தம் நாட்டு இசையை உயர்ந்ததாகக் கருதி, வெளிநாட்டு இசையைத் தாழ்வாக நினைக்கிறார்கள். ஆனால் அவர்கள் விஷயம் தெரிந்து அப்படி நினைப்பதில்லை. வெளிநாட்டு உணவைச் சுவைப்பதற்குப் பழக்கம் தேவையுள்ளதைப் போலவே வெளிநாட்டு இசையை ரசிப்பதற்கும் பயிற்சி தேவைப்படுகிறது. நாம் வெளிநாட்டுச் சங்கீதத்தைக் கருத்தூன்றிக் கேட்டால், அதன் நுணுக்கங்களைப் புரிந்துகொண்டால், அதை அனுபவித்து ரசிக்க முடியும். நம் நாட்டைச் சேர்ந்த விஷயம் தெரிந்தவர்களும் கூட, வெளிநாட்டு இசைக்கு உரிய மதிப்பைத் தருவதில்லை. இதனால் அவர்கள் அன்னியருக்குத் தீங்கொன்றும் இழைக்க முடியாது. அதற்குப் பதில் தமக்குத் தாமே தீங்கு செய்துகொள்கின்றனர். அன்னியநாட்டு இசையை அனுதாபத்துடன் பயின்று, நாம் இந்தக்

குறையைப் போக்கிக் கொள்ள முடியும். மேற்கத்திய சங்கீதத்தைச் சேர்ந்த சங்கேத எழுத்துக்களைக் கற்றுக்கொண்டால், அது நமது இசைக்கும் நல்லது. நமது நாட்டிலும் சங்கீத வித்துவான்கள் பலரும் பலதரப்பட்ட ஸ்வர வடிவங்களைப் பழக்கத்தில் கொண்டு வந்திருக்கின்றனர். ஆனால் மேற்கத்திய ஸ்வர வடிவம் டோக்கியோ, ரோம் நகரங்களிலிருந்து சான்பிரான்ஸிஸ்கோ வரையிலும் பரவி இருக்கிறது. தம்முடைய இசையை மேற்கத்திய ஸ்வர வடிவத்தில் எழுத முடியவில்லையே என்று ஜப்பானியர் குறைப்படுவதில்லை. ஆனால் நமது வித்துவான்கள் இந்திய சங்கீதத்தை மேற்கத்திய ஸ்வர வடிவத்தில் எழுத முடியாதென்று சொல்கிறார்கள். முதலில் நான்கூட அப்படித் தான் கருதிவந்தேன். ஆனால் ஒருமுறை சோவியத் யூனியனைச் சேர்ந்த ஒரு இளம் இசை மேதை கிராமஃபோன் இசைத் தட்டின் மூலம் இந்திய சாஸ்திரிய சங்கீதத்தைக் கேட்டு, அதை மேற்கத்திய ஸ்வர வடிவத்தில் எழுதிக்கொண்டு, அப்படியே பியானோவில் இசைத்துக்காட்டிவிட்டார். அன்றிலிருந்து நமது இசையையும் மேற்கத்திய ஸ்வர வடிவத்தில் எழுதலாமென்ற நம்பிக்கை எனக்கு உண்டாயிற்று. ஆனால் அதில் ஆங்காங்கே சிறு மாற்றங்கள் செய்து கொள்ள வேண்டும். சமஸ்கிருதம், பாலி மொழிகளை ரோமன் எழுத்துக்களில் எழுதும் போதும் ஆங்காங்கே சிறு மாறுதல்களைச் செய்து கொள்ள நேர்ந்தது. அதுபோல் இசையின் விஷயத்திலேயும் சில குறிகளைப் பயன்படுத்தலாம். மேற்கத்திய ஸ்வர வடிவத்தைப் பயன்படுத்தாமல் நாம் நஷ்டமடைந்து கொண்டிருக்கிறோம் என்பது எனது கருத்து. அந்த ஸ்வர வடிவத்தைப் பயன்படுத்தும் பல நாடு களிலுள்ள லட்சக் கணக்கான வாலிபர்களும், யுவதிகளும், மேற்கத்திய ஸ்வர வடிவத்தில் அச்சடிக்கப்பட்ட நூல்களால் இசையின் ஆனந்தத்தை அனுபவித்துக்கொண்டிருக்கின்றனர். நமது சங்கீதம் மேற்கத்திய ஸ்வர வடிவத்தில் எழுதப்பட்டால், அந்நாடுகளில் உள்ள இசைவாணர்களும் நமது சங்கீதத்தைப் புரிந்துகொண்டு, அதன் மேன்மையை மதிக்கவும் செய்வார்கள்.

மேற்கத்திய ஸ்வர வடிவத்தை நமது இசை மேதைகள் எப்பொழுது ஏற்றுக்கொள்வார்கள் என்பதைக் காலம்தான் கூறவேண்டும். ஆனால் நமது ஊர்சுற்றிகளிடம் இப்படிப்பட்ட குறுகிய மனப்பான்மை நெருங்கவும் கூடாது. அவர்கள் மேற்கத்திய ஸ்வர வடிவத்தின் மூலமாகவும் இசையைக் கற்க வேண்டும். இதனால் அவர்கள் உள்நாட்டு, வெளிநாட்டு இசைகளை உணர்ந்துகொள்ள முடியும். மகிழ்ச்சியையும் அனுபவிக்க முடியும். அது மட்டுமல்ல; புதிய நாடுகளுக்குச் சென்று அவற்றின் சங்கீதத்தைச் சுலபமாகப் புரிந்து கொள்ளவும் முடியும்.

ஊர்சுற்றிக்கு நடனமும், சங்கீதமும், வாத்திய இசையும் மிகவும் அவசியமென்று சுருக்கமாகக் கூறலாம். அவன் இவைகளின் மூலமாக எந்த நாட்டினருடனும் நெருங்கிய உறவை ஏற்படுத்திக் கொள்ளலாம்; அவன் எங்கேயும் தனிமையின் வேதனையை அனுபவிக்கத் தேவை யில்லை. இசையைப் பற்றியும், இளைஞர்களைப் பற்றியும் கூறியவையே யுவதிகளுக்கும் பொருந்தும். ஊர்சுற்றி யுவதி நடனம், சங்கீதம், வாத்திய இசைகளைத் தவறாமல் கற்க வேண்டும். புத்தக அறிவுடன், இசைக்கடலில் மூழ்கி எழக்கூடிய ஊர்சுற்றி யுவதிக்குப் பிரயாணம் செய்வது வெகு எளிதாக இருக்கும்.

## 6. பழங்குடிகளிடையே...

ஊர்சுற்றியின் வாழ்க்கை மற்றவர்களுக்குச் சிரமமானதாகவும், சாரமற்றதாகவும் காணப்பட்டாலும், ஊர் சுற்றிக்கு மட்டும், தன் வாழ்க்கை லட்டு போல் இனிக்கும். லட்டை எந்தப் பக்கம் கடித்தாலும் ஒரே மாதிரி இனிப்பதைப்போல், ஊர்சுற்றிக்குத் தன் வாழ்க்கை இனிக்கும். இனிப்பிலே மட்டுமே ருசி என்பதில்லை. ஆறு சுவை களிலுமே விதவிதமான ருசி இருக்கிறது. ஊர் சுற்றிக்குத் தன் பயணம் கடினமாக ஆக, அவனுக்கு அதிலே கவர்ச்சியும் அதிகமாகிக் கொண்டே போகும். எந்த அளவுக்கு அவன் முன்பின் பார்த்திராத நாடுகளுக்கும், இடங்களுக்கும் போகிறானோ, அந்த அளவுக்கு அவனுள் ஆர்வம் பொங்கிக்கொண்டிருக்கும். உலகில் நாகரிகம் வளர்ச்சியடையாத இனமக்களைப் பார்ப்பது, ஊர்சுற்றிக்கு மிக மகிழ்ச்சிகரமானதாக இருக்கும். உலக மக்களின் பார்வையிலிருந்து தப்பித்து இருக்கும் பிரதேசங்களில்தான் மிகவும் பின்தங்கிய இனத்தினர் வாழ்கின்றனர். ஊர்சுற்றி இயற்கையையும், மனிதர் களையும் ஒட்டும் உறவுமில்லாமல் பார்ப்பதில்லை. இயற்கையிடத் திலும், மனிதர்களிடமும் அவனுக்கு அபாரமான அனுதாபமிருக்கிறது. அவன் பின்தங்கிய இன மக்களிடையே செல்கிறான் என்றால், தன்னுடைய ஊர் சுற்றும் விருப்பத்தைத் தீர்த்துக் கொள்வதற்காக மட்டுமல்ல, அந்தப் பின்தங்கிய மக்களின்பால் உலகோர் கவனத்தையும் ஈர்க்கிறான். அங்கு மறைந்துள்ள செல்வத்தைப் பற்றியும் அங்குள்ளவர் களின் பயங்கர வறுமை நிலையைப் பற்றியும் அவன் தன் நாட்டு மக்களுக்குத் தெரிவிக்கிறான். ஆசியா, ஆப்பிரிக்கா, அமெரிக்காவில் உள்ள பின்தங்கிய இனத்தவரிடையே ஊர்சுற்றிகள் ஆற்றிய பணி நினைவு கூரத்தக்கது. ஆனால் நான் இங்கே முதல் தர ஊர்சுற்றிகளைப் பற்றியே குறிப்பிடுகிறேன். நாடுகளைப் பிடிக்கும் ஆசை கொண்ட ஏகாதிபத்திய ஊர்சுற்றிகளும் இருக்கத்தான் செய்தார்கள். அவர்கள் இந்தப் பின்னடைந்த பழங்குடிகளுக்குக் கெட்ட பெயர் உண்டாக்கவே. அவர்களிடம் சென்றார்கள். அப்படிப்பட்ட ஊர்சுற்றிகளின் 'சேவை' யினாலேயே "தஸ்மானிய"ப் பழங்குடி இனம் உலகத்திலிருந்தே

மறைந்துவிட்டது. இன்னும் பல இனங்கள் வீழ்ச்சியடைந்துவிட்டன. நமது நாட்டிலும் மக்களை ஏமாற்றுவதற்காகவே, ஆங்கிலேயர்கள் பழங்குடி மக்களிடம் கவனம் செலுத்துவதைப் போல் நடித்தனர். ஆனால் நாட்டின் அடிமைத்தனத்தை வலுப்படுத்த, அவர்களிடையே தேசிய விரோத உணர்வை வெள்ளையர் வளர்த்தார்கள். இந்தியாவில் பழங்குடி இனங்களின் எண்ணிக்கை இருநூற்றுக்கு மேலாகவே இருக்கிறது.

உத்தரப்பிரதேஷ், பஞ்சாப், பீகார், மத்தியப் பிரதேசத்தில் வாழும் பழங்குடிகள் இந்தி மொழியைப் புரிந்துகொள்ளக் கூடியவர்கள். தென்னிந்தியாவிலுள்ள பழங்குடியினர் இந்தியைப் புரிந்துகொள்ள மாட்டார்கள். ஆனால் மகாராஷ்டிரம், ஒரிஸ்ஸா, மேற்குவங்கம், அஸ்ஸாம் ஆகிய மாநிலங்களில் வாழ்பவர்கள் இந்தியை ஓரளவுக்குப் புரிந்து கொள்வார்கள். வருங்கால ஊர்சுற்றிகள் இந்தப் பழங்குடியினரிடையே பணி புரியலாம்.

மேற்குறிப்பிட்ட பழங்குடியினர் அடர்ந்த காடுகளிலும், காடுகள் சூழ்ந்த மலைகளிலும் வாழ்கிறார்கள். அந்தப் பிரதேசங்களில் இப்பொழுதும் புலி, யானை போன்ற பயங்கர மிருகங்கள் சுதந்திரமாகச் சுற்றித் திரிகின்றன. தன் மாநிலத்திலுள்ள பழங்குடி இன மக்கள் ஒரு ஊர்சுற்றியின் கவனத்தைக் கவராமலும் இருக்கலாம். ஏனெனில் ஐந்நூறு, அறுநூறு மைல் பிரயாணம் செய்யாவிட்டால் மகிழ்ச்சிகரமாக இருக்காது. ஐம்பது, நூறு மைல் தூரத்தில் வாழும் இனத்தவரிடம் ஊர்சுற்றிக்குக் கவர்ச்சி இருக்காது. ஆனால் அஸ்ஸாமில் உள்ள பின்தங்கிய இனத்தவர் நம்மைக் கவர்வார்கள் என்பதில் ஐயமில்லை. அஸ்ஸாமுக்கு ஒரு பக்கம் வடக்குப் பர்மாவின் பயங்கர மலைப் பகுதியும், மறுபக்கம் பல ரகசியங்களைத் தன்னகத்தே கொண்டே திபேத்தும் இருக்கின்றன. இங்கெல்லாம் வாழ்கின்ற பழங்குடிகள் பல புதிர்களாக இருக்கின்றன. இங்கே பலவிதமான மனித வம்சங்கள் சங்கமமாகி உள்ளன. இந்தப் பழங்குடி இனங்களில் சில, தாய்லாந்து கம்போடியாவிலுள்ள இனங்களுடன் தொடர்புள்ளவை. இன்னும் சில திபேத் இனத்துடன் தொடர்புள்ளவை. பிரம்மபுத்திரா நதி வானத்தைத் தொடும் திபேத்திய மலைகளைக் கடந்து, கிழக்கிலிருந்து தெற்கு நோக்கித் திசை மாறுகிற இடத்திலிருந்து இந்த இனங்கள் ஆரம்பமாகின்றன, இவர்களில் பலரும் அடர்ந்த காடுகளில் வாழ்கின்றனர் அங்கே மழையும் வெயிலும் மிக அதிகம். ஆனால் சில இடங்களில் குளிர் காலங்களில் பனியும் பெய்யும். மிஸ்மி, மிகிர், நாகா போன்ற பழங்குடிகளும் அவர்களுடைய எளிமையான பழக்க வழக்கங்களும் ஊர் சுற்றியின்

கருத்தைக் கவராமல் இருக்கமாட்டா. நம் நாட்டுக்கு வெளியேயும் இப்படிப்பட்ட பழங்குடியினர் சிதறிக் கிடக்கின்றனர். அரசியல் அதிகாரம் பணக்கார வர்க்கங்கள் கைகளில் இருக்கும் இடங்களில், இந்த நூற்றாண்டின் இறுதிக்குள் கூட, இந்தப் பின்தங்கிய இனங்கள் பழமையான இருளிலிருந்து புதுமையான ஒளிக்குள் அடி எடுத்து வைப்பார்களென்று எதிர்பார்க்க இயலும்.

நமது ஊர்சுற்றிகள் வெளிநாட்டுப் பழங்குடிகளிடம் செல்லக் கூடாதென்று நான் கூற மாட்டேன். லட்சக்கணக்கான ஆண்டுகளாகப் பனியினால் மூடப்பட்டிருக்கும் வட துருவத்திலுள்ள 'எஸ்கிமோ'க்களின தோல் கூடாரங்களுக்குள்ளும் முடிந்தால் சென்று, அந்தப் பிரதேசத்தின் கடுங்குளிரையும் அனுபவித்து வரட்டுமென்று கூறுபவன் நான்! ஆனால் நமது நாட்டிலேயே காடுகளில் வாழும் பழங்குடியினருடன் இருந்து, இந்திய ஊர்சுற்றி தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்கள் நிறைய இருக்கின்றன என்பது எனது கருத்து. பழங்குடிகளின் இடங்களுக்குப் போக விரும்பும் ஊர்சுற்றிகள், சில விசேஷ முன்னேற்பாடுகளைச் செய்து கொள்ள வேண்டும். நாகரிகத்தின் முதல்படியை அடைந்துவிட்ட இப்படிப்பட்ட இனங்களிடம் செல்வதில், மொழி தெரியாவிட்டாலும் வேறு பல வசதிகள் இருக்கின்றன. ஆனால் அவர்களுடன் பழகும் போது, எத்தனையோ விஷயங்களில் முன்னெச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். ஆனால் வெள்ளையர்களைப் போல் துப்பாக்கியும் ரிவால்வரும் எடுத்துக்கொண்டு அவர்களிடம் போகவேண்டுமென்பது இந்த முன்னெச்சரிக்கையின் பொருளல்ல. ரிவால்வரும், துப்பாக்கியும் வைத்துக் கொள்ளக்கூடாதென்று நான் சொல்லவில்லை. பயங்கரக் காடுகளுக்குள் செல்லும் போது, ஊர்சுற்றி ஆயுதங்களைத் தன்னுடன் அவசியம் வைத்திருக்க வேண்டும். பழங்குடிகளிடம் செல்ல எண்ணுபவர்கள், குறி பார்த்துச் சுடுவதிலும் கொஞ்சம் பயிற்சி பெற்றிருக்க வேண்டும். காடுகளில் வாழும் பழங்குடி மக்களை அன்பும் அனுதாபத்துடனும்தான் வெற்றி கொள்ள வேண்டும். பிரமையினாலோ, சந்தேகத்தினாலோ, ஒருவேளை ஆபத்திலே சிக்கிக் கொண்டாலும் அதைப் பொருட்படுத்தக்கூடாது. பழங்குடி இனத்தவரும் அளவிலா நட்புணர்வுக்கு அடிமையாகிவிடுகின்றனர். ஊர்சுற்றி இப்புதிய நண்பர்களுடன் வேட்டைக்குச் செல்ல வேண்டிய அவசியம் ஏற்படுமாதலால், அவன் ஆயுதங்களைப் பயன்படுத்தவும் தெரிந்திருக்க வேண்டும். பழங்குடிகளிடம் செல்பவர்கள், அவர்களின் சமூக வாழ்விலும் கலந்துகொள்ள வேண்டும். அவர்களுடைய திருவிழாக்களிலும், பண்டிகைகளிலும், சுக துக்கங்களிலும் உணர்வு பூர்வமாகப் பங்கெடுக்க வேண்டும். அதிகமான சங்கோஜம் படைத்த

இனங்களிடையே முதலில் புகைப்படக் கேமிராவை உபயோகிப்பது நன்றாயிராது. ஆனால் அதிகம் பழக்கமான பிறகு படமும் எடுக்கலாம். அங்குக் காலம் நிதானமாகச் செல்கிறதென்பதையும், ஒரு காரியமாற்ற அதிக சமயம் பிடிக்கிறதென்பதையும் ஊர்சுற்றி கவனத்திலிருத்திக் கொள்ளவேண்டும்.

அஸ்ஸாம் பழங்குடிகளிடம் செல்ல அவர்களுடைய மொழியும் தெரிந்திருக்க வேண்டும். அஸ்ஸாமில் சிவசாகர், தேஜ்பூர், குவால்பாடா போன்ற சிறிய பெரிய எல்லா நகரங்களிலும் இந்தி பேசுபவர்கள் வாழ்கிறார்கள். அங்குச் சென்று இந்தப் பழங்குடியினரைப் பற்றிய விவரங்களை அறிந்து கொள்ளலாம். அஸ்ஸாம் அரசாங்கம் வெளியிட்டுள்ள ஹட்டன், மில்ஸ், ஹட்ஸன் போன்ற ஆங்கிலேயர்கள் எழுதிய புத்தகங்களைப் படித்து, அங்குள்ள நிலம், மக்கள், அவர்களின் பழக்க வழக்கங்கள் மொழி ஆகிய விவரங்களைத் தெரிந்து கொள்ளலாம். ஆனால் அவர்கள் வாழும் இடங்களுக்கே சென்று அவர்களுடன் கலந்து பழகித் தெரிந்துகொள்ளக்கூடிய விஷயங்கள் தான் அதிகமாக இருக்குமென்பதை நாம் மறந்துவிடக்கூடாது.

வாழ்வதற்கான சாதனங்கள் பழங்குடிகளிடம் மிகப் புராதன மானவையாக இருக்கும். அங்கே செய்வதற்குத் தொழில்கள் ஒன்றும் இருக்காது. அவர்கள் எந்த இடங்களில் இயற்கை தாராளமாக அவர்களுக்கு உணவும், உறைவிடமும் வழங்குகிறதோ, அந்த இடங்களில் பெரும் எண்ணிக்கையில் வாழ்கிறார்கள். அவர்களின் வாழுமிடங்கள் அழகான காடுகளில் மலைகளைப் பார்த்தவாறு இருக்கும். ஊர் சுற்றி இந்த இயற்கைக் காட்சிகளைக் கண்டு தானும் ரசிக்கலாம்: தன் பேனாவாலும், தூரிகையாலும் அவ்வழகிய காட்சிகளைச் சிரஞ்சீவியாக்கி, மற்றவர்களையும் ரசிக்கச் செய்யலாம். ஊர்சுற்றி முதன் முதலில் கவனிக்க வேண்டிய விஷயம் சமமான உணர்வு. அதாவது அங்குள்ள மக்களுக்குச் சமமாக அவர்களுடன் இரண்டறக் கலந்து விடுவதற்காக முயற்சித்தால், அங்கே உடலுழைப்பும் பயன் தரும். ஆனால் அது வாழ்வதற்குப் பயன்படுவதைவிட, அந்த மக்களுடன் ஒருங்கிணைய அதிகம் பயன்படும். நடனமும் வாத்திய இசையும் ஊர் சுற்றியை விரைவாக அந்த மக்களுடன் இணைத்து விடும். பழங்குடியினருக்கு நடனமும், வாத்தியமும், பாட்டும், மூச்சைப்போல் வாழ்க்கையின் இணை பிரியாப் பகுதிகளாகும். புல்லாங்குழல் வாசிக்கும் ஊர்சுற்றி இரண்டே நாட்களில் எல்லோர் அன்பையும் பெற்றுவிட முடியும். நாகரிகத்தின் அளவுகோல் எல்லா இனங்களிலும் ஒரே மாதிரியாக இருக்காது என்றாலும் எந்த இனத்தவரிடம் நாம் போகிறோமோ, அவர்களின் நாகரிகத்தை மதித்து நடக்கவேண்டும்.

ஐரோப்பாவைச் சேர்ந்த ஒருவன் எச்சில் கோப்பையில் தேக்கரண்டியை விட்டு, அதிலிருந்து சர்க்கரையை வெளியே எடுப்பதைப் பார்த்தால், சுத்தத்தை முக்கியமாகக் கருதும் நம் நாட்டினர் வெறுப்படைவார்கள். மருத்துவத்தில் எச்சிலால் தொத்து நோய் வரக்கூடிய அபாயம் இருக்கிறதென்று ஐரோப்பியன் படித்திருந்தால், நம்மவரின் வெறுப்பை அவனால் புரிந்துகொள்ள முடியும். ஆனால் அதே போன்ற வெறுப் பூட்டும் செய்கைகள் பலவற்றையும் நமது நாகரிக இந்தியர்களும் செய்கிறார்கள். அவை ஐரோப்பியருக்கு அசிங்கமாகத் தோன்றலாம். உதாரணமாக நம்மவர்கள் எச்சிலை அசிங்கமாக எண்ணினாலும், காதிலும் மூக்கிலுமுள்ள அழுக்கை முக்கியமாகக் கருதுவதில்லை. நம்மவரில் பலரும் மற்றவர்களின் எதிரிலேயே பற்களில் சிக்கிக் கொண்டவைகளைக் குத்தி வெளியே எடுக்கிறார்கள். இதைக் கண்ணியம் மிகுந்த மேற்கத்தியர் மிகவும் வெறுக்கிறார்கள். இதே போல் நம்மவர்களில் பெரும்பாலோர் மூக்கையும் கண்ணையும் துடைக்கக் கைக்கட்டையைப் பயன்படுத்துவதில்லை. அதற்குத் தம் கைகளே போதுமென்று எண்ணி விடுகிறார்கள். அல்லது அதிகம் போனால் வேட்டியின் முனையோ புடைவைத் தலைப்போ கைக் குட்டையாகப் பயன்படுத்தப்படுகிறது. இவையெல்லாம் சுகாதாரத் திற்கு எதிரிடையானவைதான்!

நமது பழக்க வழக்கங்களுக்கு எதிரிடையான பழக்க வழக்கங்கள், பழங்குடி மக்களிடையே எத்தனையோ இருக்கலாம். ஆனால் நமது பழக்கங்களைவிட அவர்களின் சில பழக்கங்கள் சுத்தத்திற்கும், சுகாதாரத்திற்கும் நெருங்கியவையாக இருக்கலாம். எப்பொழுதுமே பழக்க வழக்கங்களுக்கு ஒரே மாதிரியான அடிப்படை இருக்க முடியாது. கண்ணுக்குப் புலப்படாத சக்திகளின் கோபத்திற்காளாவோ மென்ற அச்சத்தால், சில சுத்தமான செயல்கள் செய்யப்படுகின்றன. ஒரோர் சமயம் விவரிக்க இயலாத பயத்தினாலும்; சுத்தத்திற்கு முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. புதிய இடங்களுக்குச் செல்லும் போது, அங்குள்ளவர்கள் செய்வதைப்போலவே, நாமும் செய்ய வேண்டும். அப்படிச் செய்தால் அவர்களை நம்மால் கவர முடியும்: அவர்களும் நம்மை மனம் திறந்து வரவேற்பார்கள்.

காட்டு வாழ் மக்களிடம் செல்லும் ஊர்சுற்றி, அவர்களுக்குச் சில விஷயங்களைக் கற்றுத் தருவதுடன் அவர்களிடமிருந்தும் சில விஷயங்களைக் கற்றுக் கொள்கிறான். பழங்குடிகளுக்கு ஊர்சுற்றி வழங்குபவற்றில் மருந்துகள் முக்கிய இடம் வகிக்கின்றன. அவன் சில மருந்துகளை எப்பொழுமே தன்னிடம் வைத்துக் கொண்டு, தன் அறிவைக் கொண்டு அம்மருந்துகளைப் பயன்படுத்த வேண்டும்.

ஐரோப்பியர் கண்ணாடி வளையல்களையும், பாசி மாலைகளையும் தம்முடன் எடுத்துச் சென்று பழங்குடிகளுக்குத் தருகின்றனர். ஒன்றிரண்டு நாட்களே தங்கி இருக்கக்கூடிய ஊர்சுற்றி இவ்வளவு தந்தால் போதும். ஊர்சுற்றி மனித இனத்தைப் பற்றியும் மானிட சுபாவத்தைப் பற்றியும் ஓரளவு தெரிந்து வைத்திருந்தால் அங்கிருந்து விஞ்ஞான சம்பந்தப்பட்ட எத்தனையோ பொருட்களைக் கொண்டு வர முடியும். வரலாற்றுக்கு முந்தைய மனித இனத்தைப் பற்றித் தெரிந்துகொள்ளப் பழங்குடியினரின் மொழியும், கலைகளும் எவ்வளவோ உதவி இருக்கின்றன என்பதை நாம் நினைவிலிருத்திக் கொள்ள வேண்டும். ஊர்சுற்றி அங்கே மனித தத்துவத்தைப் பற்றிய பல பிரச்சினைகளை ஆராய்ந்து அவற்றைப்பற்றித் தனது நாட்டினருக்குத் தெரிவிக்கலாம். பழங்குடியினரின் மொழியை ஆராய்ச்சி செய்து மொழி இயலை வளப்படுத்தலாம். அவர்களுடைய மக்கள் கலை எவ்வளவோ எழில் நிறைந்தது. அந்தக் கலை பார்ப்பதற்கும் கேட்பதற்கும் மட்டும் இனிமையான தல்ல: அதனால் நமது நாகரிகத்திற்கும் பண்பாட்டிற்கும், கலைக்கும் கூடப் புதிய திசைவழி கிடைக்கக்கூடும்.

காடுகளில் இருக்கும் பழங்குடிகளுடன் ஒன்றி வாழ ஒரு ஆங்கில அறிஞர் அவர்களைச் சேர்ந்த ஒரு பெண்ணையே திருமணம் செய்து கொண்டார். ஊர்சுற்றியைப் பொறுத்தவரையில் கல்யாணமென்பது கூடாத விஷயமாகும். ஆகவே இந்த மலிவான ஆயுதத்தைப் பயன் படுத்தக்கூடாது. ஊர் சுற்றி அங்குள்ளவர்களுடன் இரண்டறக் கலக்க விரும்பினால், அவர்களுடன் சேர்ந்து அவர்களின் குடிசையிலேயே இருக்கலாம். அவர்கள் உண்ணும் உணவையே சாப்பிடலாம். ஆனால் திருமணம் செய்துகொள்ள வேண்டிய அவசியமில்லை. ஊர்சுற்றி மேன்மேலும் முன்னேறிச் சென்றுகொண்டே இருக்க வேண்டுமென்று விரதம் கொண்டவனாயிற்றே! அவன் எத்தனை இடங்களில் புதிய புதிய கல்யாணங்களைச் செய்துகொண்டிருப்பான்? அவன் அபாரமான அன்பைக் கொண்டு- புத்தர் கூறியதைப்போல், அபரிமிதமான நட்பைக் கொண்டு- பழங்குடியினரின் வாழ்க்கையிலும், அவர்களுடைய கலைகளிலும் தேர்ந்து, அவர்களுடன் நெருங்கிய உறவை ஏற்படுத்திக் கொள்ள முடியும். ஊர் சுற்றி ஓரிடத்தில் மாலை வேளையில் பாயில் அமர்ந்து வயதான ஒருவரிடம் பழங்கதையொன்றை அக்கறையுடன் கேட்டுக் கொண்டிருப்பான். மற்றோரிடத்தில் அச்சமென்பதே அறியாத கள்ளங்கபடமற்ற வாலிபர்கள் யுவதிகளிடையே அவர்கள் பாடும் பாட்டுகளைப் புல்லாங்குழலில் இசைத்துக் கொண்டிருப்பான். இவ்விதமாகவே அவன் அங்குள்ள மக்களுடன் இணைந்துவிடுவான். ஆறு மாதங்கள் அல்லது ஒரு

வருடம் வரை ஊர்சுற்றி அவர்களுடன் இருந்தால், அவர்களைப்பற்றி அவன் உலகத்துக்கு எவ்வளவோ தெரிவிக்க முடியும்.

ஊர்சுற்றி மாசுபடாத இயற்கையின் மத்தியிலும், அதன் உண்மையான வாரிசுகளின் இடையேயும் மாதங்கள் அல்லது சில ஆண்டுகள் கழித்தால், அவனுக்கு எவ்வளவோ மகிழ்ச்சி கிட்டும். அவன் ஒவ்வொரு நாளும் புதிய புதிய விஷயங்களைத் தெரிந்து கொள்வான். வரலாறு, மனித, இனம், மொழி அல்லது வேறேதாவது ஒரு விஷயத்தைப்பற்றிய ஆராய்ச்சி செய்துகொண்டே இருப்பான். அவன் அங்கிருந்து வெகு தூரம் போய்விட்டால், பழைய நினைவுகள் இனிய நினைவுகளாக நிலைத்து விடுகின்றன. அந்த இனிய நினைவுகள் அவனைப் பொறுத்தவரையில் அவனுடனே மறைந்தும் விடலாம். ஆனால் அவன் தன் நினைவுகளுக்கு எழுத்து வடிவம் தந்துவிட்டுப் போனால், அவன் மறைந்தபின்னரும் லட்சக்கணக்கான வாசகர் களின் கண்களின் முன்னால் அவ்வினிய நினைவுகள் உயிர் பெற்று எழும்.

பழங்குடியினரிடையே சுற்றித் திரிவதும், படிப்பதும், சிந்திப்பதும் ஒரு இனிமையான வாழ்க்கையாகும். இந்தியாவில் இந்தப் பணிக்காக முதல் ரக ஊர்சுற்றிகள் தேவை, நமது எத்தனையோ இளைஞர்கள் வீணான வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். தனக்கும் பயன்படாமல், சமுதாயத்துக்கும் நன்மை பயக்காமல் மனிதன் வாழும் வாழ்க்கையை வீணான வாழ்க்கை என்றுதான் கூறவேண்டும். ஊர் சுற்ற வேண்டுமென்ற மிகச் சிறிய விருப்பம் உள்ளவன், தன் வாழ்வை இப்படி வீணாக்குவானென்று எதிர்பார்க்க முடியாது. ஆனால், சமயங்களில் மனிதன் ஊர்சுற்றுவதின் முக்கியத்துவத்தை உணராமலே போய்விடுகிறான். தனது வாழ்க்கையையும் வீணாக்கிக்கொண்டு விடுகிறான். இரண்டு இளைஞர்களை இன்றும் நான் நினைவிலிருத்திக் கொண்டிருக்கிறேன். இருவரும் இருபத்து ஐந்து வயதாவதற்கு முன்பே தற்கொலை செய்து கொண்டுவிட்டார்கள். அவ்விரு மாணவர்களில் ஒருவன் வரலாற்றிலும், சமஸ்கிருதத்திலும் பெரிய மேதை. அவன் ஒரு கல்லூரியில் பேராசிரியரானான். அவன் தனது நிலைமையினால் திருப்தி கொள்ளவில்லை; தன் அறிவையும் படிப்பையும் வளர்த்துக் கொள்ள விரும்பினான். கல்லூரியில் கோஷ்டித்தகராறில் அவன் பலியாகி வேலையை விட்டே வெளியேற நேர்ந்தது. அவனுடைய தந்தை ஏழையல்லவென்றாலும், அவருக்குக் கிடைக்கும் ஓய்வூதியத்தில் காலங்கழிப்பது தவறானதென்று அவன் கருதினான். கண்களுக்குப் புலப்படும் வாசற்படிகளையெல்லாம் தனக்கு வரவேற்பளிக்கும் வாசற்படிகளாக அவன் எண்ணினான். இளைஞர்களுக்குத் துன்ப மளிக்கக்கூடிய வாசற்படிகளும் இருக்குமென்பது அவனுக்குத்

தெரியாமற் போய்விட்டது. அஸ்ஸாமில் ஒரு மூலையில் 'மிஸ்மி' பழங்குடியினர் வாழ்கிறார்கள் என்பதும், உருவத்தில் மங்கோலியர்கள் போலவும் தாய்லாந்து மொழி பேசக்கூடியவர்களாகவும், ஆனால் வைஷ்ணவ மதத்தைப் பின்பற்றுபவர்களாகவும், பெண்களின் அதிகாரம் செல்லுபடியாகக்கூடிய ஒரு இனம் மணிப்பூரில் இருக்கிற தென்பதும் அவ்விளைஞனுக்குத் தெரிந்திருந்தால் எவ்வளவோ நலமாக இருந்திருக்கும். அங்கே அவன் வாழ ஒரு மாதத்திற்கு நூறு நூற்றைம்பது ரூபாய் தேவையில்லை. வாழ்க்கையில் வெறுப்படைந்து தற்கொலை செய்து கொள்ளவேண்டிய அவசியமும் இல்லை. மிகச் சாதாரணமான உழைப்பு உழைத்திருந்தால் போதுமானது. அங்கே சென்று ஒரு மிஸ்மி அல்லது மணிப்புரி கிராம இளைஞனைப் போல் அவனும் எளிமையான, ஆனால் மகிழ்ச்சிகரமான வாழ்க்கை வாழ்ந்திருக்க முடியும். தனது அறிவையும் வளர்த்துக் கொண்டிருக் கலாம். உலகத்துக்கும் எத்தனையோ விஷயங்களைத் தெரிவித்திருக் கலாம். அவன் தன் வாழ்வை இடையிலேயே முடித்துக்கொள்ள வேண்டிய அவசியமென்ன? இத்தனை உயர்வான மனித வாழ்வை அனாவசியமாக அழித்துக்கொள்வது அறிவுடைமையாமோ?

மற்றொரு இளைஞன் அரசியலைப் படித்துக் கொண்டிருந்த சுறுசுறுப்பான மாணவன். அவனுள் அறிவும், நல்ல குணங்களும் கலந்திருந்தன. அவன் நல்ல மதிப்பெண்களுடன் எம்.ஏ.வும் தேறி இருந்தான். அவன் அழகாகவும் ஆரோக்கியமாகவும், அடக்கத்துடனும் இருந்தான். அவனது குடும்பமும் நல்ல நிலைமையிலேயே இருந்தது. கொஞ்சம் வயது வந்ததும் அவன் பெரிய பெரிய கற்பனைகள் செய்யத் தொடங்கினான். குறுகிய வாழ்க்கையில் தனது அறிவை அளவில்லாது வளர்த்துக் கொண்டான். ஆனால், அவனும் ஒரு நாள் 'பொட்டாஷியம் ஸையனைடை' உட்கொண்டு தன் உயிரை மாய்த்துக்கொண்டு விட்டான். காதல் தோல்வியால்தான் அவன் தற்கொலை செய்து கொண்டான் என்று சொல்லிக்கொண்டனர். ஆனால் ஐந்தாறு ஆண்டுகள் கூடப் பொறுமையுடன் காத்திருக்க இயலாத அந்தக் காதலன், உண்மையான காதலன் ஆவானா? மனிதனின் அறிவை மழுங்கடிக்கச் செய்து, அவனுடைய திறமையெல்லாம் அழிக்கக்கூடிய அந்தக் காதலும் ஒரு காதலா? அவன் தன் வாழ்க்கை வீணாகிவிட்டது என்று கருதியிருந்தால், மற்றவர்களுக்கும் பயன்படும் வகையில் அதைக் கழித்திருக்கலாம் இல்லையா? தன் சட்டையை வீசி எறிய வேண்டு மென்று எண்ணினால், அதை நெருப்பில் வீசி எறியாமல், அது மிகவும் தேவைப்படும் ஏழைகளுக்குக் கொடுக்கலாமல்லவா! வாலிபர்களும், யுவதிகளும் பல சந்தர்ப்பங்களிலும் இப்படிப்பட்ட முட்டாள் தனத்தைச் செய்துவிடுகிறார்கள். நாட்டுக்கும், சமுதாயத்துக்கும்,

கல்விக்கும் பயன்படக் கூடிய மகத்தான வாழ்க்கையை வீணாகவே அழித்துக் கொண்டுவிடுகிறார்கள். அந்த வாலிபன் தன்னிடமுள்ள அரசியல், பொருளாதாரக் கல்வியைக் கொண்டு, திட முடிவுடனும், துணிவுடனும் ஏதாவதொரு பழங்குடியினர் வாழும் புதிய இடத்துக்குச் செல்லக்கூடாதா? சூழ்நிலைகள் என்ற பகைவனை எதிர்கொள்ளாமலேயே ஆயுதங்களைக் கீழே போட்டு விட்ட தன்மையைக் கோழைத் தனமென்று சொல்வதா, பைத்தியக்காரத்தனமென்று கூறுவதா? 'பொட்டாஷியம் ஸையனைட்' மிகவும் மலிவானது. ஓடும் ரயிலின் கீழே விழுவது, நீரில் மூழ்கிவிடுவது மிகவும் சுலபமான காரியங்கள் தான்! மண்டைக்குள் ஒரு துப்பாக்கி ரவையைச் செலுத்திக்கொள்வதற்கும் அப்படியொன்றும் அதிகமாகச் செலவில்லை. ஆனால் தன்னுடைய எதிரிச் சக்திகளைக் களத்தில் தைரியமாக நின்று எதிர்கொள்வதுதான் கடினமானது. நமது இளைஞர்களிடம் நாம் இதைத்தான் எதிர்பார்ப்போம். ஊர்சுற்றும் எண்ணமுடையவர்களும், இந்த நூலைப் படிக்கும் வாசகர்களும் மேற்கூறிய இளைஞர்கள் செய்வதைப்போன்ற முட்டாள்தனத்தைச் செய்ய மாட்டார்களென்று நான் கருதுகிறேன். அவ்வாலிபர்களில் ஒருவனுடைய கடைசிக் கடிதம் நான் சோவியத் யூனியனில் இருந்தபோது கிடைத்தது. அதனால் நான் அவனைத் தடுக்க முடியாமற் போய்விட்டது. நான் அங்கிருந்து திரும்பி வருவதற்கு முன்பே அவன் இவ்வுலகத்தை விட்டுப் போய் விட்டான். வாழ்வதனால் ஒருவிதப் பயனும் இல்லாதபோதும், உயிரை விடுவதனால் மற்றவர்களுக்கு நன்மை விளையும் போதும் மனிதன் தன் உயிரை மாய்த்துக் கொள்ளலாமென்பதை நானும் ஒப்புக்கொள்கிறேன். அப்படிப்பட்ட தற்கொலை தவறானதில்லை தான்! ஆனால் மேலே சொன்ன சூழ்நிலை இருக்க வேண்டுமல்லவா? மற்றொரு இளைஞன் நான் நாடு திரும்பும்வரை உயிரோடுதான் இருந்தான். அவன் என்னைச் சந்தித்துப் பேசியிருந்தாலாவது அல்லது அவன் இப்படிச் செய்து கொள்ளப் போகிறான் என்பது தெரிந்திருந் தாலாவது நான் அவனை முட்டாள்தனத்திலிருந்து தடுத்திருப்பேன். கல்வியும், உடல்நலமும், இளமையும், நல்ல குணங்களும் நிறைந்த ஒரு வாழ்க்கையை இப்படி வீசி எறிவது இதயமற்ற செயலல்லவா? உண்மையான ஊர்சுற்றி சாவைக் கண்டு பயப்பட மாட்டான். மரணத்தின் நிழலுடன் அவன் விளையாடுவான். ஆனால் சாவைத் தோற்றோடச் செய்வதே அவனது குறிக்கோளாக இருக்கும். அவன் தன் மரணத்தால், மரணத்தையே வெற்றி கொள்கிறான்.

# 7. ஊர்சுற்றி இனங்களிடையே

உலகத்தின் எல்லா நாடுகளிலும், இனங்களிடையேயும் சுற்றித் திரிவதைப்போல், காடுகளில் வாழும் பழங்குடியினரிடையேயும் ஊர்சுற்றி இனமக்களிடையேயும் சுற்றித்திரிய முடியாது. அதனால்தான் அப்படிப்பட்ட ஊர்சுற்றிகளுக்காக இங்கே விசேஷமாக எழுத வேண்டிய அவசியமேற்பட்டது. நம் நாட்டிலுள்ள சில ஊர்சுற்றி இனங்களைப் போலவே, வெளிநாடுகளிலும் ஓரிடத்திலோ அல்லது ஒரு குறிப்பிட்ட கிராமத்திலோ நிலையாக வீடு கட்டிக்கொண்டு வாழாமல், நிரந்தரமாக சுற்றித் திரிந்துகொண்டே இருக்கும் இனங்கள் இருக்கின்றன என்ற விஷயம் வருங்கால ஊர்சுற்றிகளுக்குத் தெரிந்திருக்கலாம். அந்த இனங்களைச் சேர்ந்த மக்கள், தங்கள் வீட்டையும், கிராமத்தையும் தம்முடைய தோள்களிலேயே சுமந்து திரிகிறார்களென்றும் சொல்லலாம். இப்படிப்பட்ட ஊர்சுற்றி இன மக்கள் நம் நாட்டிலும் லட்சக்கணக்கில் இருக்கிறார்கள். ஐரோப்பாவிலும் அவர்களின் எண்ணிக்கை மிக அதிகமாகவே இருக்கும். குளிர் காலமானாலும், கோடைக் காலமானாலும், மழைக் காலமானாலும் அவர்கள் திரிந்துகொண்டே இருப்பார்கள். வாழ்வதற்காக எதாவதொன்று செய்யவேண்டுமல்லவா! அவர்கள் இடையிடையே பத்துப் பதினைந்து நாட்கள் ஒரு இடத்தில் முகாம் போடுவார்கள். நமது இளைஞர்களும் இவர்களை அவ்வப்பொழுது தமது கிராமங்களில் பார்த்திருக்கக்கூடும். ஏதாவதொரு பெரிய மரத்தின் நிழலில் மேடாகவுள்ள இடத்தைப் பார்த்து அவர்கள் தம் குடிசையை அமைத்துக் கொள்வார்கள். ஐரோப்பாவிலுள்ளவர்கள் கூடாரங்களைப் போட்டுக் கொள்வார்கள். நம் நாட்டில் மழைக் காலங்களில் உயர்ரக கூடாரங்களாக இருந்தால்தான் மழைநீர் உள்ளே கசியாமல் இருக்கும். கூடாரங்களுக்குப் பதிலாக நம் நாட்டில் குடிசைகளே அதிகம். இந்தக் குடிசைகளைப் பளுவில்லாமல் லேசாக இருக்கும் நாணலினால் அமைத்துக்கொள்கிறார்கள். இதனால் கூடாரத்தை விட குடிசையே லேசாக இருக்கும். மழை நீரும் அவ்வளவு சுலபமாக உள்ளே கொட்டாது. அதனால் குடிசைக்குள்ளிருப்பவர்கள் நனைவார்களென்று

பயம் இருக்காது. நாணல் மிருதுவாக இருப்பதால், விரைவில் உடைந்தும் போகாது. அது மெத்தென்று ஒன்றோடொன்று அமுங்கிப் போவதால், மழைநீர் கசிவதற்கில்லை. இத்தனை நன்மைகளுடன் நாணல் வெகுமலிவானது. நாணலினால் குடிசை அமைப்பதற்குப் பெரிய திறமையும் தேவையில்லை. அதனால் ஊர்சுற்றி இனமக்கள் சுலபமாகக் குடிசைகளை அமைத்துக் கொண்டு விடுகிறார்கள்.

மழைக் காலத்தில் பேய் மழை தொடர்ந்து விடாமல் பெய்து கொண்டே இருக்கிறது. வீட்டு வாசற்படியில் சேறும் சகதியும் சொல்லத் தரமல்ல. அதோடு சாணமும் கலந்து சகிக்க முடியாத துர்நாற்றம் வீசிக் கொண்டிருக்கிறது. சேற்றிலும் சகதியிலும் கால் வைத்து நடப்பதால், நாலைந்து நாட்களில் பாதங்களில் சேற்றுப்புண் வந்துவிடுகிறது. அதனால் கிராமத்து விவசாயிகள் உயரமான மரக் கட்டையினாலான காலணிகளை அணிகிறார்கள். அந்த மரக்காலணி களை நாம் பட்டிக்காட்டுச் சரக்கென்று கருதுகிறோம். நகரங்களிலும் கிராமங்களிலும் உள்ள நாகரிகமானவர்கள் அவற்றை அணிவது அநாகரிகமென்று எண்ணுகிறார்கள். ஆனால் ஜப்பானில் கிராமங் களிலும், நகரங்களிலும் உள்ள நாகரிகமான ஆண்களும் பெண்களும் மரக்காலணிகளைப் பெருமையுடன் அணிந்து நடந்து செல்கிறார்கள். அங்கே இவற்றை யாரும் அநாகரிகமானவைகளாகக் கருதுவதில்லை. மழைக் காலத்தில் ஊர்சுற்றிப் போகவேண்டுமென்ற விருப்பமுள்ள ஊர்சுற்றி வாலிபர்கள் சாதாரணமாக இருக்க மாட்டார்களென்பது வாஸ்தவம்தான்! அதே போல் கிராமத்துக்கு வெளியே ஒரு பெரிய மரத்தினடியிலோ, அல்லது குளக்கரையிலோ ஊர் சுற்றி இனத்தாரும் தமது குடிசைக்குள்ளேயே முடங்கிக் கிடப்பதைக் காணலாம். நான்கடி நீளமும், மூன்றடி அகலமுமுள்ள குடிசையில் இரண்டு, மூன்று குடும்பத்தினர் முடங்கிக் கொண்டிருப்பார்கள். தம்முடைய எருமைக்கு மேய்ச்சல் கிடைக்காதே என்ற கவலை அவர்களுக்குக் கொஞ்சமாவது இருக்கத்தான் செய்யும்.

ஊர்சுற்றும் இனத்தவர் பெரும்பாலும் எருமையையோ அல்லது கழுதையையோதான் விரும்புகிறார்கள். ராஜஸ்தானத்திலும், புந்தேல்கண்ட் பகுதியிலும் சுற்றித் திரியும் கருமார்கள் மட்டும் ஒற்றை மாட்டு வண்டியை வைத்திக்கிறார்கள். அவர்கள் பால் தரும் எருமையை வைத்துக்கொள்வதில்லை. அவர்கள் சாதாரணமாக மலட்டு எருமையை வைத்துக் கொள்வதன் காரணம், அது மலிவாகக் கிடைப்பதேயாகும், மழைக் காலத்திலும் புல்லுக்கு அவ்வளவாகத் தட்டுப்பாடு இருக்காது, ஆங்காங்கே முளைத்திருக்கும் புல்லை மேய்க்கவோ, வெட்டவோ விவசாயிகளும் அந்தச் சமயத்தில்

ஆட்சேபணை சொல்வதில்லை. ஆனால் எருமையை அவிழ்த்து வெளியே விட்டுவிட முடியாது. அது எவருடைய வயலிலாவது இறங்கி மேயவாரம்பித்தால்...? ஊர்சுற்றி இனத்தவன் தன்னுடைய எருமையையோ, கழுதையையோ, நாயையோ கவனிக்காவிட்டாலும், மனைவி மக்களைக் கவனித்துத்தான் ஆகவேண்டும். தன்னுடன் குடும்பம் வைத்திருப்பதைப் பாவமாகக் கருதும் முதல் ரக அல்லது இரண்டாம் ரக ஊர்சுற்றி அவனல்லவே! பல நாட்கள் தொடர்ந்து விடாது மழை பெய்து கொண்டிருந்தால், அவனுக்கும் கவலை ஏற்படலாம். ஏனெனில் அவனிடம் வங்கியின் 'செக்' புத்தகமோ, கடன் வாங்க வாய்ப்பளிக்கக் கூடிய வீடு, வாசலோ, நிலபுலனோ எதுவுமே இல்லை. அவன் நாணயமானவனா, இல்லையா என்பதல்ல இங்கு கேள்வி! நாணயமானவனானாலும், அவனை நம்பி யார் கடன் கொடுப்பார்கள்? அவன் இன்று இங்கு இருக்கிறான், நாளை பத்து மைல்களுக்கு அந்தப் பக்கம் இருப்பான், ஐந்து மாதங்களுக்குப்பின் உத்தரப்பிரதேசத்தை விட்டு, வங்காளத்திற்குள் போய்விட்டிருப்பான். ஊர்சுற்றி இனத்தான் அன்றாடங் காய்ச்சிதான்! குடிசைக்குள் அரிசி இருந்தாலும், விறகுக் கவலை இருக்கத்தானே செய்யும்! கொட்டும் மழையில் உலர்ந்த விறகு எப்படிக் கிடைக்கும்? உலர்ந்த விறகை வைத்திருக்க அவனுக்கு வீடு இல்லையே! திருட்டுத்தனமாக எங்கிருந் தாவது உலர்ந்த விறகைக் கொண்டு வந்தால்தான் அடுப்பெரியும்:

ஊர்சுற்றி இனத்தவரின் பொருளியலைப் புரிந்து கொள்வது மேதாவிகளுக்கும் கடினமாகும். ஒவ்வொரு குடிசையிலும் ஐந்தாறு பேர் கொண்ட குடும்பமிருக்கும். அவர்களிலே கல்யாணமானதுமே மகன் தனியாகக் குடிசைஅமைத்துக்கொண்டு விடுகிறான். அப்படி இருந்தும் ஐந்தாறு பேர் கொண்ட குடும்பம் எப்படி நடக்கிறது? அவர்களுடைய தேவைகள் மிகக் குறைவு என்பது உண்மைதான். என்றாலும் நடமாடவும் கைகளால் வேலை செய்யவும் தேவையான இரண்டாயிரம் 'காலரிகள்' உணவு ஒவ்வொருவருக்கும் அவசியமாகும். வாழ்வதற்குச் சாதனங்களாகச் சிலரிடம் ஆண் குரங்கும், பெண் குரங்குமிருந்தால், இன்னும் சிலரிடம் குரங்கும், ஆடும் இருக்கும். மற்றும் சிலர் கரடி அல்லது பாம்பு வைத்திருப்பார்கள். சிலர் மூங்கிலாலோ, பிரம்பாலோ கூடைகள் முடைந்து விற்பதன் பேரால் பிச்சை எடுப்பார்கள். சிலர் தேகப் பயிற்சி முதலியவை செய்யும் வித்தை காட்டுபவர்களாக இருப்பார்கள். மழைக்காலத்தில் அவர்கள் எங்கேயாவது ஒரு கிராமத்தில் அங்கே தேகப்பயிற்சிக் குழு அமைந்து விடும், ஒன்றிரண்டு மாதங்கள் தங்கிவிட்டால், அக்கிராமத்து வாலிபர்கள் குஸ்தி பிடிப்பதையும் கற்றுக்கொள்வார்கள், அந்தக் காலத்திலெல்லாம் கிராமங்களில் மக்கள் தொகை குறைவாக இருக்கும்.

பசுக்களையும், எருமைகளையும் நிறைய வளர்ப்பார்கள். காரணம், கிராமங்களைச் சுற்றியும் அடர்ந்த காடுகளிருக்கும். அந்தக் காலத்தில் குஸ்தியைக் கற்றுக்கொண்ட, வாலிபன் வித்தையைக் கற்றுத் தந்ததற்காகக் கடைசியில் குருவுக்கு ஒரு எருமையைப் பரிசாகக் கொடுப்பான். ஆனால் இன்று ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள எருமையை யார் பரிசாகத் தருவார்கள்.

ஊர்சுற்றி இனத்துப் பெண்கள் பச்சை குத்துவார்கள். பழங் காலத்தில் பச்சை குத்திக் கொள்வதை மங்களகரமானதாகக் கருதினார்கள். ஆனால் இன்னும் சில நாட்களில் அது மறைந்து விடும் போல் தோன்றுகிறது, பச்சை குத்துவதற்குப் பதிலாக அவர்களுக்குத் தானியங்கள் கிடைத்து வந்தன. ஆனால் இன்று தானியங்களின் அகவிலையை நோக்கும்போது, பச்சை குத்திக்கொள்பவர்கள் தானியங்களாகக் கொடுப்பதை விட, பணமாகக் கொடுப்பதையே விரும்புவார்கள்.

ஏழு நாட்களாக அடை மழை பெய்து கொண்டிருக்கிறதென்று வைத்துக்கொள்ளுங்கள். குடிசையிலிருந்த எல்லா உணவுப் பொருட்க ளுமே தீர்ந்து போய்விட்டன. "கடவுளே! கொஞ்ச நேரம் மழையை நிறுத்திக்கோ! நான் இந்தக் குரங்குகளை வெளியே கொண்டுபோய் ஆட்டம் காட்டி, என் குடும்பத்தில் உள்ளவர்களுக்குச் சாப்பாடு சம்பாதிச்சுக்கறேன்!" என்று குடும்பத் தலைவன் கடவுளை வேண்டிக் கொள்கிறான். மழையின் வேகம் சற்றுக் குறைந்ததுமே, அவன் குரங்கு களைக் கூட்டிக் கொண்டு தெருக்களுக்கு வந்து விடுகிறான். அந்த வேடிக்கையை ஏற்கெனவே பலமுறை பார்த்திருந்தாலும், அவனது உடுக்கையின் ஒலியைக் கேட்டதும், மக்கள் கூட்டம் சூழ்ந்து விடுகிறது. கிராம மக்களுக்கு வேறு பொழுதுபோக்கு ஏது? வேடிக்கை யைப் பார்த்த பிறகு சிலர் காசும், சிலர் உணவும், சிலர் பழைய துணிகளும் தருகிறார்கள். பொழுது சாயும்போது அவன் தன் குடிசைக்கு வந்து சேருகிறான். குடிசையைப் பார்த்துக் கொள்ளும் பொறுப்பைக் குடும்பத்திலுள்ள கிழவிக்கு ஒப்படைத்து விட்டு, மற்ற பெண்களும் வெளியே புறப்பட்டு விடுகிறார்கள். மாலை வேளையில் தரையில் பள்ளம் தோண்டி அடுப்பை மூட்டிக் குடிசைக்குள் தொங்கிக்கொண்டிருக்கும் அலுமினியப் பாத்திரத்தை உலையில் ஏற்றி விடுகிறார்கள். தமக்குக் கிடைத்த மட்டமான அரிசியை அதில் போட்டு, சோறாக்கத் தொடங்குகிறார்கள். சோற்றின் மணம் மூக்கில் நுழைந்ததுமே குழந்தைகளின் நாவில் நீர் ஊறுகிறது.

ஊர்சுற்றி இனத்தவரின் வாழ்க்கை சுவையற்றதாக இருப்பினும், அவர்கள் அதையே வாழ்ந்துகொண்டிருக்கிறார்கள். என்ன செய்வது? மூதாதையர் காலத்திலிருந்து அவர்கள் அப்படிப்பட்ட வாழ்க்கையையே

பார்த்திருக்கிறார்கள். ஆனால் அவர்களது வாழ்வின் எல்லா நாட்களுமே சுவையற்றதாக இருக்குமென்று எண்ணிவிட வேண்டாம். அவர்களிலும் ஒரு காலத்தில் இளமை பொங்குகிறது. தங்கள் இனத்துக்குள்ளேயே கல்யாணம் செய்துகொண்டாலும், இளைஞர்களும் யுவதிகளும் ஒருவருக்கொருவர் தெரிந்தவர்களாகவே இருப்பார்கள். திருமணங் களும் அவர்களுடைய விருப்பப்படியே நடக்கும். அவர்களும் காதலில் ஊடலும் செய்கிறார்கள். பிறகு கூடிக் கொள்ளவும் செய்கிறார்கள். அவர்கள் காதல் கீதங்களைப் பாடுகிறார்கள். பல குடும்பங்கள் ஒன்று சேரும்போது நடனமும் ஆடுகிறார்கள். வாத்தியங்களுக்கு என்ன குறை? அவர்களிலேயே பாம்பாட்டியும் இருக்கிறான், பாம்பாட்டியின் இசைக்குப் பாம்பே படமெடுத்து ஆடும்போது, மனிதர்கள் நடனமாட மாட்டார்களா? துன்பமும் துயரமும் சூழ்ந்த நீண்ட காலமிருப்பினும், அவற்றை மறப்பதற்கான வழிகளும் அவர்களிடம் நிறையவே இருக்கின்றன. பல யுகங்களாக அவர்கள் பாடிக்கொண்டிருக்கின்றனர். வருடக்கணக்காக அவர்கள் சுற்றித்திரியும் பிரதேசங்களின் மக்கள் அவர்களுக்கு அறிமுமானவர்கள். அவர்களிடம் கதைகள் சொல்லவும், வம்பளக்கவும் விஷயங்களுக்குப் பஞ்சமில்லை. அவர்கள் எப்படி யாவது தமது வேதனைகளை மறந்து, வாழ்வதற்கான வழிகளைக் கண்டுபிடித்து விடுகிறார்கள். நம் நாட்டு ஊர்சுற்றி இனத்தவரின் ஜீவனுள்ள வாழ்க்கைமுறை இது. இவர்களில் ஒரு இனத்தவரைப் 'பஞ்சாரக்கள்' என்று கூறுகிறோம். இவர்கள் ஒரு காலத்தில் வியாபாரம் செய்துகொண்டிருந்தனர். அவர்கள் வியாபாரச் சரக்கு களை எருதுகளின் மேலும், மற்ற கால்நடைகளின் மேலும் போட்டு, ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குச் சென்றுகொண்டிருந்தனர்.

இந்தியாவிலுள்ள ஊர்சுற்றி இனத்தவரின் தலையில் துன்பமும் துயரமும்தான் எழுதப்பட்டிருக்கிறது. மக்கள் பெருக்கத்தால் கிராமங் களும், நகரங்களும் இறுக்கமானதாகிவிட்டன, இதனால் வாழ்க்கைப் போராட்டமும் தீவிரமாகிவிட்டது. விவசாயிகளின் நிலைமை மிக மோசமடைந்துவிட்டது. இனி ஊர் சுற்றி இனமக்களின் நிலைமை எப்படி நன்றாக இருக்கும்? ஐரோப்பாவிலும் இவர்களின் நிலைமை அவ்வளவு நன்றாயில்லை. அவர்களுக்கும், நம்மவர்களுக்கும் உள்ள வேற்றுமைக்குக் காரணங்கள்: நம் நாட்டைப் போல் அங்கே மக்கள்தொகை பெருகவில்லை. அவர்களின் வாழ்க்கைத் தரம் நம்மைக் காட்டிலும் உயர்ந்திருக்கிறது. அங்குள்ள ஊர்சுற்றி இனத்தவர் நம்மவரைவிட வேலைகள் செய்வதில் சுறுசுறுப்பானவர்கள். ஐரோப்பாவிலுள்ள ஊர்சுற்றி இனத்தவர் நம்நாட்டு ஊர்சுற்றி இனத்தவரின் உறவினர்தான்! அவர்கள் அனைவரும் இந்தியாவிலும், ஈரானிலும், மத்திய ஆசியாவிலும் சுற்றிக்கொண்டே இருப்பவர்கள்.

ஐரோப்பாவிலுள்ளவர்கள் ஏதோ ஒரு காரணத்தால், தம் தாய் நாடான இந்தியாவுக்குத் திரும்பி வராமல், மேலும் மேலும் முன்னேறிச் சென்று கொண்டே இருந்துவிட்டார்கள். இவர்கள் தம்மை 'ரோம்கள்' என்று கூறிக் கொள்கிறார்கள். இந்தியாவிலிருந்து அவர்கள் சென்று பல காலமாகிவிட்டது. அவர்கள் பதினைந்தாம் நூற்றாண்டில் ஐரோப்பாவுக்குள் நுழைந்ததாகத் தெரியவருகிறது. தாம் இந்தியாவிலிருந்து வந்தவர்களென்பதையே அவர்கள் இப்பொழுது மறந்துவிட்டார்கள். 'ரோமானியர்கள்' அல்ல 'ரோமர்கள்' என்னும் சொற்களால், தாம் ரோம் நகரத்திற்குச் சம்பந்தப்பட்டவர்களென்று மட்டுமே அவர்கள் இப்பொழுது கருதுகிறார்கள். இங்கிலாந்தில் அவர்களை 'ஜிப்ஸிகள்' என்றழைக்கிறார்கள். அதனால் 'ஈஜிப்ட்'டுடன் (எகிப்துடன்) அவர்களுக்கு ஏதாவது தொடர்பு இருக்குமோவென்ற பிரமை தோன்றுகிறது. உண்மையில் அவர்களுக்கு எகிப்துடனோ, ரோமுடனோ எந்த விதமான தொடர்பும் கிடையாது. சோவியத் யூனியனில் அவர்களை 'ஸிகான்கள்' என்று சொல்கிறார்கள். ரோமானியர்கள் பதினொன்று அல்லது பன்னிரண்டாம் நூற்றாண்டில் இந்தியாவை நிரந்தரமாகப் பிரிந்து சென்றுவிட்டனரென்று ஆராய்ச்சிகளால் தெரிய வருகிறது. எழுநூறு ஆண்டுகளுக்குள் அவர்கள் தாம் இந்தியாவுடன் தொடர்புடையவர்கள் என்ற விஷயத்தையே மறந்துவிட்டனர். இன்றும்கூட அவர்களில் பலர், இந்தியர்களைப் போன்றே உருவமைப்பு கொண்டுள்ளனர். என் நண்பரொருவர் ரோமனைப் போல் வேடமணிந்து பிரிட்டனுக்குள்ளும் நுழைந்து விட்டார். விமான நிலையத்தில் எவரும் அவருடைய 'பாஸ்போர்ட்டை'யும் பரிசீலனை செய்யவில்லை: மொழி இயல் நிபுணர்கள் மட்டும் கடும் ஆராய்ச்சி செய்து உண்மையை நிலை நாட்டாமல் இருந்திருந்தால், ரோமானியர்கள் உண்மையில் இந்திய ஊர்சுற்றி இனத்தவரே என்பதை யாரும் நம்பவும் மாட்டார்கள். ஐரோப்பாவுக்குச் சென்ற பின்பும் அவர்கள் தம்முடைய பழைய தொழில்களையே- அதாவது ஆட்டமும் பாட்டமும், குரங்கையும், கரடியையும் வைத்து வித்தை காட்டுதல் போன்றவைகளையே- செய்து கொண்டிருக்கின்றனர். குதிரைகளையும், யானைகளையும் பராமரிப்பதிலும் அவர்கள் நல்ல பெயர் பெற்றிருக்கின்றனர். அவர்கள் பேசும் மொழியில் நூற்றுக்கணக்கான இந்தி மொழிச்சொற்கள் இருப்பதைப் பார்த்து மொழி ஆராய்ச்சியாளர்கள் அவர்களின் முன்னோர் இந்தியர்களே என்ற முடிவுக்கு வந்து விட்டனர்.

சென்ற எழுநூறு ஆண்டுகளாக நமது இந்திய ஊர்சுற்றி இனத்தவர் வெளிநாடுகளில் சுற்றிக் கொண்டிருக்கிறார்கள். அங்கெல்லாம் குடிசை வேய நாணல் கிடைக்காததால், துணியினாலான டேராக்களையே

தமது வீடுகளாக்கிக்கொண்டனர். அந்நாடுகளில் குதிரைகள் சுலபமாகவும் கிடைக்கும்: உபயோககரமாகவும் இருக்கும். அவை தமது யஜமானர்களை ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்துக்கு மிக விரைவாகக் கொண்டு போகும். ஐரோப்பாவில் குதிரைகளுக்கு நல்ல கிராக்கியும் இருக்கிறது. இதனால் அங்குக் குதிரை வளர்ப்பு மிகவும் லாபகரமானதாக இருக்கிறது. நமது ரோமானியர்கள் தமது சாமான்களை இழுத்துச் செல்லக் குதிரை வண்டியையே தேர்ந்தெடுத்துக் கொண்டனர். டிசம்பர், ஜனவரி, பிப்ரவரி மாதங்களில் பயங்கர மழையாயிருந்தாலும் சரி, மழையினால் மோசமான சேறாக இருந்தாலும் சரி, ரோமானியர் ஓரிடத்திலிருந்து வேறோர் இடத்துக்குப் போய்க் கொண்டே இருப்பார்கள். அவர்களுடைய நடனமும், சங்கீதமும் முதலில் மலிவாகவும், சுலபமாகவும் இருந்ததனால் புகழ் பெற்றவர்கள் பிறகு நல்ல கலைஞர்களாகவும் பிரசித்தி பெற்றனர். அவர்கள் ஐரோப்பியரை விடச் சற்றுக் கறுப்பாக இருப்பார்கள்: ஆனால் நம்மைவிட எவ்வளவோ சிவப்பாக இருப்பார்கள். அத்துடன் அழகிகள் பலரையும் தோற்றுவித்த பெருமை அவ்வினத்துக்கு உண்டு. ரோமானியர்கள் இசையிலும், நடனத்திலும் மட்டும் புகழ் பெற்றவர்களல்லர்: ஆரூடம் சொல்வதிலும் அவர்கள் திறமை பெற்றவர்கள். பிச்சையெடுப்பதன் ஒரு பகுதியாகவே அவர்கள்ஆரூடம் பார்க்கிறார்கள் என்பதறிந்தும், மக்கள் அவர்கள் முன்னே கைகளை நீட்டி விடுகிறார்கள்.

நம் நாடு சுதந்திரமடைந்த பிறகு, குழந்தைகளைப் பிடித்துப் போவதைப்பற்றி அடிக்கடி கேள்விப்படுகிறோம். ஆனால் ஐரோப்பாவில் ரோமானியர்கள் முதலிலிருந்தே குழந்தை பிடிப்பவர்களென்று கெட்ட பெயர் பெற்றிருக்கிறார்கள். ஐரோப்பிய ரோமானியர்கள் நம் நாட்டு ஊர்சுற்றி இனத்தவரைப்போல் அவ்வளவு அவல நிலைமையில் இல்லை. என்றாலும் தமது எதிர்காலத்தைக் கூடாரங்களாகத் தம் தோள்களிலேயே சுமந்து, திரிந்துகொண்டிருக்கிறார்கள். அங்கேயும் "அன்றாடங் காய்ச்சி"களாகவே தமது வாழ்க்கையைக் கழித்துக்கொண்டிருக்கிறார்கள். ஆனாலும், குதிரைகளை விற்பதும், வாங்குவதும், இன்னும் சில பொருட்களின் வியாபாரம் செய்வதிலும் அவர்கள் ஈடுபடுவதால், வாழ்க்கையைத் தள்ள மேலும் சில வழிகளை அவர்கள் பெற்றிருக்கிறார்கள். அவர்கள் வாழ்க்கை மாற்றமில்லாததாகத் தென்பட்டாலும் ஒரேயடியாகச் சாரமற்றதாக இருக்கவில்லை. இந்த ஊர்சுற்றிகள் நாடுகளின் எல்லைகளைக் கடந்து, சுதந்திரமாகத் திரிந்துகொண்டிருக்கின்றனர். யாரைப் பற்றியுமோ அல்லது எதைப் பற்றியுமோ அவர்கள் கவலைப்படுவதே கிடையாது. அதைப்

பார்க்கும் போது நமக்குள்ளும் அவர்களைப்போல் வாழ வேண்டு மென்ற ஏக்கம் உண்டாகிறது. ரஷ்யாவின் காளிதாசனான புஷ்கின் ஒருமுறை தன் வாழ்க்கையை அவர்களுடைய வாழ்க்கையுடன் பண்டமாற்றுச் செய்து கொள்ளவும் தயாராகிவிட்டார். ரோமானிய இளம் பெண்களின் நீண்ட கருவிழிகள், அவர்களின் தேனினும் இனிமையான குரல், மயில் தோகையைப் போன்ற அழகிய கூந்தல் ஐரோப்பாவில் எத்தனையோ இளவரசர்களைக் கட்டிப்போட்டு விட்டன. எத்தனையோ பேர் தம் அரச மாளிகைகளைத் துறந்து, அவர்களின் கூடாரங்களில் தஞ்சம் புகுந்தனர். உண்மையாகவே ரோமானியர் வாழ்க்கை சுவையற்றதல்ல. நமது ஊர்சுற்றிகளுக்கும் ரோமானியரோடு சுற்றித் திரிவது மிகவும் சுவையானதாக இருக்கும். ஐரோப்பாவில் ஊர்சுற்றி வாழ்க்கையை விட்டு ஓரிடத்தில் நிலையாக வாழ்வது அதிகமாகிக் கொண்டே வருகிறது. இதனால் ரோமானியர் இனமும் தம்முடைய தனித்தன்மையை இழந்துவிடும் அபாயம் ஏற்பட்டுள்ளது. ஒரு சில இந்தியர்களும் ரோமானியர் வாழ்க்கையை ஆழ்ந்து கவனிக்க விரும்பினர் என்று கூற இயலாது. உண்மையில் துன்பமும் இன்பமும் அனுபவிக்கத் தயாராயுள்ள இளைஞர்களே அவர்களின் கூடாரங்களில் இருக்க முடியும். ஐரோப்பாவில் எஞ்சிய ரோமானியரும் நம் நாட்டு ஊர்சுற்றி இனத்தவரைவிட வசதியாக வாழ்கிறார்கள் என்பது உண்மை. ஐரோப்பிய சமுதாயத்தில் அவர்களைத் தாழ்ந்தவர்களாகக் கருதினாலும், நம் நாட்டு ஊர்சுற்றி இனத்தவரைப் போன்ற ஈனமான நிலை அவர்களுக்கில்லை.

இங்கே நமது பக்கத்திலுள்ள திபேத்திய ஊர்சுற்றிகளைப் பற்றிக் கொஞ்சம் சொல்வது அவசியம். முதன் முதலாக நான் 1926-ல் திபேத்துக்குப் போயிருந்தபோது, அங்குள்ள ஊர்சுற்றிகளின் வாழ்க் கையைக் கண்டதும், எல்லாவற்றையும் துறந்துவிட்டு, அவர்களுடன் சேர்ந்துகொண்டுவிட வேண்டுமென்று உள்ளம் துடித்தது. அதன் பிறகும் பல வருடங்கள் வரை அவ்வாய்ப்பைக் பயன்படுத்திக்கொள்ள வேண்டுமென்றே என் மனம் கருதிக்கொண்டிருந்தது. அவர்களைச் சேர்ந்த எந்த விஷயம் என்னை இப்படிக் கவர்ந்திழுத்தது? இது ஊர்சுற்றிகள் ஒவ்வொரு ஆண்டும் டெல்லிக்கும் இமயத்திலுள்ள மானஸரோவரத்துக்கும் இடையே திரிந்துகொண்டே இருக்கிறார்கள். இது அவர்களுக்குக் குழந்தைகள் விளையாட்டாகும். சிலர் சிம்லாவி லிருந்து சீனா வரை கால்நடையாகவே பிரயாணம் செய்துகொண்டிருக் கிறார்கள். ஆனால் அவர்களின் குடும்பம் சிறியதாகவே இருக்கும். ஏனெனில் எல்லாச் சகோதரர்களுக்கும் ஒரே மனைவி இருப்பாள். தங்குவதற்குத் துணியினாலான கூடாரம் இருக்கும். இங்கே அதிக மழை பெய்யாது: மழைக் காலங்களில் அவர்கள் பயணம் தொடரவும்

மாட்டார்கள். ஆகவே துணிக் கூடாரமே அவர்களுக்குப் போதுமானது. அவர்கள் விற்பதற்காகச் சில சில்லறைச் சாமான்களும் வைத்திருப்பார்கள். அவர்களுடைய சாமான்களைச் சுமந்து செல்ல அப்பாவித்தனமான இரண்டு, மூன்று கழுதைகளும் இருக்கும் அவற்றுக்குத் தேவையான புல்லைப்பற்றிய கவலை இருக்காது. ஆனால் ஓநாய்கள் போன்ற பயங்கர மிருகங்களிடமிருந்து கழுதைகளைக் காப்பாற்ற எச்சரிக்கையாக இருக்க வேண்டும். ஏனெனில் இந்த மிருகங்களுக்குக் கழுதைகள் இனிப்பைப் போல் ருசிகரமானவை. எவ்வளவு குறைந்த சுமை! எப்படிப்பட்ட கவலையில்லா வாழ்க்கை! எவ்வளவு தூரப் பிரயாணம்! 1926-ம் ஆண்டு இந்த வாழ்க்கையில் எனக்குக் கவர்ச்சி ஏற்பட்டது. இதுநாள்வரை எனது ஆசை நிறைவேறாவிட்டாலும், அந்த வாழ்க்கையின் கவர்ச்சி மட்டும் குறையவே இல்லை. இந்தத் திபேத்திய ஊர்சுற்றி இனத்தவர் தம்மை 'கம்ப்பாக்கள்' அல்லது 'கியம் கம்ப்கள்' என்று கூறிக்கொள்கிறார்கள். இவர்களை நம் நாட்டு ஊர்சுற்றி இனத்தவரோடு ஒப்பிட முடியாது. சென்ற ஆண்டு ஒரு கம்பா வாலிபருடன் ஊர்சுற்றி வாழ்க்கையைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தேன். நான் மனசுக்குள் ஊர்சுற்றி வாழ்க்கையை விரும்பிக் கொண்டிருந்தாலும், அதன் கஷ்ட நஷ்டங்களைப்பற்றிப் பெரிதாகச் சொல்லிக் கொண்டிருந்தேன். அப்பொழுது கம்ப்பா வாலிபன் கூறினான். "ஊர்சுற்றி வாழ்க்கை சுகமானதல்ல என்பது உண்மைதான். ஆனால் கிராமங்களில் வீடுகளை அமைத்துக்கொண்டு வாழ்பவர் களின் வாழ்க்கையும் மகிழ்ச்சிகரமாக இல்லையே! எங்களுக்கு அவர்கள் வாழ்க்கையே துன்பம் நிறைந்ததாகத் தெரிகிறது. சிம்லாவின் மலைப் பகுதியில் தேயிலையும், சர்க்கரையும், வெண்ணெயும், ருசிகரமான உணவையும் சாப்பிடுகிற விவசாயிகள் யாராவது இருக்கிறார்களா? இமயமலையின் மானஸரோவரத்திலுள்ள ஆடு மேய்ப்பவர்களில் சிகரெட் பிடிப்பவர்கள் எத்தனை பேர்? எலுமிச்சஞ் சாறு குடிப்பவர்கள் எத்தனை பேர்? நாங்களே தினமும் இறைச்சியும், வெண்ணெயும் சாப்பிடுகிற இடங்களில் இருக்கிறோம். சிம்லா அல்லது டெல்லிப் பகுதிகளுக்குச் சென்றாலும், அங்குள்ள விவசாயி களைக் காட்டிலும் நாங்கள் நல்ல சாப்பாடே சாப்பிடுகிறோம்."

விஷயம் தெளிவாகவே இருக்கிறது. அந்தக் கம்ப்பா இளைஞன் தன் வாழ்வை வசதி நிறைந்த நிலையானதொரு வாழ்க்கையுடன் மாற்றிக் கொள்ளத் தயாராயில்லை, விரும்பியபோதெல்லாம் சிம்லாவிலிருந்து சீனத்துக்குப் போக அவனுடைய கால்கள் தயாராக இருந்தன. போகும் வழியெல்லாம் விசித்திரமான மலைகள், முதலில் காடுகளால் சூழப்பட்ட உயர்ந்த மலைச் சிகரங்கள், பின்னர் உயரமான விரிவான மைதானத்தில் செடி கொடிகளற்ற திபேத்திய மண்ணில்

பல நூறு மைல்கள் தூரம் பரவிய பிரம்மபுத்திரா ஆற்றின் ஈரமான நிலம். இவைகளையெல்லாம் தாண்டிக் கொண்டு சீனம் போய்ச் சேர்வது ஒரு மகிழ்ச்சிகரமான அனுபவமல்லவா! இரண்டு ஊர் சுற்றிகளின் மனத்தில் ஒற்றுமை ஏற்பட்டுவிட்டால், அவர்கள் ஒருவரை யொருவர் கூடப் பிறந்த சகோதரர்களாகவே கருதிக்கொள்கிறார்கள். கூடப் பிறந்த சகோதரர்கள் என்றால் ஒரே பெண்ணைக் கூட்டாகத் திருமணம் செய்து கொள்பவர்கள்தானே! திபேத்திய ஊர் சுற்றிகள் அவ்வளவு பரந்த மனப்பான்மையுள்ளவர்கள்!

நாம் இங்கு உதாரணத்துக்காக மூன்று நாடுகளின் ஊர் சுற்றி இனத்தவர் வாழ்க்கையை விவரித்தோம். உலகத்தின் மற்ற நாடு களிலும் இப்படிப்பட்ட எத்தனையோ இனங்கள் வாழ்கின்றன. இந்த ஊர் சுற்றிக் குடும்பங்களுடன் சேர்ந்து ஓரிரு வருடங்கள் வாழ்வதில் எவ்வளவோ நன்மைகள் உண்டு. அவர்களுடைய வாழ்க்கையைத் தூரமாக நின்று கவனித்து ருஷ்யக் கவிஞர் புஷ்கின் கவிதையைப் புனைந்தார். அவர்களுடன் சேர்ந்து வாழும் கவிஞனுக்கு, அதில் சுவை கிடைத்தால், புஷ்கினைக் காட்டிலும் நல்ல கவிதையை அவனால் இயற்ற முடியும். பல நாட்டு ஊர்சுற்றிகளைப் பற்றி இதுவரை எத்தனையோ எழுத்தாளர்கள் எழுதியிருக்கின்றனர். ஆனால் இன்னும் எவ்வளவோ எழுத எஞ்சி இருக்கிறது. ஓவியர்கள் அவர்களிடையே சென்று எத்தனையோ அழகிய ஓவியங்களைத் தீட்ட முடியும். அவர்களுடன் கொஞ்ச காலம் சேர்ந்து வாழ விரும்பும் ஊர்சுற்றி களுக்கு வாழ்ந்த பிறகு சற்றும் வருத்தம் ஏற்படாது. ஊர்சுற்றி இனத்தவருடன் சேர்ந்து திரிய விரும்பும் இளைஞன், அவர்களில் எல்லாருமே அறிவிலும், பண்பாட்டிலும் பிற்பட்டவர்களென்று எண்ணிவிடக் கூடாது. அவர்களில் பலருக்குக் கல்வி கற்கும் வாய்ப்பு கிடைக்காவிட்டாலும், அறிவிலும் பண்பாட்டிலும் சிறந்தவர்களாகவே இருக்கிறார்கள். ஊர்சுற்றி இளைஞன் அவர்களுடன் கலந்து வாழ்ந்து, தன் எழுத்துக் கலையையும், ஓவியக் கலையையும் பயனுள்ளதாக்கிக் கொள்ளலாம்: அவர்களுடைய மொழியைப் பற்றியும் ஆராய்ச்சி செய்யலாம்.

இந்திய ஊர் சுற்றி இனத்தவரைப் பற்றி இதுவரை எந்தவித ஆராய்ச்சியுமே மேற்கொள்ளப்படவில்லை. அவர்களின் மொழி, இலக்கியம், இனம் ஆகியன குறித்து ஆராய்ச்சி செய்ய விரும்புகிறவர்கள், அவற்றைப்பற்றி முன்பாகவே சற்றுத் தெரிந்து கொண்டிருக்க வேண்டும். ஆங்கிலேயர்கள் இவ்வாராய்ச்சியைத் தொடவில்லை. இந்தத் துறை இந்திய ஊர்சுற்றி இளைஞர்களுக்கு நல்ல வாய்ப்புகளை அளிக்கிறது. அவர்கள் தமது துணிவையும், அறிவுப் பசியையும், சுதந்திரமான வாழ்வையும் இதற்காகப் பயன்படுத்த வேண்டும்.

# 8. பெண் ஊர்சுற்றிகள்

ஊர்சுற்றி அறமென்பது எல்லா நாடுகளுக்குமே பொதுவான உலகு தழுவிய ஒன்றாகும். ஊர் சுற்றிப் பாதையில் அடியெடுத்து வைக்க எவருக்குமே தடை இல்லை. ஆகவே நம் நாட்டு யுவதிகளும் ஊர் சுற்றிகளாக விரும்பினால், மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும். பெண்ணாகப் பிறந்ததனாலேயே, அவளுக்குத் துணிவிருக்காது. போகாத இடங்களுக்குப் போக அவளுக்குத் தைரியமிருக்காது என்பதெல்லாம் உண்மையல்ல. பெண்களை அடிமை விலங்குகளில் பிணைக்காத நாடுகளிலுள்ள பெண்கள், வீர தீரப் பிரயாணங்கள் செய்வதில் பின்னடைவதில்லை. அமெரிக்கப் பெண்களும், ஐரோப்பியப் பெண்களும் ஆண்களைப் போலவே உள்நாட்டிலும், வெளிநாடு களிலும் சகஜமாகவே சுற்றுப் பயணம் செய்கின்றனர். ஐரோப்பியர் கல்வியிலும், பண்பாட்டிலும் மிகவும் முன்னேறியவர்களென்று சாக்கு கூறித் தட்டிக் கழிக்க முடியாது. அவர்கள் முன்னேறியவர்கள் என்றால், நாமும் அவர்களைவிடப் பின்தங்கி இருக்கக்கூடாது. ஆனால் ஆசியாவிலும் துணிவு நிறைந்த யாத்ரீகர்களுக்குக் குறைவில்லை. 1934-ல் நான் எனது இரண்டாவது திபேத்தியப் பயணத்தின்போது, லாசா நகரிலிருந்து தெற்கு நோக்கித் திரும்பி வந்துகொண்டிருந்தேன். பிரம்ம புத்திரா நதியைத் தாண்டி ஒரு கிராமத்தை அடைந்தேன். சற்று நேரத்துக்கு இரு யுவதிகள் அங்கு வந்து சேர்ந்தனர். திபேத்தியப் பாதைகளில் பயணிகளைக் கொள்ளை யடிக்கக் கொள்ளைக்காரர்கள் பதுங்கி இருப்பார்கள். ஆனால் அந்த யுவதிகள் கொஞ்சமும் அச்சமின்றிப் பயங்கரப் பாதைகளைக் கடந்து வந்திருந்தனர். அவர்கள் கிராமத்தில் ஒரு வீட்டுக்குள் நுழையும் போது, ஒருத்தியை ஒரு நாய் கடிக்காமல் இருந்திருந்தால், அந்த யுவதிகள் கிராமத்துக்குள் வந்திருப்பதே எனக்குத் தெரிந்திருக்காது. மருந்துக்காக அவர்கள் என்னிடம் வந்தபோது தான், எனக்கு அவர்களைப் பற்றித் தெரிய வந்தது. அவர்கள் அருகிலிருந்த ஒரு பிரதேசத்திலிருந்து வந்தவர்களல்ல. மிகவும் தொலைவிலுள்ள சீனத்தின் கன்ஸூப் பகுதியிலுள்ள 'வாங்கோ' நதிக்கருகில் உள்ள தமது

சொந்த ஊரிலிருந்து வந்திருந்தனர். இருவரும் இருபத்தைந்து வயதைக்கூடத் தாண்டவில்லை. அவர்கள் மட்டும் நல்ல துணிமணி களை உடுத்திக் கொண்டால், சீனத்தின் ராணிகள் என்று அவர்களைச் சொல்லிவிடலாம். இளம் வயதும், அழகும் நிறைந்த அவர்கள் 'வாங்கோ' ஆற்றைக் கடந்து, ஏழெட்டு நாட்கள் பயணம் செய்து அந்தக் கிராமத்துக்கு வந்து சேர்ந்திருந்தனர். அவர்களுடைய பயணம் அப்போதைக்கு முடிவு பெறவில்லை. இந்தியாவை அவர்கள் வெகு தூரத்து நாடாக எண்ணிக்கொண்டிருந்தனர். இல்லாவிட்டால், அதையும் சுற்றிப் பார்க்க அவர்கள் தயார்தான்! மேற்கில் மானஸ ரோவரம் வரையிலும், நேப்பாளத்தில் பௌத்த புண்ணியத்தலங் களைத் தரிசிக்கவும் அவர்கள் திட்டம் போட்டிருந்தனர். அவர்கள் கல்வியறிவு உள்ளவர்களல்ல. அவர்கள் தமது பயணத்தை அசாதாரண மானதாகவும் கருதவில்லை. இந்த ஊர்சுற்றி யுவதிகள் எவ்வளவு துணிவுள்ளவர்கள்? அவர்களைப் பார்த்த பிறகு, நமது இளம் பெண்களும் சிறந்த ஊர்சுற்றிகளாக முடியுமென்று நான் கருதினேன்.

ஊர் சுற்றும் உரிமை ஆண்களுக்கு உள்ளதைப் போலவே, பெண்களுக்கும் இருக்கிறது. பெண்கள் தம்மை ஏன் தாழ்ந்தவர்க ளென்று கருதிக் கொள்ள வேண்டும்? மனிதப் பரம்பரை மாறுவதை யடுத்து ஆண்களைப் போலவே, பெண்களும் மாறிக் கொண்டே இருக்கிறார்கள். மிகப் பழமையான காலத்தில் இந்தியாவில் பெண்கள் சுதந்திரமாகத்தான் வாழ்ந்தார்கள். சில நண்பர்கள் இந்துக்களின் சட்ட நூலான "மனுநீதி"யில் கூறப்பட்டிருப்பதை அடிக்கடி மேற்கோள்காட்டி, "மனுநீதி" சொல்லித்தான் பெண் களுக்குச் சுதந்திரம் கிடைத்ததாகப் பெருமையடித்துக் கொள்கின்றனர்.*

ஆனால் இது உண்மையல்ல. 'பெண் சுதந்திரத்துக்கு அருகதை யுடையவளல்ல' என்று கூப்பாடு போடும் இந்தப் பெரிய மனிதர்கள், பெண்கள் பெருமையைப் பற்றிக் கூறுகிறார்களென்றால், அதை நம்ப இயலாது. பெண்கள் பூஜிக்கப்படுவதைப் பற்றிப் பெருமையடித்து ஒருவருக்குக் கீழ்வரும் பொருளுள்ள ஒரு சமஸ்கிருதச் செய்யுளைச் சொன்னேன்.

"பெண்ணைப் பார்த்துக்கொண்டே உணவைச் சாப்பிட்டால், உணவு இரண்டு மடங்கு சுவையாக இருக்கும். உணவை அவளே தனது லட்சுமிகரமான கையினால் பரிமாறினால், நான்கு மடங்கு சுவையாக இருக்கும். அப்பெண்ணே நம்முடன் கூட அமர்ந்து உண்டால், எட்டு மடங்கு சுவையாக இருக்கும்."

---

* "பெண்கள் பூஜிக்கப்படும் இடங்களில், கடவுளர்கள் நிலைத்து நிற்கிறார்கள்"- 'மனுநீதி'.

இதுவும் மனுவின் செய்யுள்தானென்று அவருக்கு எடுத்துக் கூறினேன். இதன் மீது அவருடைய பிரதிபலிப்பைப் பார்த்த பிறகு, பெண்கள் பூஜிக்கப்படுவதை அவர் எவ்வளவு தூரம் ஒப்புக் கொள்கிறார் என்பது தெரிந்து விட்டது. இந்தச் செய்யுள் 'மனுநீதி'யில் எந்த இடத்தில் வருகிறதென்று அவர் என்னைக் கேட்டார். 'மனுநீதி'யில் பெண்கள் பூஜிக்கப்படுவது வந்த இடத்திலேயே இதுவும் இருந்ததென்பதை அவர் எளிதாகவே புரிந்துகொள்ளலாம். மனுவின் எத்தனையோ செய்யுட்கள் மகாபாரதம் போன்றவற்றில் சிதறிக் கிடக்கின்றன என்பதையும் அவருக்குச் சுலபமாகவே எடுத்துக் காட்டலாம். அவையெல்லாம் இன்றைய 'மனுநீதி'யில் இடம் பெற்றிருக்கவில்லை. பெண்களுக்கு உரிய இடம் தரவேண்டுமென்று மனுவை மேற்கோள் காட்டி, நாம் வாதிடவில்லை.

பல நூற்றாண்டு அடிமைப்பட்டுக் கிடந்ததன் விளைவாக, நம் நாட்டில் பெண்கள் நிலை மிகவும் மோசமடைந்து விட்டதென்பது உண்மை. அவர்கள் பிறரைச் சார்ந்து நிற்காமல், தாமே சுயேச்சையாக வாழக்கூடிய நிலைமையில் இல்லை. உண்மையில் பெண் மலர்க் கொடியாகவே வளர்க்கப்பட்டுவிட்டாள். ஆண்களின் வருவாயில் வாழ்ந்துகொண்டே சில பெண்கள் 'சுதந்திரம்! சுதந்திரம்' என்று கூப்பாடு போட்டுக்கொண்டிருந்தாலும் தற்காலப் பெண்கள் மலர்க்கொடிகளாகவே வாழ விரும்புகின்றனர். என்றாலும் காலம் மாறிக்கொண்டிருக்கிறது. இன்று மார்வாடிகள் போன்ற பழம் போக்குள்ள சமூகத்திலும், நீண்ட முக்காடிடும் தாய்மார்களின் இளம் குமரிகள், ஆண்களோடு சரிநிகர் சமானமாகப் போட்டி போடக் களத்தில் குதித்துவிட்டனர். எதிர்காலத்தைப் பற்றி நம்பிக்கை இல்லாத காலத்தில் பெண்களின் விடுதலைக்காக முயற்சித்த பெரியவர்கள் நமது வாழ்த்துக்களுக்கும், நன்றிக்கும் உரியவர்கள். இப்போது அவர்களுடைய முயற்சிகளுக்குப் பலனும் ஏற்பட ஆரம்பித்திருக்கிறது. என்றாலும் ஆயிரக்கணக்கான விலங்குகளால் தம்மைக் கட்டி வைத்திருக்கிறார்களென்பதைத் துணிவு படைத்த யுவதிகள் உணர வேண்டும். ஆண், பெண்ணின் ஒவ்வொரு ரோமக்கண்ணிலும் ஆணி வைத்து அடித்திருக்கிறான். பெண்களின் அவலநிலையைப் பார்க்கும் போது, சிறுவயதில் கேட்ட ஒரு கதை நினைவுக்கு வருகிறது. "மனித நடமாட்டமில்லாத மாளிகையொன்றில் ஒரு பிணம் அழுகாமல் நல்ல நிலைமையில் விழுந்து கிடந்தது. பிணத்தின் ஒவ்வொரு ரோமத்திலும் ஆணிகள் அடிக்கப்பட்டிருந்தன. அவ்வாணிகளை ஒவ்வொன்றாகப் பிடுங்கப் பிடுங்க, பிணத்துள் கொஞ்சம் கொஞ்சமாக உயிர் வரத் தொடங்கியது. அதன் கண்களில் செலுத்தப்பட்டிருந்த

ஆணிகளைப் பிடுங்கியதுமே பிணம் எழுந்து உட்கார்ந்து ரொம்ப நேரம் தூங்கிவிட்டேன் என்று முணுமுணுத்துக் கொண்டதாம்."

இன்றைய சமுதாயத்தில் ஆண்கள், தம் கைகளால் பெண்களின் ஒவ்வொரு ரோமத்திலும் அடிமைத்தனத்தின் ஆணிகளை அடித்திருக் கின்றனர். ஆனால் ஆண்களே அந்த ஆணிகளை எடுத்துவிடுவார் களென்று யாரும் எதிர்பார்க்க வேண்டாம்.

துணிவைப் பற்றியும், உற்சாகத்தைப் பற்றியும் எவ்வளவுதான் சொன்னாலும், வாலிபர்களைவிட யுவதிகளுக்குத் தம் பாதையில் பல தடைகள் இருக்கின்றன என்பதை மறக்க முடியாது. என்றாலும் துணிவுள்ளவர்கள் தடைகளைக் கண்டு அஞ்சி, தாம் செல்லும் பாதையைக் கைவிட்டு விட்டதாகச் சரித்திரம் கிடையாது. அயல்நாட்டு யுவதிகள் துணிவுடன் ஊர் சுற்றிக் கொண்டிருக்கும்போது, இந்திய யுவதிகள் மட்டும் பிற்பட்டு நிற்கவேண்டுமா?

ஆண்கள் மட்டுமல்ல, இயற்கையும் பெண்களுக்குப் பகையாகவே இருக்கிறது. ஆண்களைக் காட்டிலும் இயற்கை, பெண்களுக்கு விசேஷமான சிரமங்களைத் தந்துள்ளது. அவற்றில் மகப்பேறு நிலையும் ஒன்று. நமது சமுதாயத்தில் பெண்ணின் திருமணம் என்றால், அதன் மேலுறையை அகற்றினால், அவள் தன் உணவு, உடை, நகைகளுக்காகத் தன் வாழ்க்கையை ஆணுக்கு விற்று விடுவதைப் போலத்தான் இருக்கிறது. நிச்சயமாக இது ஒரு உயர்ந்த நிலையல்ல. ஆனால் இந்தக் கட்டுப்பாடுகூட இல்லையென்றால், குழந்தைகளைப் பராமரித்து வளர்க்கும் பணியில், இன்று ஆண் கொஞ்சம் உடலுழைப்பின் மூலம் பங்கேற்றுக் கொண்டிருப்பது கூட இல்லாமல், குழந்தைகளை வளர்க்கும் முழுச் சுமையும் பெண்ணின் மீதே விழுந்து விடும். அந்த நிலையில் பெண் குழந்தை பெறுவதற்கே மறுத்து விடுவாள் அல்லது குழந்தை வளர்க்கும் முழுப் பொறுப்பும் அவள் மேலேயே விழுந்துவிடும். இது பெண்ணுக்கு இயற்கை இழைத்த அநீதியேயாகும். ஆனால் அது எந்தக் காலத்திலுமே மனித சமுதாயத் திற்கே தாராள மனத்தோடு உதவி செய்ததில்லை. மனிதன்தான் இயற்கையின் தடைகளைத் தகர்த்தெறிந்து, அதை வெற்றி கொண்டான்.

பெண்களுக்கு விரிவான அனுதாபமும், ஆதரவும் காட்டியவர் களில் நான் புத்தரையும் ஒருவராகக் கருதுகிறேன். அவர் பல விஷயங் களில் தன் காலத்தை விட முற்போக்கு எண்ணங்கள் கொண்டிருந் தாலும், பெண்களையும் பௌத்த சந்நியாசினிகளாக்க வேண்டுமென்ற பிரச்சினை எழுந்த போது, ரொம்பவும் முன்பின் யோசனை செய்தார். கடைசியில் அவரை மிகவும் நெருங்கிய பிறகுதான் பெண்களையும்

பௌத்த சங்கத்துக்குள் அனுமதித்தார். தனது அந்திம காலத்தில், அவர் மறைந்த நாளன்று, ஒரு பெண்ணிடம் பௌத்த பிட்சு (துறவி) எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்று அவரிடம் கேட்கப்பட்ட போது 'பெண்ணைப் பார்க்கவே கூடாது' என்று பதிலளித்தார். ஒருவேளை பார்க்க நேரிட்டால், மனதையும், அறிவையும் தன் வசம் வைத்திருக்க வேண்டுமென்றும் அவர் கூறினார். ஆனால் அவர் சொன்னதாகக் கூறப்படும் இக்கூற்று ஒரு தலைப்பட்சமாகவும், அவருடைய கருத்துக்களுக்கே முரணாகவுமிருக்கிறது. ஏனெனில் அவர் மறைவதற்கு முன்பாக ஒரு உபதேசத்தில் கூறியிருக்கிறார்.

"பௌத்த துறவிகளே! பெண்ணின் உருவத்தைப் போல் ஆணின் உள்ளத்தைக் கவரக்கூடிய வேறு ஒரு உருவத்தை நான் கண்டதில்லை. பெண்ணின் நறுமணம்... பெண்ணின் சுவை... பெண்ணின் ஸ்பரிசம்... எல்லாமே ஆணுக்கு அற்புதமானவை."

அதே மூச்சில் மேலும் கூறியிருக்கிறார்: "பௌத்த சந்நியாசிகளே! ஆணின் உருவத்தைப் போல் பெண்ணின் உள்ளத்தைக் கவரக்கூடிய வேறு ஒரு உருவத்தை நான் கண்டதில்லை. ஆணின் நறுமணம்... ஆணின் சுவை... ஆணின் ஸ்பரிசம்... எல்லாமே பெண்ணுக்கு அற்புதமானவை."*

மேலே புத்தர் கூறியவை மிக இயற்கையான விஷயங்கள்: அவை அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டவை. ஆண்களும் பெண்களும் ஒருவரையொருவர் பூரணத்துவமுள்ளவர்களாக ஆக்குகின்றனர். பௌத்த சந்நியாசிகள் பெண்களைப் பார்க்கக்கூடாதென்றும் புத்தர் சொன்னதன் காரணம், ஆண்கள், பெண்கள் இரு பாலாருக்கும் அவர்கள் உருவம், சுவை, ஸ்பரிசம், குரல் ஆகியவை கவர்ச்சிகரமாக விளங்குவது தான்! பரந்த இயற்கையில் இதற்கு எத்தனையோ எடுத்துக்காட்டுகள் விரவி இருக்கின்றன. பெண்ணிடம் ஆணுக்குள்ள நெருக்கமும், ஆணிடம் பெண்ணுக்குள்ள நெருக்கமும் ஒரு எல்லையைக் கடந்தால், அதன் முடிவு வெறும் மானசீகக் காதலாக மட்டும் இருந்து விடாது. இந்த அபாயத்தையே புத்தர் தன்னுடைய கூற்றில் சுட்டிக் காட்டியிருக்கிறார். உயர்ந்த குறிக்கோளுடன் சுதந்திர வாழ்க்கை வாழ எண்ணும் ஆண்களும் பெண்களும் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டுமென்பது இதன் பொருளாகும். ஆண் தன் பொறுப்பைத் தட்டிக்கழிக்கவும் செய்யலாம். ஆனால் பெண் தன் பொறுப்பை எப்படித் தட்டிக் கழிக்க இயலும்?

---

* "அங்குத்தர் - நிகாய்" என்னும் பௌத்த நூல்.

பெண்கள் ஊர் சுற்றிகளாக மாறுவதற்கு ஆண்கள் இட்ட அனந்த தடைகள் மட்டுமல்ல: இயற்கையே பெண்களை வீட்டை விட்டு வெளியேறாமல் செய்து விட்டிருக்கிறது. ஆனால் மனிதன் இயற்கையிடம் சரணாகதியடைந்து விட வேண்டுமென்பதல்ல இதன் பொருள். ஊர் சுற்றும் எண்ணமுடைய யுவதிகளுக்கு ஆண்களையே கண்ணெடுத்துப் பார்க்காதீர்களென்று என்னால் யோசனை சொல்ல இயலாது. விஸ்வாமித்திரர், பராசரர் போன்ற பெரிய முனிவர்களாலேயே வெற்றிகொள்ள முடியாத காதலை, சாதாரண பெண்களால் மட்டும் வெற்றி கொள்ள முடியுமா என்ன? இருந்தாலும் அவர்கள் மோகத்தைத் தவிர்க்கவே முயற்சிக்க வேண்டும். இந்த உலகத்திற்குள் ஒரு புதிய உயிரை வரவழைக்கக் காரணமாகவுள்ள ஆணுக்கு மட்டும் ஒரு நஷ்டமுமில்லை என்பதை ஊர் சுற்றி யுவதி நினைவிலிருத்திக் கொள்ள வேண்டும். ஆனால் பெண் மட்டும் ஒரேயொரு தடவை தவறு புரிந்தாலும், அவள் ஊர் சுற்றுவதற்குச் சக்தியற்றுப் போய்விடுகிறாள். ஆகவே ஊர் சுற்றும் விரதத்தை ஏற்றுக் கொள்வதற்கு முன்பாகவே பெண் இவற்றைக் குறித்தெல்லாம் நன்கு சிந்தித்து முடிவுக்கு வர வேண்டும். ஊர் சுற்றிப்பாதையில் அடியெடுத்து வைத்துவிட்ட பிறகு அவள் எந்த நிலையிலும் பின் வாங்கவே கூடாது.

ஊர்சுற்றி ஆண்களுக்கும், பெண்களுக்கும் பல விதிகள் ஒரே மாதிரியாகத்தான் இருக்கும். அவற்றைப் பற்றி இந்நூலின் பல இடங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. பெண்களும்கூடப் பதினெட்டு வயது வரை கல்வி கேள்விகளை நன்கு பயின்று முன் தயாரிப்புகள் செய்து கொள்ள வேண்டும். இருபது வயதுக்கும் பிறகே அவர்களும் ஊர்சுற்றப் புறப்பட வேண்டும். கல்வியும் மற்ற தயாரிப்புகளும் ஆண், பெண் இருவருக்கும் ஒரே மாதிரியாக இருந்தாலும், ஊர் சுற்றிப் பெண் அதிகமாக மருத்துவம் கற்றிருந்தால் அவள் தன் பயணத்தைச் சிறப்பாக நடத்த இயலும். அவள் ஊர் சுற்றிக்கொண்டே மக்களுக்கும் எவ்வளவோ சேவை செய்ய முடியும். ஏற்கெனவே கூறியது போல், மூன்று யுவதிகள் ஒரணியாக ஊர்சுற்றப் புறப்பட்டால், மிக வசதியாக இருக்கும். மூன்று பேரே இருக்க வேண்டும் என்று ஏன் சொல்கிறீர்கள் என்று கேட்டால், இரண்டு பேர் பயணத்துக்குப் போதுமானவர்களல்ல. இருவருக்கிடையில் ஏதாவது கருத்து வேற்றுமை ஏற்பட்டால் மத்தியஸ்தம் செய்ய மூன்றாம் நபர் இருக்க வேண்டுமல்லவா? மூன்று பேருக்கதிகமானால், அது மந்தையாகிவிடும். மந்தையாகப் புறப்பட்டு ஊர் சுற்றுவதென்பது முடியாத காரியம். இந்த மூன்று பேர் என்பதும் ஆரம்பகாலப் பயணங்களுக்குத் தான். பிற்காலப் பிரயாணங்களுக்கு அத்தனை பேர்கூட அவசியமில்லை. "காண்டாமிருகத்தின் ஒரே

கொம்பைப் போல் தனியாகவே சுற்றித் திரிவது?" என்ற குறிக்கோளே ஊர் சுற்றிக்கு இருக்க வேண்டும்.

பெண்களை ஊர்சுற்றுவதற்கு ஊக்குவிப்பதற்காகப் பல பேர் என்னைக் கண்டிக்கக்கூடும், அவர்கள் இந்தப் பாதையிலே செல்லும் யுவதிகளைத் தீவிரமாக எதிர்க்கவும் கூடும். ஆனால் திடசித்தமும், செயல் திறனும் படைத்த யுவதிகள் இந்த எதிர்ப்பைப் பொருட் படுத்தமாட்டார்களென்பது எனது நம்பிக்கை. அவர்களின் கூப்பாடு களுக்கு யுவதிகள் செவிசாய்க்கக்கூடாது. வீட்டு வாசற்படியைத் தாண்டி வெளியில் அடியெடுத்து வைத்த பெண்மணிகள், இனி வெளி உலகில் சுற்றித் திரிய வேண்டும். முதன் முதலில் பெண்கள் முக்காட்டை வீசி எறிந்தபோது, பழம் பஞ்சாங்கங்கள் செய்த ரகளை கொஞ்சமா? அப்பெண்களைக் கீழ்த்தரமாகப் பேசியதை மட்டும் மறக்க முடியுமா? ஆனால் நமது புதுமைப் பெண்கள் துணிந்தவர்கள் தான். வெற்றியடைய முடியுமென்றும், வெற்றி கொண்டவர்களின் முன்னே அனைவரும் தலைவணங்குகிறார்களென்றும் நிரூபித்து விட்டார்கள். வாலிபர்களைப் போலவே யுவதிகளும் ஆயிரக் கணக்கில் உலகம் சுற்றப் புறப்பட வேண்டுமென்றும், அவர்களில் பல பத்துப் பேர்கள் முதல் ரக ஊர் சுற்றிகளாக வேண்டுமென்றும் நான் விரும்புகிறேன். அவர்கள் ஒரு முடிவுக்கு வருவதற்கு முன், பெண்கள் வெறும் பிள்ளை பெறும் இயந்திரங்களல்ல என்பதை உணர வேண்டும். பிறகு அவர்களுடைய பாதையின் பல தடைகள் தாமே மறைந்து போகும். நான் இப்படிக் கூறுவது மதப் பற்றுள்ளவர் களுக்கு வேதனையளிக்கலாம். இந்த முரட்டு நாஸ்திகன் நமது பெண்மணிகளைச் சாவித்திரி- அனுசூயைப் பாதையிலிருந்து தூரமாக ஒரு புதிய பாதையில் அழைத்துச் செல்கிறான் என்று என்மேல் அவர்கள் குற்றமும் சாட்டலாம். பெண்களைப் புதிய பாதையில் அழைத்துச் செல்வது அடியேனல்ல. நூறு ஆண்டுகளுக்கு முன்பேயே பிரிட்டிஷ் வைஸ்ராயாக இருந்த 'லார்ட் வில்லியம் பெண்டிங்' காலத்திலேயே, பெண்கள் தமது இறந்து போன கணவன்மார்களின் தீயில் வேகும் சடலங்களுடன் 'உடன்கட்டை' ஏறும் வழக்கத்தைத் தடை செய்ததன் மூலம், அவர்களைப் புதிய பாதையில் அழைத்துச் செல்வது ஆரம்பமாகி விட்டது. அந்தக் காலம்வரை கணவன்மார்களின் சடலங்களுடன் தீயில் எரிந்து போவதே பெண்களின் மகத்தான கடமையாக இருந்தது. ஆனால் இன்று சாவித்திரி- அனுசூயை போன்ற பதிவிரதா சிரோமணிகளின் பெயரால் எந்த இந்துமதத் தலைவரோ அல்லது ஜகத்குரு சங்கராச்சாரியாரோ கூட உடன்கட்டை ஏறும் வழக்கத்தைப் புதுப்பிக்க வேண்டுமென்று மறியல் செய்ய முடியாது: எவரும் அதற்காகப் போர்க்கொடியை உயர்த்த முடியாது. ஒருவேளை

யாராவது உடன் கட்டை ஏறும் வழக்கத்தை மீண்டும் தொடங்க வேண்டுமென்று இயக்கம் நடத்தினால், இன்றைய பெண்மணிகள் நூறு ஆண்டுகளுக்கு முந்தைய தமது பாட்டிகளைப் போல் தலை கவிழ்த்து மவுனமாக நிச்சயமாக இருக்கமாட்டார்கள். அந்தக் கனவான்களுக்கு எதிராக ஒரு கலக்கு கலக்கிவிடுவார்கள். ஒருவேளை பெண்களை அவர்களுடைய கணவன்மார்களின் சிதைகளில் வலுக் கட்டாயமாகத் தள்ளப்பார்த்தால், ஆண் வர்க்கம் தவறாமல் ஆபத்தில் மாட்டிக் கொள்ளும். பெண்கள் உடன்கட்டை ஏறும் வழக்கம் அரக்கத்தனமானதாகவும் அநீதியுள்ளதாகவும் இருந்ததனாலேயே, அது குப்பையில் வீசியெறிப்பட்டது. அதேபோல் பெண்கள் ஊர் சுற்றுவதற்குள்ள தடைகளும் ஒவ்வொன்றாகத் தகர்த்தெறியப்பட வேண்டும்.

பெண்களுக்கும் பெற்றோர்களின் ஆஸ்தியில் பங்கு தர வேண்டுமென்று மசோதா கொண்டுவந்தபோது, இந்தியா பூராவிலுமிருந்த பிற்போக்காளர்கள் அதற்கு எதிராகக் கிளர்ந்தெழுந்தனர். பரந்த மனப்பான்மையாளர் என்று கூறப்பட்ட பலரும்கூட, அப்பிற் போக்காளர்களுக்குத் துணை போனதுதான் வியப்பிற்குரியதாகும். கடைசியில் மசோதா தள்ளி வைக்கப்பட்டுவிட்டது. பரந்த மனப் பான்மையாளர் என்று சொல்லப்படும் ஆண்களும் பெண்கள் விஷயத்தில் எவ்வளவு பிற்போக்காளர்கள் என்பதை இந்த நிகழ்ச்சி ருசுப்பித்து விட்டது.

இந்தியப் பெண்மணிகள் தம் சொந்தப் பாதையைத் தாமே அமைத்துக்கொண்டு வருகிறார்கள். இப்பொழுது அவர்கள் நூற்றுக் கணக்கில் அமெரிக்காவுக்கும், இங்கிலாந்துக்கும், மற்ற நாடுகளுக்கும் கல்வி கற்கச் சென்றுகொண்டிருக்கிறார்கள்.

"பெண்ணைச் சிறு வயதில் தந்தையும், இள வயதில் கணவனும், முதுமையில் மகனும் காப்பாற்றுகின்றனர்" என்ற கூற்றினைப் புதுமைப் பெண்கள் ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லை.

இன்று அமெரிக்காவிற்கும், பிரிட்டனுக்கும், படிக்கப் போயிருக்கும் யுவதிகளைப் பாதுகாக்க கூடவே யார் சென்றிருக்கின்றனர்? ஆண்கள் தம்மைத் தாம் பாதுகாத்துக் கொள்வதைப்போலவே, இன்று பெண் களும் தம்மைத் தாமே பாதுகாத்துக் கொள்கின்றனர். மற்ற நாடுகளில் பெண்களின் முன்னேற்றப் பாதையில் தடைகள் ஒவ்வொன்றாக மறைந்து வருகின்றன. இந்த நாடுகள் அந்த விஷயத்தில் தமது பணியை எப்பொழுதோ தொடங்கிவிட்டன: நாமோ இப்போதுதான் ஆரம்பித்திருக்கிறோம். எனினும் உலகக் கருத்தோட்டம் நமக்கு

அனுகூலமாகவே இருக்கிறது. பெண்கள் செய்த சாகஸப் பயணங்களைப் பற்றி வரலாற்றில் கூறப்படவில்லையே என்று கேட்கலாம். இதுவும் ஒரு கேள்வியாகுமா? முதலில் பெண்களைக் குண்டுகட்டாகக் கட்டி மூலையில் வீசி எறிந்துவிட்டு, அவர்கள் சாகஸப் பயணங்கள் செய்யவில்லையே என்று சொல்வதில் பொருள் இருக்கிறதா? வரலாற்றில் துணிவுள்ள ஊர்சுற்றி வீராங்கனைகளைப்பற்றி இதுவரை குறிப்பிடப்படவில்லை என்றால், கடந்தகாலச் சரித்திரம் பெண்களுக்குச் சாதகமாக இல்லை என்றால், இன்றைய புதுமைப் பெண் புதிய வரலாற்றைப் படைப்பாள்! தனக்காகப் புதிய பாதையை அமைத்துக் கொள்வாள்.

இளம் பெண்கள் தம்முடைய இந்த முயற்சியில் வெற்றியடைய வேண்டுமென்று வாழ்த்தும் அதே சமயத்தில் அவர்களுடைய முன்னேற்றப் பாதையில் தடைக்கற்களாக இருக்க வேண்டாமென்று ஆண்களுக்கும் ஆலோசனை கூறுவேன். உங்கள் கண் முன்னாலேயே கடந்த இருபத்து ஐந்து ஆண்டுகளில் பெண்கள் சமுதாயத்தில் ஏற்பட்ட மாற்றங்களைப் பற்றி, சென்ற நூற்றாண்டின் இறுதியாண்டில் பேசிக்கொள்வதற்கு நா கூடக் கூசி இருக்கும். பெண்களின் மூன்று தலைமுறைகள் கொஞ்சம் கொஞ்சமாக இன்றைய புதுமைச் சூழ்நிலைக்குள் பிரவேசித்திருக்கின்றன. இங்கே அவர்களின் முன்னேற்றம் எப்படிக் காணப்படுகிறது? பெண்களின் முதல் தலைமுறையினர் முக்காட்டைத் தூர வீசி எறிந்து விட்டுப் 'புனித' மத நூல்களைப் படிக்கும் வரை வந்தனர். இரண்டாவது தலைமுறையினர் கொஞ்சம் கொஞ்சமாகப் புதிய கல்வியைக் கற்கத் தொடங்கினர். ஆனால் கல்லூரிக்குள் நுழைந்து தம்முடன் படிக்கும் ஆண்களுடன் போட்டிபோடும் அளவுக்கு அவர்கள் துணிவைப் பெற இயலவில்லை. இன்றைய புதிய தலைமுறையில் புதுமைப் பெண்கள் ஆண்களுடன் சரி நிகர் சமானமாக வாழத் தயாராகிவிட்டனர். சாதாரண வேலைகள் செய்வதற்கு மட்டுமல்ல, நாட்டை ஆளவும் அவர்கள் தயாராகி விட்டனர். பெண்களின் இந்த முன்னேற்ற வேகத்தை ஆண்களால் இனி தடுத்து நிறுத்த முடியாது. ஒருவேளை ஆண்கள் தமது மகள்களைப் புதுயுக விஞ்ஞான அறிவைப் பெறாமல் தடுத்து விடலாம்: ஆனால் அவர்கள் செத்து மண்ணாகிவிட்ட பிறகு பிறக்கப் போகும் பேத்திகளைப் புதுயுக விஞ்ஞான அறிவைப் பெறாமல் அவர்களால் தடுத்துவிட முடியுமா? ஒருவன் தன் மகனையும், மகளையும் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்க முடியுமே தவிர, பேரன் பேத்திகளைக் கட்டுப்படுத்த இயலுமா? மூன்றாவது தலைமுறையினரையே கட்டுப்படுத்த இயலாதென்றால், கொள்ளுப்பாட்டனின் பெயரையே அறிந்திராத நான்காவது தலைமுறையைச் சேர்ந்தவர்களை எவரால்

கட்டுக்குள் வைத்திருக்க முடியும்? உலகம் மாறிக்கொண்டே இருந்திருக்கிறது: இன்னும் மாறிக்கொண்டே இருக்கிறது. நம் கண்முன்னாலேயே பெரும் மாற்றங்கள் நாள்தோறும் நடந்தேறிக் கொண்டிருக்கின்றன. பெரிய மலையை முட்டி மோதிக் கொள்வது புத்திசாலித்தனமாகாது. இதுகாறும் இளைஞர்களை ஊர் சுற்றுவதிலிருந்து தடுத்துக் கொண்டிருந்தார்கள்: ஆனால் வெற்றியடைய முடியவில்லை. இப்பொழுது யுவதிகளும் ஊர் சுற்றத் தயாராய் விட்டார்கள். அவர்களையும் ஊர் சுற்ற விடுங்கள்! பயங்கரப் பாதைகளில் நடந்து பல நாடுகளையும் அவர்களையும் பார்க்க விடுங்கள்! தடி எடுத்து அவர்களைப் பாதுகாக்கப் புறப்பட்டால், ஊர் சுற்றிப் பெண்களைப் பாதுகாத்திட முடியாது. அவர்கள் தம்மைத் தாமே பாதுகாத்துக் கொள்ளும் போது மட்டுமே உண்மையான பாதுகாப்பு அவர்களுக்குக் கிடைக்க முடியும். ஆண்களால் தயார் செய்யப்பட்ட சட்டங்களும், விதிகளும் எப்பொழுதுமே ஆண்களுக்கு ஒரு மாதிரியாகவும், பெண்களுக்கு வேறொரு மாதிரியாகவும் இருந்து வந்திருக்கின்றன. ஆனால் தற்கால அறிவுடைய மனிதன் இப்படிப் பட்ட பாரபட்சமான சட்ட திட்டங்களை ஏற்றுக்கொள்ளமாட்டான் என்பதைக் கண்முன்னாலேயே கண்டு வருகிறோம்.

## 9. மதமும் ஊர் சுற்றுதலும்

மதத்திற்கும் ஊர் சுற்றுதலுக்கும் இடையே முரண்பாடு இருக்கின்றதென்று சில வாசக அன்பர்கள் கருதக்கூடும். ஆனால் மதத்திற்கும், ஊர் சுற்றுதலுக்கும் முரண்பாடு எப்படி இருக்க முடியும்? ஏனென்றால், முதல் தரமான ஊர்சுற்றிகளே பல மதங்களையும் நிறுவியிருக்கிறார்கள். மற்றும் பலர் மத சம்பந்தமான பணிகளுக்காக உலகத்தின் பல நாடுகளையும் சுற்றி இருக்கிறார்கள். சீன யாத்ரீகர் ஃபாஹியானின் பயணங்களைப் பற்றி நாம் படித்திருக்கிறோம். 'ஹுவான்ஸாங்', 'ஈசுவ்' போன்றோரின் துணிவைக் குறித்து அவருடைய பயண வரலாறுகளில் பார்த்திருக்கிறோம். 'மார்க்கோ போலோ' அன்றைய உலகத்தில் செய்த பயணங்களையும் தான் கண்ட விசேஷங்களைப் பற்றி அவர் செய்த வர்ணனைகளும் இன்றும் ஊர் சுற்றிகளின் மனத்துக்கு உவகை அளிக்கின்றன. ஊர்சுற்றிகள் எழுதிய எல்லாப் பயண விவரங்களும் நமக்குக் கிடைக்காவிட்டாலும், பயண வரலாறுகள் எழுதி வைக்காத ஊர்சுற்றிகளே அதிகம் பேர் இருந்திருப்பார்கள் என்பதில் ஐயமில்லை. திபேத்துக்குச் சென்ற இருநூற்றுக்கும் மேற்பட்ட இந்திய அறிஞர்கள் எவ்வளவு துயரம் அனுபவித்திருப்பார்கள்! ஊர்சுற்றி அரசனான ஸ்மிரிதி ஞானகீர்த்தி (கி.பி. 1042) என்பவர் ஒன்பது நூற்றாண்டுகளுக்கு முன்பு எப்படிப் பட்ட வீரதீரப் பயணம் செய்துள்ளார்! இவர் தானும், மற்றவர்களும் இயற்றிய பல சமஸ்கிருத நூல்களையும் 'போட்டியா' மொழியில் மொழி பெயர்த்துள்ளார்: அவை இன்றும் இருக்கின்றன. ஆனால் அவர் தன் பிரயாணங்களைப் பற்றி ஒன்றுமே எழுதாமல் போய் விட்டார். திபேத்தியர்கள் நமது நன்றிக்குரியவர்கள்: ஏனெனில் அவர்களால் நமக்கு ஸ்மிரிதியைப் பற்றிய பல தகவல்கள் தெரிய வருகின்றன. ஸ்மிரிதி ஞான கீர்த்தி 'மகத' ராஜ்யத்தின் ஒரு பெரிய கல்வி நிலையத்தைச் சேர்ந்த இளம் அறிஞர். அந்தக் காலத்தில் இந்தியாவில் ஊர் சுற்றிகளுக்குப் பஞ்சமில்லை. அன்றைய நமது வாலிபர்களுக்கு உலகத்தைச் சுற்றிப் பார்க்க வேண்டுமென்றும்,

உலகத்துக்கெல்லாம் நம் நாட்டின் செய்தியைத் தெரிவிக்க வேண்டு மென்றும் தீவிரமான அவா இருந்தது. மற்ற நாட்டினரும் இந்தியப் பண்பாட்டுத் தூதுவர்களை எதிர்பார்த்து நின்றனர்: ஏனெனில் நமது நாட்டுப் பண்பாடு அப்பொழுது உச்சநிலையில் இருந்தது. கல்வியின்மேல் அக்கறை கொண்ட திபேத்தியப் பௌத்தர் ஒருவர், இந்தியாவிலிருந்து கல்வி நிபுணர்களைத் திபேத்துக்கு அழைத்துச் செல்ல, இந்தியா வந்து தேடிக்கொண்டிருந்தார். ஸ்மிருதியும், அவரது இளம் நண்பர் ஒருவரும் திபேத் செல்லத் தயாராகிவிட்டனர். கல்வி நிலையத்தைச் சேர்ந்த சக அறிஞர்களும் அவர்களின் முடிவைக் கேட்டு மகிழ்ந்து அவர்களை விமரிசையாக வழியனுப்பவும் செய்தனர். ஸ்மிருதியும் அவர் நண்பரும் கால்நடையாகவே நேப்பாளம் போய்ச் சேர்ந்தனர். நேப்பாளத்திலிருந்து அவர்களைத் திபேத்துக்கு அழைத்துச் செல்பவன் காலராவினால் இறந்து விட்டான். இரு நண்பர்களும் சிக்கலில் மாட்டிக் கொண்டனர். அவர்களுக்கு அங்குப் பேசப்பட்ட மொழியும் புரியாது. அவர்களை அழைத்து வந்தவனும் இறந்துவிட்டான். "நாம் நமது படகை இழந்து விட்டோம். இனி நடு ஆற்றிலிருந்து திரும்பிப் போய்க் கரைசேர முடியாது. மகத ராஜ்யத் துக்குத் திரும்பிப் போனால், அவர்கள் நம்மைப் பார்த்து, 'மதப் பிரச்சாரம் செய்து திபேத்தை வெற்றி கொண்டு திரும்பி இருக் கிறார்கள்' என்று கேலி பேசுவார்களே!" என்று கூறி வேதனை யடைந்தார் ஸ்மிருதி.

கடைசியாக முன்னேறியே போக வேண்டுமென்ற முடிவுடன் இருவரும் திபேத்துக்குள் பிரவேசித்து விட்டனர். ஸ்மிருதி தன் நண்பரை எப்படியோ திபேத் வரை அழைத்துச் சென்றாலும், அவர் ஸ்மிருதியைப் போன்று திடசித்தமுள்ளவர் அல்ல. ஸ்மிருதி ஞான கீர்த்தி இந்திய ஸ்மிருதிகளில் நல்ல புலமையுடையவர். ஆனால் திபேத்திய மொழி தெரியாத வரையிலும் தனது புலமை அனைத்தும் வீண்தான் என்பதை உணர்ந்து கொண்டார். அதனால் அவர் முதலில் திபேத்திய மொழியைக் கற்றுக்கொண்டுவிட வேண்டுமென்று முடிவு செய்தார். இது அப்படியொன்றும் பெரிய காரியமல்ல. ஆனால் இதற்காக எல்லாம் துறந்து, திபேத்திய மக்கள் கூட்டத்தில் இரண்டறக் கலந்துவிட வேண்டும். அந்தக் காலத்தில் திபேத்தில் சமஸ்கிருதம் தெரிந்தவர்களும் ஆங்காங்கு ஓரிருவர் இருக்கத்தான் செய்தனர். ஆனால் அவர்களை அறிமுகம் செய்து கொண்டாலும் திபேத்திய மொழியை சுலபமாக கற்க முடியாதென்று அவர் எண்ணினார். அதனால் அவர் இந்தியாவுக்கு வரும் வழியிலுள்ள 'டாங்' கிராமத்திலிருந்து பிரம்மபுத்திரா நதியைத் தாண்டித் 'தானக்' என்னுமிடத்துக்குப் போய்ச்சேர்ந்தார். அங்கிருக்கும் மக்கள் இன்றும்

விவசாயத்தைக் காட்டிலும், ஆடு மேய்ப்பதையே முக்கிய தொழிலாகக் கொண்டிருக்கிறார்கள் என்றால், பதினோராவது நூற்றாண்டு மத்தியில் எந்த நிலையில் இருந்திருப்பார்களென்பதை ஊகித்துக் கொள்ளலாம். அப்பகுதி மக்கள் இன்றும் நிலையான வீடுகளுக்குப் பதில், கூடாரங்களிலேயே வாசம் செய்கிறார்கள். ஸ்மிருதி அழுக் கடைந்த கிழிந்த துணிகளை உடுத்திக்கொண்டு, மிகவும் பரிதாபகர மான நிலையில் 'தானக்' போய்ச் சேர்ந்தார். வந்தும் வராத மொழியில் பேசி, உணவுக்காகவும் உடைக்காகவும் ஒருவரிடம் வேலைக்காரனாகச் சேர்ந்தார். ஸ்மிருதியின் எசமானர்கள் மிகவும் கல் நெஞ்சம் படைத்த வர்கள். குறிப்பாக அவருடைய எசமானியம்மாள் அவரை ஒரு நிமிடம்கூட ஓய்வாக உட்கார விடுவதில்லை. ஸ்மிருதி அத்தனை கஷ்டங்களையும் பொறுத்துக் கொண்டு அங்குப் பல ஆண்டுகள் இருந்தார். திபேத்தியரை விட அவர் திபேத்திய மொழியை நன்றாகப் பேசக் கற்றுக் கொண்டார். அத்துடன் யாருக்கும் தெரியாமல் எழுத்துக்களைக் கற்றுக்கொண்டு புத்தகங்களையும் படிக்கத் துவங்கி விட்டார். அவர் இன்னும் பல ஆண்டுகள் வரை ஆடுகளை மேய்த்துக் கொண்டு சுற்றிக் கொண்டிருந்திருப்பார். அதற்குள் கல்வியறிவுள்ள திபேத்தியர் ஒருவருக்கு இவரைப் பற்றித் தெரிந்துவிட்டது. அவர் ஸ்மிருதியைத் தன்னுடன் அழைத்துச் சென்றுவிட்டார். ஆனால் ஸ்மிருதிக்கு ஊர் சுற்றும் பழக்கம் ஏற்பட்டுவிட்டிருந்தது. அவர் அப்பொழுது ஒரே இடத்தில் தங்கி இருக்கத் தயாராக இல்லை. அதற்குப் பிறகு அவர் தாய் நாட்டிற்குத் திரும்பவே இல்லை. நேப்பாளத்தின் எல்லையிலிருந்து சீன எல்லை வரை ஆங்காங்கே தங்கி இருந்து, சீடர்களுக்குப் பாடம் சொல்லிக் கொண்டு, நூல்களை மொழிபெயர்த்துக்கொண்டு தன் வாழ்நாட்களையெல்லாம் கழித்து விட்டார். அப்படிப்பட்ட ஸ்மிருதியை எல்லா ஊர்சுற்றிகளுமே விரும்புவார்கள். அவருடைய மதமான பௌத்த மதத்தை யாரால் தான் அலட்சியமாகக் கருத முடியும்?

ஸ்மிருதியைப் போன்ற ஆயிரக்கணக்கான பௌத்த மதப் பிரசாரகர்கள் ஆசியாவின் மூலை முடுக்குகளில் எல்லாம் சுற்றித் திரிந்து மீளா உறக்கத்தில் மூழ்கி விட்டனர். ஆசியாவில் மட்டுமல்ல, மக்தூனியா, எகிப்திலிருந்து போர்னியோ, பிலிப்பைன்ஸ் தீவுகள் வரை அவர்களுடைய நினைவுகள் சிதறிக் கிடக்கின்றன. அந்தக் காலத்தில் பௌத்தர்கள் மட்டுமல்லாமல், இந்துக்களும் கூடக் கிணற்றுத் தவளைகளாக இருக்கவில்லை. அவர்களும் வாழ்க்கையின் மிக முக்கியமான பருவத்தில் கல்வி கேள்விகளைக் கற்று, ஊர் சுற்றப் புறப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

கடலின் அலைகள் இன்றும் அவர்களுடைய துணிவிற்குச் சாட்சியம் கூறிக் கொண்டிருக்கின்றன. 'ஜாவா' தீவுக்கு அவர்கள் பண்பாட்டைக் கற்றுத் தந்தனர். கம்ப்பாவுக்கும் கம்போடியாவுக்கும் இந்திய ஊர் சுற்றி அறிஞர்கள், ஒருவருக்குப் பின் ஒருவராகச் சென்றுகொண்டே இருந்தனர்.

இன்றுங்கூட ஜாவாவிலுள்ள சமஸ்கிருதக் கல்வெட்டுகள், அழகான கவிதையும், உரைநடையும் செதுக்கிய பெரிய பெரிய கல்வெட்டுகள் அந்த ஊர் சுற்றிகளின் புகழ் பாடிக் கொண்டிருக்கின்றன. அன்றிலிருந்து இன்றுவரை லட்சக்கணக்கான, கோடிக்கணக்கானவர்கள் இந்த மண்ணிலே பிறந்தும், மடிந்தும் விட்டனர். ஆனால் புழு பூச்சிகளைப் போன்ற அவர்களால் என்ன பயன்? ஆயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பே நம் நாட்டு ஊர் சுற்றிகள் ஸைபீரியாவிலுள்ள பைகுல் ஏரியைச் சுற்றி வந்தனர். அந்த ஊர்சுற்றிகளின் பெருமுயற்சியின் விளைவாகவே, இன்றும் அங்கே இந்தியாவைப் பக்தியுடன் நினைவு கூர்கின்றனர். கொரியாவிலுள்ள வஜ்ஜிர மலைக்குச் செல்லுங்கள், அல்லது ஜப்பானிலுள்ள அழகான கோயாஸானுக்குப் போங்கள்! துங்ஹுவானிலுள்ள ஆயிரம் பௌத்த குகைகளுக்குச் செல்லுங்கள் அல்லது ஆப்கானிஸ்தானிலுள்ள பாமியானாவுக்குப் போங்கள். எல்லா இடங்களிலும் இந்திய ஊர் சுற்றிகளின் போற்றற்கரிய நினைவுச் சின்னங்களைக் கண்டு நமது சிரம் தாழ்கிறது. ஆனால் உலகத்தைக் கண்டு கர்வத்தால் நமது சிரம் நிமிர்கிறது. அப்படிப்பட்ட புகழ்மிகு புத்திரர்களை ஈன்றெடுத்த நாடா இப்பொழுது வீட்டுக்குள் அடைந்து கிடக்கும் கிணற்றுத் தவளைகளைப் பெறுவது?

இந்த நமது இந்திய ஊர் சுற்றிகளில் பௌத்தர்களும் பிராமணர்களும் இருந்தனர். அவர்கள் ஒரு புனிதப் பணிக்காகத் தம்மிடையே போட்டி போட்டனர். அந்தப் பணியைச் செவ்வனே நிறைவேற்றவும் செய்தனர். ஒரு பகுத்தறிவாளன் மதத்தின் எல்லா விஷயங்களிலும் நம்பிக்கை கொள்ள இயலாது. ஒவ்வொரு ஊர்சுற்றியின் எல்லாச் செயல்களையும் நாம் ஒப்புக்கொள்ளவும் முடியாது. அதனால் வேற்றுமையில் ஒற்றுமையைத் தேட வேண்டும். 1913-ம் ஆண்டில் நான் கர்னாடகாவிலுள்ள ஹோஸ்பேட் ஸ்டேஷனில் இறங்கி, விஜயநகர இடிபாடுகளைக் காணச் சென்ற அன்றைய மாலைப் பொழுது நினைவுக்கு வருகிறது. சாதாரண இடிபாடுகளா அவை? அங்கே ஒரு காலத்தில் மனித வாழ்க்கையில் மகிழ்ச்சி பொங்கிக்கொண்டிருந்தது. அங்கே ஓரிடத்தில் பொன்னும் மணியும் கூறு போட்டு விற்பனை செய்து கொண்டிருந்தனர். வேறோரிடத்தில் இலக்கியக் கருத்தரங்குகளும், இசை நிகழ்ச்சிகளும் நடந்துகொண்டிருக்கின்றன. அங்கே

ஓரிடத்தில் சிற்பிகள் தமது அற்புதக் கைகளால் அழகான சிற்பங்களைச் செதுக்கிக் கொண்டிருந்தனர். மற்றோரிடத்தில் நாவில் நீர் சுரக்கவைக்கும் பலகாரங்களைத் தயாரித்து அடுக்கி வைத்திருந்தனர். இன்று அழிந்து இடிபாடுகளாகக் காட்சியளிப்பவை ஒரு காலத்தில் புனித கோயில்களாக இருந்தன. அவற்றுக்குள்ளிருந்து தூப தீபாராதனையின் நறுமணம் நாற்புறமும் பரவிக் கொண்டிருந்தது. கோயில்களுக்கு வெளியே பலவிதமான மலர் மாலைகளை வைத்துப் பூக்காரிகள் விற்றுக் கொண்டிருந்தனர். இங்கே மாலை வேளைகளில் இளம் பெண்கள் புத்தாடைகளை உடுத்தி, நீண்ட கருங்குழலை மலர்களால் முடித்து, வழியெல்லாம் இளமையையும், எழிலையும் நிறைத்து, தேனீக்களைப் போல் உலா வந்து கொண்டிருந்தனர். புராதன விஜய நகரத்தின் கடந்த காலச் சித்திரங்களை அகக்கண்ணால் பார்த்துக்கொண்டே, தற்போதைய இடிபாடுகளில் நடமாடிக் கொண்டே, நான் ஒரு புளிய மரத்தருகே வந்து சேர்ந்தேன். அங்கே ஒரு பழைய திண்ணையில் கிழவரொருவர் உட்கார்ந்திருந்தார், சாதாரண மனிதரல்ல, ஒரு ஊர்சுற்றி!

கிழவர் இளம் ஊர்சுற்றியைப் பார்த்து, "வா சாமி! சற்று ஓய்வெடுத்துக்கொள்!" என்று கூறினார். இளம் ஊர் சுற்றி அவரருகில் உட்கார்ந்துகொண்டான். எதிரே தீ எரிந்துகொண்டிருந்தது. தென் அமெரிக்காவிலிருந்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன்புதான் இந்தியாவுக்குள் நுழைந்த புகையிலை சாதாரண மக்களின் வாழ்க்கையிலே சற்று மகிழ்ச்சியை நிரப்பியதுடன்; இன்று ஊர் சுற்றிகளும் அதன் புகழ்பாடுபவர்களாகிவிட்டனர். அங்கே தீயும் அதற்காகவே எரிந்து கொண்டிருந்தது. கிழ ஊர்சுற்றி அப்போது கஞ்சாவும் வைத்திருந்தாரா என்பதும், இளம் ஊர்சுற்றி அப்போது கஞ்சாவுக்குப் பழக்கப் பட்டிருந்தாரா என்பதும் இப்போது நினைவில்லை. கிழ ஊர்சுற்றி உலர்ந்த புகையிலையைப் போட்டு ஹுக்காவை நிரப்பினார். பிறகு இருவரும் வெகுநேரம் வரை மாறி மாறிப் புகை பிடித்துக்கொண்டே ஊர்-உலகத்து விஷயங்களைப் பேசிக்கொண்டே இருந்தனர். அதற்குள் மூன்றாம் ஊர் சுற்றி ஒருவன் வந்து சேர்ந்தான். மூவரும் புகை பிடித்துக்கொண்டே பேசிக்கொண்டிருந்தனர். சூரியன் மறைந்து விட்டான். இருள் பரவிக்கொண்டிருந்தது. "புறப்படுங்கள், துங்கபத்திரா நதிக்கரைக்குப்போவோம்! அங்கே வேறு மூன்று விக்கிரகங்கள் இருக்கின்றன" என்று மூன்றாம் ஊர்சுற்றி இளம் ஊர்சுற்றியை அழைத்தார். இளம் ஊர்சுற்றி ஏதோ பல காலம் பழகியவரைப்போல் கிழ ஊர்சுற்றியிடம் பிரியாவிடை பெற்றுக் கொண்டு, மூன்றாம் ஊர்சுற்றியுடன் புறப்பட்டான். அம்மூன்று ஊர்சுற்றிகளும் எந்த மதத்தவரென்று உங்களுக்குத் தெரியுமா?

அவர்கள் தத்தம் மதத்தைப் பின்பற்றினாலும், அவர்கள் எல்லோருடைய முக்கிய மதம் ஊர்சுற்றுதல்தான்! கிழ ஊர்சுற்றி ஒரு முஸ்லிம் ஃபகீராவர்: அத்துடன் சிறந்த ஊர்சுற்றியும் கூட! இளம் ஊர் சுற்றி அப்பொழுது சங்கரரின், ராமானுஜரின் விழிகளுக்கிடையே சிக்கித் தவித்துக்கொண்டிருந்த அடியேனே தான்! ஆனால் நான் மற்றவர்களுடன் சேர்ந்து பழகுவதில் சற்றுத் தாராள மனப்பான்மையுடனிருந்தேன்.

ஒரு காலத்தில் விஜயநகரப் பெருநகர் பரவியிருந்த துங்கபத்திராக் கரையில், இன்றும் சிறிய சிறிய மடங்களுக்கும், வீடுகளுக்கும் குறைவில்லை. அங்கே விறகுக்கும் பஞ்சமில்லை. பெரிய பெரிய மரக்கட்டைகள் தீயிலே எரிந்துகொண்டிருந்ததே அதற்குச் சாட்சி! அந்தப் பகுதியில் சாதாரணமாகக் குளிர் அதிகமில்லையென்றாலும், நான் மார்கழி- தை மாதங்களில் அங்கே சென்றிருந்தேன். தீயைச் சுற்றிலும் ஐந்து பேர் அமர்ந்திந்தனர். ஒருவருக்குக் கீழே கம்பளி இருந்தது. இன்னொருவருக்குக் கீழே மான்தோல் விரிக்கப்பட்டிருந்தது. அருகில் கடை கண்ணி ஏதும் இல்லை போதிலும்! இருந்திருந்தால் அவர்களில் யாராவது ஒருவர் தன் முடிச்சை அவிழ்த்து, எல்லோருக்குமாக நிச்சயம் செலவு செய்திருப்பார். ஊர்சுற்றலின் மகிழ்ச்சி இங்கே நிரம்பிப் பிரவகித்துக்கொண்டிருந்தது. அவர்களில் யாருக்குமே 'நான்' என்னுடையது என்ற எண்ணமே இல்லை. யார்க்குமே எதைப் பற்றியும் கவலையே இல்லை. அவர்களில் யார் எங்கே பிறந்தார்கள் என்பது எவருக்குமே தெரியாது. ஊர் சுற்றிகள் மிகவும் அவசியம் ஏற்பட்டாலன்றி, மற்றவரின் பிறப்பிடத்தைக் கேட்க மாட்டார்கள். ஜாதியைப் பற்றி விசாரிப்பது கீழ்நிலை ஊர்சுற்றிகளிடமே காண முடியும். ஒருவர் கோதுமை மாவைப் பிசைந்து கொடுக்க இன்னொருவர் அதைப் பெரிய பெரிய ரொட்டிகளாகத் தட்டி, தீயிலிருந்து தனியாக எடுத்த நெருப்புத் துண்டங்களின் மேல் போட்டுச் சுட்டார். மற்றொருவர் ஹுக்காவைத் தயார் செய்து வேறொருவரிடம் தந்தார். அவர் சிவபெருமானைத் துதித்துக்கொண்டே ஹுக்கா பிடித்துப் புகையை வானத்தை நோக்கி விட்டு, ஹுக்காவை அடுத்தவரிடம் தந்தார். இப்படியாக ஹுக்கா வலம் வந்துகொண்டிருக்கும் போதே; ஊர் உலக விசேஷங்கள் அலசப்பட்டன. ஒருவர் ஒரு புதிய இடத்தின் செய்தியைக் கேட்டு, அங்கே செல்ல வேண்டுமென்று முடிவு செய்துகொண்டார். வேறொருவர் தான் கண்ட இடத்தின் விசேஷங்களைச் சொல்லி அதை ஆமோதித்தார். உலர்ந்த ரொட்டியும், உப்பும் மட்டுமே சாப்பிடக் கிடைத்தாலும், அந்தச் சாப்பாட்டின் ருசியை ஒரு ஊர் சுற்றியினால் மட்டுமே அனுபவிக்க முடியும். இரவு வெகு நேரம்வரை நாங்கள் பேசிகொண்டே இருந்தோம். அங்கே எவருமே வேதாந்தத்தைப்

பற்றியோ, வைராக்கியத்தைப் பற்றியோ பேசவில்லை. பஜனை செய்வதைப் பற்றிக் கேட்கவே வேண்டாம். இந்த உலகம் ஏமாற்று வதற்குரிய தென்பதை ஊர் சுற்றிகள் அறிவார்கள். ஆகவே முதல் ரக ஊர்சுற்றிகள் தம்மைத் தாமே ஏமாற்றிக் கொள்ள விரும்புவதில்லை.

மதங்களின் குறுகிய எல்லைகளை ஊர்சுற்றி கடந்து போய் விடுகிறான். அவன் மதப் பாகுபாட்டைத் துச்சமெனக் கருதுகிறான். அதனாலேயே புளிய மரத்தின் கீழே ஒரு முஸ்லிம் சாது இந்துக்கள் இருவரை வரவேற்கிறார். துங்கபத்திரா நதிக் கரையிலிருந்த ஊர் சுற்றிகளும் எவ்வித வேற்றுமையும் பாராட்டவில்லை. அவர்கள் பரந்த மனப்பான்மையுள்ளவர்களாக இருந்தாலும், மதக் கட்டுப்பாடுகள் பலமாக இருக்கின்றன. இதனால் ஊர் சுற்றிகள் முற்றாக மதங்களை அலட்சியப்படுத்திவிடுவதில்லை. இதன் காரணமாகவே அப்பொழுது நான் அந்த முஸ்லிம் சாதுவுடன் தங்கியிருந்து, அந்த இரவைக் கழிக்க விரும்பவில்லை. ஊர் சுற்றி எல்லாவிதக் கட்டுப்பாடுகளையுமே வீசி எறிந்து விடுவது அவசியமாகும். இந்த நிலையை நான் அடையப் பதினைந்து, பதினாறு ஆண்டுகள் பிடித்தன. அதுவும் புத்தரின் தயவால்தான் என்னால் அந்த நிலையை அடைய முடிந்தது. அவர்தான் என் குறுகிய உள்ளத்தை விசாலமாக்கினார்: என் எல்லாப் பிரச்சினைகளையுமே சுக்கு நூறாக்கிவிட்டார்.

கிருத்துவ ஊர்சுற்றி இந்த ஊர்சுற்றியை விடத் தாராளமாக இருப்பான். முஸ்லிம் சாதுவும் ஊர் சுற்றியாக மாறிய பின்னர் எவ்வித வேற்றுமைகளையும் பாராட்டுவதில்லை. ஆனால் எல்லா மதங்களை விட ஊர் சுற்றிக்குச் சிறந்த மதம் பௌத்த மதமேயாகும். அதில் தாழ்த்தப்பட்டவர்கள் இல்லை: ஜாதி வேற்றுமைகள் இல்லை. அதிலே மங்கோலிய முகமோ, இந்திய முகமோ, ஆசியாவின் நிறமோ, ஐரோப்பிய நிறமோ, எதுவுமே வேற்றுமை உணர்வை உண்டாக்க முடியாது. பலதரப்பட்ட ஆறுகள் தமது பெயரையும் நிறத்தையும் இழந்து கடலிலே சங்கமித்து விடுவதைப் போல் பௌத்த மதம் இருக்கிறது. பௌத்த மதம், ஊர்சுற்றிகளுக்கு ஆசியாக் கண்டத்தின் வாசலையே திறந்து விட்டிருக்கிறது. நீங்கள் சீனாவுக்கோ, ஜப்பானுக்கோ, கொரியாவுக்கோ, மங்கோலியாவுக்கோ, இலங்கைக்கோ எங்கே சென்றாலும், உங்களை வரவேற்க நேசக்கரம் நீளும். ஆனால் ஊர் சுற்றி இந்த வரவேற்பைக் குறுகிய அர்த்தத்திலே எடுத்துக் கொள்ளக்கூடாது. ஒரு ரோமன் கத்தோலிக்கத் துறவியோ, அல்லது ஒரு கிரேக்க சம்பிரதாயத் துறவியோ ஒரு பௌத்த ஊர்சுற்றிக்குத் தென்பட்டால், அவன் முதல் ரக ஊர் சுற்றியாக இருப்பானானால், நிச்சயம் கிருத்துவத் துறவியைக் கண்டு, பௌத்த பிட்சுவைச் சந்தித்ததைப் போன்ற மகிழ்ச்சியே அவனுக்கு ஏற்படும். கத்தோலிக்கத்

துறவி செக்குமாடல்ல என்பதும், அவர் ரயில்களிலும் கப்பல்களிலும் மட்டும் பிரயாணம் செய்தவரல்ல என்பதை அறியும் போதும், முதல் ரக ஊர் சுற்றியிடம் பெரும் மாற்றம் ஏற்பட்டு விடும். அவர் ஆப்ரிக்காவின் ஸஹாரா பாலைவனத்திலும், ஸினாய் மலையிலும், தான் செய்த பயணங்களை விவரித்ததுமே, இருவரிடையேயும் நட்புறவு பலப்பட்டுவிடும். சாது சுந்தர்சிங் என்பவர் கிருத்துவ ஊர்சுற்றியாவார். அவர் பயங்கரமான இமய மலைகளில் எப்போதும் சுற்றிக் கொண்டிருந்தார். அப்படியே ஒரு நாள் இமயமலைச் சாரலில் எங்கேயோ காலமாகிவிட்டார். அவர் ஏசுவின் பக்தராக இருப்பதில் நமக்கு என்ன ஆட்சேபணை? உண்மையில் ஊர் சுற்றி, மதம் என்பதை ஒரு தனிமனிதனின் சொந்த விஷயமாகக் கருதுகிறான்.

மதம், சம்பிரதாயம் போன்ற மேலெழுந்த வாரியான விஷயங்கள் ஒரு ஊர்சுற்றிக்கு முக்கியத்துவமுடையவைவல்ல. மத்திய ஆசியாவில் இஸ்லாம் நுழைவதற்கு முன்னால், ஊர்சுற்றி சாதுக்கள்தான் திரிந்து கொண்டிருந்தனர். பல்வேறு நாடுகளைச் சேர்ந்த ஊர் சுற்றிகள் அங்குப் போய்க்கொண்டிருந்தனர். தெற்கிலிருந்து இந்தியர்களும், கிழக்கிலிருந்து சீனப் பௌத்தர்களும், மேற்கிலிருந்து கிருத்துவத் துறவிகளும் வந்து கொண்டிருந்தனர். தனித் தனியாக அவர்களுடைய மடங்களும், தேவாலயங்களும் கூட இருந்தன. ஆனால் யாருக்கும் எந்தக் கோவிலின் கதவும் சாத்தப்பட்டிருக்கவில்லை. மிகவும் தொலைவான வட ஆசியாவிலிருந்த ஊர்சுற்றி இனத்தவரிடையே கூட அவர்கள் சுற்றிக் கொண்டிருந்தனர். அவர்கள் ஓரிடத்தில் ஒருவரையொருவர் சந்தித்துக்கொண்டால், துங்கபத்திரா கரையில் தென்பட்ட நட்புறவே அங்கேயும் மேலோங்கி நிற்கும் என்றாலும் ஆயிரம், ஆயிரத்து நூறு வருடங்களுக்கு முன்பு மத்திய ஆசியாவுக்குள் இஸ்லாம் போன்ற முரட்டு மதமும் நுழைந்துவிட்டது. அது அமைதியான முறைகளில் அல்லாமல் வாள் வீச்சில் மதத்தைப் பரப்ப விரும்பியது அந்தப் பகுதியில் பௌத்த பிட்சுக்களும், கிருத்துவத் துறவிகளும் ஒரே கூரையின் கீழே ஒற்றுமையாய் வாழ்ந்தார்கள் என்பதற்கும் ஒன்றாகவே இஸ்லாம் வாளுக்குப் பலியாகிவிட்டார்கள் என்பதற்கும் எத்தனையோ உதாரணங்கள் இருக்கின்றன. கிழக்கு மத்திய ஆசியாவிலிருந்து பௌத்த பிட்சுக்கள் தெற்கிலுள்ள பௌத்த நாடான லடாக்கிற்கு ஓடிவந்தபோது, தம்முடன் கிருத்துவத் துறவிகளையும் அழைத்து வந்தனர். இப்படிப்பட்ட சகோதரத்துவத்தை முதலில் முஸ்லிம் மதகுருக்கள் புரிந்துகொள்ளவில்லை. ஆனால் பிற்காலத்தில் அவர்களிலேயும் ஊர் சுற்றிகள் தோன்றிய போது அவர்களுக்கு எல்லா மதத்தினரிடமும் சகிப்புத் தன்மை உதிக்கவாரம்பித்தது.

மதத்தைக் குறித்து ஊர் சுற்றியின் கொள்கை எப்படி இருக்க வேண்டுமென்பதை மேற்கூறியதிலிருந்து புரிந்துகொண்டிருக்கலாம். ஊர்சுற்றி விரதமும் குறுகிய சம்பிரதாயமும் ஒன்றாக இருப்பதற் கில்லை. முதல் ரக ஊர்சுற்றியை நாம் சிறந்த மனிதனாகக் கருதுகிறோம். அவன் மனிதர்களிடையே வேற்றுமையுணர்வை விரும்புவதில்லை. எல்லா மதங்களும் பல துறைகளிலும் மனித சமுதாயத்துக்குப் புரிந்துள்ள பணிகளை அவன் உயர்வாகவே எண்ணுகிறான். ஆனால் அதே சமயத்தில் மத வெறியர்களை அவன் மன்னிக்கத் தயாராயில்லை. எல்லா மதங்களும் தெய்வங்களையும், பூஜை முறைகளையும் மட்டுமே நிறுவிச் சும்மாயிருந்துவிடவில்லை. அவை தம் தம் துறைகளில் உயர்ந்த இலக்கியத்தைப் படைத்துள்ளன. சிறந்த கலைச் செல்வங்களை நிர்மாணித்துள்ளன. மக்களின் சிந்தனா சக்தியை வளர்த்துள்ளன. அத்துடன் அவர்களின் பொருளாதார வளர்ச்சிக்கும் துணைபுரிந்துள்ளன. இதனாலேயே அந்தந்த நாடுகளில் தத்தம் மதங்களென்றால் அன்பும் அக்கறையும் காணப்படுகின்றன. எவரும் தமக்குச் சேவை செய்யும் மதத்தை உடனே விட்டு விடவும் தயாராவ தில்லை. மதங்கள் நாடுகளுக்கும், இனங்களுக்கும் சேவை செய்திருப் பதைப் போலவே, ஊர்சுற்றி லட்சியத்தின் வளர்ச்சிக்கும் உதவி செய்திருக்கின்றன. ஆகவே மதங்களின் கள்ளங்கபடமற்ற நல்லெண்ணங் களையும், செயல்களையும் ஊர்சுற்றி ஆதரிக்கத்தான் செய்வான். ஊர்சுற்றிக்கு ஒரு குறிப்பிட்ட மதத்தில் அதிக அனுதாபமிருக்கலாம். ஆனால் எல்லா மதங்களையுமே வெறுப்பின்றிப் பார்ப்பான். இதை கொள்கையற்ற நிலை என்று கூற இயலாது. எல்லா மதங்களிடத்திலும் ஊர் சுற்றி தன் நல்லெண்ணத்தை மறைக்கும்போதுதான், அதைக் கொள்கையற்ற நிலை என்று சொல்ல முடியும்.

ஆனால் இன்று மதத் தொடர்பே இல்லாத ஊர் சுற்றிகளும் இருக்கத்தான் செய்கிறார்கள். அவர்களைக் கெட்டவர்கள் என்று ஒதுக்கிவிட முடியாது. இப்பொழுது சொல்லப் போனால் முதல் ரக ஊர்சுற்றிகள் இப்படிப்பட்டவர்கள்தான்! மிக அதிகமான பிரயாணங்கள் செய்ததாலும், நூற்றாண்டுகளாகப் படைக்கப்பட்ட எல்லையில்லா ஞானத்தை ஆராய்ந்ததாலும், ஊர்சுற்றிகள் மதத் தொடர்பை உதறிவிடலாம். என்றாலும் அவர்கள் எல்லா ஊர் சுற்றிகளின் நலத்தையும், மனித சமுதாயத்தின் நலத்தையும் விரும்புபவர் களாகவே இருக்கிறார்கள். வாய்ப்பு கிடைக்கும் போது நாத்திக ஊர்சுற்றி, தன் கருத்துக்களைத் தெளிவாகக் கூறுவதற்குப் பின் வாங்குவதில்லை: என்றாலும் மதத்தில் உண்மையான நம்பிக்கை உள்ள சக ஊர்சுற்றியின் உள்ளத்தைச் சுடுசொல்லால் வேதனைக்குள்ளாக்க விரும்பவும் மாட்டான். எல்லாருடனும் அன்பாகப் பழகுவதுதான் அவனுடைய லட்சியமாகும்.

# 10. காதல்

ஊர்சுற்றி உலகத்திலெல்லாம் சுற்றித் திரிய வேண்டும். அவன் தன் வாழ்க்கையை ஆற்று வெள்ளத்தைப்போல் எப்பொழுதும் பெருக்கெடுத்தோடிடச் செய்துகொண்டே இருக்க வேண்டும். ஆகவே அவன் வாழ்க்கையோட்டத்திலே வரும் தடைகளைக் குறித்து எச்சரிக்கையாக இருக்க வேண்டும். இப்படிப்பட்ட சில தடைகளைப் பற்றி ஏற்கெனவே சொல்லப்பட்டுள்ளது. ஆனால் ஒரு ஊர்சுற்றி வாலிபனின் பாதையிலே பெருந்தடையாக வருவது காதல்தான்! காதல் என்றால் ஆண்-பெண் இருவரிடையே உருவாகும் அன்பு அவர்களிடையே தோன்றும் உடல் கவர்ச்சியும், உள்ளக் கவர்ச்சியும் கூடக் காதல் தான்! காதலை ஒரு உருவமற்ற மனக் கவர்ச்சி என்றும் கூறி விடுகிறார்கள். ஆனால் அது அவ்வளவு வலுவற்றதல்ல. காதல், ஆற்றின் கடும் வேகத்தையும் தடுத்து நிறுத்தக்கூடிய சக்தி படைத்ததாகும். சுயேச்சையாகச் சுற்றித்திரியும் மனிதனின் பலவீனமே இந்தக் காதலில் தான் அடங்கி இருக்கிறது. ஊர் சுற்றியின் வாழ்க்கை முழுதுமே ஒவ்வொரு மனிதனிடத்திலும் நட்பும், அன்பும் நிறைந்திருக்கின்றன. இந்த விஷயத்தை அவன் எங்குமே தவிர்ப்பதில்லை. இரு ஆடவரிடையே அன்பு தோன்றினால், அது உருவமற்றதாகவும் இருந்து விடலாம். ஆனால் ஆணுக்கும் பெண்ணுக்குமிடையே உருவாகும் அன்பு வெறும் மானசீகக் காதலாக மட்டும் இருந்துவிடாது. ஊர் சுற்றி எங்கெங்கோ திரிந்து கொண்டே ஓரிடத்துக்குப் போய்ச் சேருகிறான். அவன் தன் இனிய பழக்கத்தினால் அங்குள்ள ஆண்-பெண் எல்லாருடைய அன்புக்கும் பாத்திரமாகிவிடுகிறான். ஊர் சுற்றி அவ்விடத்தில் நீண்ட காலம் தங்கிவிட்டால், அவனுக்கு அங்குள்ள ஒரு இளம் அழகியுடன் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டு விட்டால், நிச்சயமாக அது ஆழ்ந்த காதலாகப் பரிணமித்துவிடும். எத்தனையோ பேர் புனிதமான, உருவமற்ற மானசீகக் காதலைப் புகழ்ந்து பாடியிருக்கிறார்கள். ஆண்-பெண் காதல் உடலுறவற்ற மானசீகக் காதலாக மட்டும் கூட இருக்க முடியுமென்று நம்மை

ஒப்புக்கொள்ளச் செய்ய முயன்றிருக்கிறார்கள். ஆனால் அவர்களுடைய இம்முயற்சி ஆத்ம திருப்திக்காகவும், பிறரை வஞ்சிக்கவும் மட்டுமே பயன்பட முடியும். 'பாஸிடிவ்' மின்சாரமும், 'நெகடிவ்' மின்சாரமும் கலந்தால் ஜுவாலை பிறக்காதென்று யாராவது சொன்னால், அது நம்பத் தகுந்த விஷயமில்லையல்லவா?

ஊர்சுற்றி தன்னுடைய அன்பாலும், நட்புறவாலுமே இந்த அபாயத்தை வரவழைத்துக் கொண்டுவிடுகிறான் என்பதல்ல. அவனுடைய அன்பு ஆழமானதாகவும், நீண்ட காலமுடையதாகவும் ஆகும்போதுதான் இவ்வபாயம் ஏற்பட்டுவிடுகிறது. இனிப் பெண்ணும் அனுகூலமாக அமைந்துவிட்டால் சொல்ல வேண்டியதே இல்லை. ஆழ்ந்த நட்புறவு ஏற்படாமல் செய்வதற்காகத்தான், சில ஊர் சுற்றித் தலைவர்கள் ஓரிடத்தில் ஓர் இரவுக்கதிகமாகத் தங்கக் கூடாதென்று விதி வகுத்திருக்கின்றனர். குறிக்கோளில்லாமல் திரிபவர்களுக்கு இவ்விதி சிறந்ததாக இருக்கலாம். ஆனால் ஊர்சுற்றி உலகத்தையெல்லாம் நன்றாகக் கண்திறந்து பார்க்க வேண்டும்! பல்வேறு இடங்களிலுள்ள பொருட்களையும், மனிதர்களையும் உன்னிப்பாகக் கவனிக்க வேண்டும். இதெல்லாம் மேலெழுந்த வாரியாகப் பார்த்துக் கொண்டே போய்விட்டால் முடியாது. முக்கியத்துவமுள்ள ஓரிடத்தில் இரண்டு மூன்று மாதங்கள் அல்லது ஓரிரு ஆண்டுகள் கூட இருக்க வேண்டி வரலாம். இதனால் அங்கே ஆழ்ந்த நட்புறவு தோன்றக்கூடிய அபாயமிருக்கிறது. புத்தர் இப்படிப்பட்ட நிலைமையினைச் சமாளிக்க இரண்டு பாதுகாவல்களைத் தெரிவித்துள்ளார்- வெட்கமும், சங்கோஜமும்- அவர் வெட்கமும், சங்கோஜமும் புனிதமானவை என்றும், மகிமை பொருந்தியவை என்றும் அவற்றின் புகழ் பாடியிருக்கிறார். இவ்விரண்டின் தர்மங்களைப் பின்பற்றுவதின் மூலம் வீழ்ச்சியிலிருந்து தம்மைத் தாமே பாதுகாத்துக்கொள்ளலாமென்றும் அவர் கூறியிருக்கிறார். புத்தரின் மற்ற உபதேசங்களைப் போலவே அவருடைய இந்தச் சாதாரண கூற்றும் மிகவும் முக்கியத்துவமுடையதாகும். வெட்கமும் சங்கோஜமும் நமக்கெவ்வளவோ பாதுகாப்பளிக்கின்றன. தன்னுடைய கவுரவத்தையும் தன் நாட்டின் கவுரவத்தையும், தன் சமுதாயத்தின் கவுரவத்தையும் எவர் பெரிதாகக் கருதுகிறார்களோ, அவர்கள் வெட்கமும், சங்கோஜமும் கொண்டவர்களாகத்தான் இருக்க வேண்டும். உயர் ரக ஊர்சுற்றி தனக்கும், தனது நாட்டிற்கும் களங்கம் உண்டுபண்ணும் எந்தக் காரியத்தையுமே செய்யத் துணியமாட்டான். ஆகவே வெட்கமும், சங்கோஜமும் ஊர்சுற்றிக்குப் பெரிய அளவில் இருக்க வேண்டும். ஆனால் ஒரு சங்கடம் என்னவெனில், ஒத்த கருத்துடைய இருவரிடையே நட்பு பெருகப் பெருக

அவர்களிடையே சங்கோஜம் மறைந்துவிடுகிறது: அவர்களிருவரும் ஒருவரையொருவர் புரிந்துகொள்ளத் தொடங்கும்போது, வெட்கமும் மறைந்துவிடுகிறது. ஆகவே வெட்கமும், சங்கோஜமும் கூட ஓரளவுக்குத்தான் பாதுகாப்பு தர முடியும்.

ஆண்-பெண் கவர்ச்சியும், அதன் முடிவும் மனிதகுலத்தின் ஒரு புராதனமான பிரச்சினையாகும். இப்பிரச்சினைக்குத் தீர்வு காணப் பல விதத்திலும் முயற்சி செய்யப்பட்டது. புராதன சமுதாயத்தில் இது ஒரு பிரச்சினையாகவே இருக்கவில்லை. ஏனெனில், அங்கு இருவருடைய பழக்கமும் நெருக்கமும் மிகவும் இயற்கையாக இருந்தன. சமுதாயம் அவர்களுக்கு எவ்விதத் தடையும் விதிக்கவில்லை. ஆனால் சமுதாயம் வளர- வளர குறிப்பாகச் சமுதாயத்தில் பெண்ணைவிட ஆணின் அதிகாரம் மேலோங்கிய பிறகு, அவன் ஆண்- பெண்களின் இயற்கையான நெருக்கத்திற்குப் பலவிதத் தடைகள் விதிக்கலானான். தடைகளுடன் கூடவே சில வாய்ப்புகளும் வைத்தான். மிகப் பழமை யான இனங்கள் என்று சொல்ல இயலாத எத்தனையோ இனங்களில் விருந்தாளிகளைச் சந்தோஷப்படுத்தத் தம் வீட்டுப் பெண்களை அனுப்பும் பழக்கமும் இருந்து வந்தது. கிரீஸ் சிந்தனையாளர் சாக்ரடீஸ் கூடத் தம் விருந்தாளிகளை இப்படி மகிழ்வுபடுத்தி இருக்கிறார். உத்தரப் பிரதேசத்தைச் சேர்ந்த டேராடூன் மாவட்டத் திலுள்ள 'ஜெலின்ஸார்' பகுதியில் இந்த நூற்றாண்டின் ஆரம்பம் வரையிலும், விருந்தாளிகளை இம்முறையில் சந்தோஷப்படுத்திக் கொண்டிருந்தார்கள். தங்கு தடையற்ற பாலுணர்வுக்கு இருந்த எல்லா வாய்ப்புகளும் மறைந்து விட்ட பிறகு, நம்மவர்கள் இரட்டை நல்லொழுக்கத்தைக் கடைப்பிடிக்க ஆரம்பித்துவிட்டனர். சமுதாயத் துக்கு ஒரு ஒழுக்கத்தை வற்புறுத்துவிட்டு, தனிமையில் தமக்காக மற்றொரு விதமான ஒழுங்கு முறையை ஏற்படுத்திக் கொண்டு விட்டனர். நமது நாட்டில் பௌத்தர்களும் இந்துக்களும் மட்டுமல்ல: வெளிநாட்டுக்காரர்களும் இப்படிப்பட்ட இரட்டை ஒழுங்கு முறையை அனுசரித்தனர். இந்தியாவில் பழமையான மதவெறி கொண்டவர்கள் மட்டுமல்ல: தற்போதைய எத்தனையோ மதிப்பிற்குரிய 'மகான்'களும் கூட, இந்த இரட்டை நல்லொழுக்க முறையை ஆன்மீக வளர்ச்சியின் ஒரு தவிர்க்க முடியாத அங்கமாகக் கருதியிருக் கிறார்கள். ஆண்- பெண் உறவை இயற்கையாக எடுத்துக்கொள்வதில் தவறொன்றுமில்லை. ஆனால் ஆன்மீக வளர்ச்சிக்கு அதனை ஒரு சாதனமாகக் கொள்வது, மனிதனின் கீழ்த்தர உணர்ச்சிகளைச் சுயநலத்துக்காகப் பயன்படுத்திக் கொள்வதேயாகும்: மனிதனின் பகுத்தறிவைப் பரிகசிப்பதேயாகும்.

முதல் ரக ஊர்சுற்றி ஆன்மீக வளர்ச்சி, வேதாந்தம், யோகத்தின் அற்புதச் செயல் ஆகிய ஏமாற்று வித்தைகளில் சிக்கிக்கொண்டு புராதன அல்லது நவீன 'வாம மார்க்க'த்*தின் தத்துவத்தை ஏற்றுக்கொள்ள மாட்டான். ஊர்சுற்றி ஆண்-பெண் உறவை, அதன் பழமையான இயற்கை உருவத்தில் ஏற்றுக் கொள்வதில் தவறில்லை: ஆனாலும் அறம், பொருள் இன்பம், மோட்சம் போன்றவற்றைப் பெறுவதற்கு அதை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பது மிகைப் படுத்தப்படுவதேயாகும். ஊர்சுற்றி வானத்தில் சுயேச்சையாகப் பறந்து திரியும் பறவையைப் போல் இருக்க வேண்டும். அவன் தன் இறக்கைகளைத் தாமே வெட்டிக் கொள்ளக்கூடாது.

வெட்கமும், சங்கோஜமும் போலவே வேறு சில விஷயங்களும் இருக்கின்றன. அவற்றைக்கொண்டுகூட ஊர்சுற்றி தன்னைப் பாதுகாத்துக் கொள்ளலாம். ஆண் பெண் உறவு சுலபமாக இருக்கும் இடங்களிலெல்லாம் நோய்களும் தாராளமாகவே இருக்கும். நாகரிக வளர்ச்சியடையாத இனங்களில் ஆண்- பெண் உறவுக்குத் தடைகள் அதிகமிருக்காது. தடைகள் அதிகமுள்ள நாகரிக வளர்ச்சியடைந்த இனத்தவர் அதிகத் தடைகளில்லாத இனத்தவருடன் உடலுறவு கொள்வார்களேயானால், மிகப் பெருமளவில் நோய்கள் பரவி விடுகின்றன. இமயமலைப் பகுதிகளைச் சேர்ந்த மக்கள் ஆண்-பெண் உறவு விஷயத்தில், இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன் பிருந்தவர்களைப் போலவே இருந்தனர். வெள்ளையர் இமயமலைப் பகுதிகளின் சில இடங்களில் வெள்ளைச் சிப்பாய்களுக்காகப் படை விடுதிகளை ஏற்படுத்தினர். அங்கே சமவெளிப் பகுதி மக்களும் போய்ச் சேர்ந்துவிட்டனர். இப்படை விடுதிகள் நோய்களைப் பரப்பும் விடுதிகளாக மாறிவிட்டன. இன்று இவ்விடுதிகளின் அருகிலுள்ள கிராம மக்களில் எழுபது சதவீதம் பேர் ஆண்-பெண் உறவு நோய்களால் துன்பப்படுகின்றனர். சிம்லா நகரத்துக்கருகிலுள்ள சில கிராமங்கள் முற்றாக அழிந்துபடுவதற்குத் தயாராயிருக்கின்றன. ஒரு கிராமத்திலுள்ள பல குடும்பங்கள் இந்நோய்களால் சந்ததியற்றுப் போய்விட்டன. இந்நோய்கள் குலத்தையே நிர்மூலம் செய்து விடுவதை மட்டுமல்ல, நோயுற்ற மனிதனைத் துன்புறுத்துவது மட்டுமல்ல; மிக விரைவாக மற்றவர்களுக்கும் பரவிவிடுகின்றன. இதனால்தான் படை விடுதிகள் அருகிலிருந்த எந்தனையோ கிராமங்கள் அழிந்துபோய் விட்டன. இந்நோய்கள் மிக வேகமாகப் பரவுவதுடன், குஷ்ட

* "வாம மார்க்கம்" கடவுளை ஆராதிக்கும் பழமையான முறைகளில் ஒன்று. இம்முறைகளில் மது, மாமிசம், மாது ஆகியவை தாராளமாகப் பயன்படுத்தப்பட்டன.
-மொழிபெயர்ப்பாளர்

நோயையும், சித்தப்பிரமையையும் கூட உண்டாக்குகின்றன. அடுத்த தலைமுறையினருக்குக் கூட இந்நோய்கள் பரவி விடுவதால், தனி மனிதர்களுக்கு மட்டுமல்லாமல், ஒரு இனத்திற்கே பெரும் அழிவை உண்டாக்கிவிடுகின்றன. இந்த நோய்களில் சிலவற்றுக்கு 'பென்சிலின்' போன்ற ஒருசில நல்ல மருந்துகள் கண்டுபிடிக்கப்பட்டாலும், அவற்றினால் எல்லா நோய்களையுமே குணப்படுத்திவிட முடியாது. ஊர் சுற்றி இவ்விஷயத்தில் மிகவும் ஜாக்கிரதையாகச் சிந்தித்து, இதற்குப் பலியாகாமல் தன்னைத்தானே பாதுகாத்துக் கொள்ள வேண்டும். ஆண்-பெண் உறவு சுலபமாகக் கிடைக்கும் இடங்களில் இந்நோய்களின் பயங்கரத்தை கவனத்திலிருத்திக் கொள்ள வேண்டும். ஆண்-பெண் உறவு சுலபமாகக் கிடைக்காத இடங்களில் வெட்கத்தையும், சங்கோஜத்தையும் பாதுகாப்பாக வைத்துக்கொண்டால், இளம் ஊர்சுற்றி தன்னைத்தானே காத்துக்கொள்ள இயலும்.

ஆண்-பெண் கவர்ச்சி மிகவும் வலுவானதாகும். ஊர் சுற்றி தன் கடமையிலிருந்து வழுவாமல், தன் வாழ்க்கைப் பயணத்தை இனிதே முடிக்க முடியுமா? நிச்சயமாக முடிக்க முடியும். இதைப்பற்றி நாம் ஏற்கெனவே கூறியிருக்கிறோம்.

ஆண்-பெண் ஊர்சுற்றிகள் இருவரிடையே காதல் தோன்றினால் மிகச் சிறப்பாக இருக்கும். அவர்களிருவரும் காதல் தம் பயணத்துக்குக் குறுக்கே வரக்கூடாதென்று சபதம் செய்துகொள்ள வேண்டும். அப்படிப்பட்ட காதல் ஆறு- ஓடத்தைப் போல் நெருக்கமாக இருக்கும். ஆனால் எப்பொழுதுமே எண்ணிக்கை இரண்டைத் தாண்டக் கூடாது: மூன்று நான்காகிவிடக் கூடாது. இது கஷ்டமாக இருந்தாலும், ஊர் சுற்றி விரதத்தை மேற்கொண்டவர்கள் இதற்கும் தயாராகத்தான் இருக்க வேண்டும்.

எத்தனையோ ஊர் சுற்றிகள் சொற்ப அஜாக்கிரத்தையினால் தம் குறிக்கோளை இழந்து ஒரே இடத்தில் தேங்கிவிட்டனர். ஊர் உலகமெல்லாம் சுதந்திரமாகச் சுற்றித் திரிந்து, தமது அறிவால் மற்றவர்களுக்கு உதவிபுரிந்த சிறந்த வாழ்க்கை எங்கே? பிறகு இந்த அதல பாதாள வீழ்ச்சி எங்கே? எனக்கு இன்றும் எனது நண்பரொருவரின் வேதனை வரலாறு நினைவுக்கு வருகிறது. அவர் அயல் நாட்டுக்குப் போகாவிட்டாலும், இந்தியாவுக்குள் மிக விரிவான முறையில் பயணம் செய்தார். அவர் மட்டும் ஒரு தவறு புரியாமலிருந்திருந்தால், வெளிநாடுகளிலும் நன்றாகச் சுற்றுப் பயணம் செய்திருப்பார். அவர் ஒரு சிறந்த அறிஞர். அவருக்கு நான் நல்ல மரியாதையளித்து வந்தேன். என்றாலும் ஒருமுறை தவறான எண்ணத்தால் அவருக்கு

என் மீது பொறாமையும் ஏற்பட்டது. சுற்றித் திரியும்போது அவர் ஓரிடத்தில் தங்கிவிட்டார். ஒருவரிலிருந்து இருவராகிவிட்டனர். இருவரிலிருந்து அறுவராகிவிட்டனர். உலகக் கவலைகள் எல்லாம் அவர்மேல் வந்து விழுந்துவிட்டன. குடும்பக் கவலைகளினால் அவருடைய துணிவும், சுதந்திரத் தன்மையும் மறைந்துவிட்டன. குடும்ப பாரத்தினால் வானத்திலே சுயேச்சையாகப் பறந்து திரிந்த அந்தப் பறவை, தரையில் விழுந்து தத்தளித்துக்கொண்டிருந்தது. கவலைகள் அவரது உடல் நலத்தையும், மன உறுதியையும் தளரச் செய்துவிட்டன. அற்புத மேதாவியும், சுதந்திர அறிஞருமான அந்நண்பர் கடைசியில் சித்தம் கலங்கிப் பைத்தியமாகிவிட்டார். ஒன்றிரண்டு வருடங்களுக்குள்ளாகவே அவர் உலகக் கவலைகளி லிருந்து விடுதலை பெற்று விட்டது ஓரளவுக்கு நல்லதாகவே போயிற்று! அவர் ஒரு அசாதாரணமாக அறிஞராக இல்லாமலிருந் திருந்தால், எதிர்கால கனவுகள் காணும் ஆற்றல் பெறாமலிருந்திருந் தால் ஒரு சாதாரண மனிதனைப் போல் எப்படியோ பிழைத்திருப்பார். அவர் வாழ்க்கையில் ஒரு சிறந்த குறிக்கோளை ஏற்படுத்திக் கொண்ட பிறகு, தன் தவறால் அதை விட்டுவிட்ட காரணத்தால், நிராசையும் வருத்தமும் கொண்டதால், அவருக்கு அவ்வளவு பெரும் தண்டனை கிடைத்தது. ஊர்சுற்றி வாலிபன் ஒரு பெரிய லட்சியத்துக்காகத் தம் வாழ்க்கையை அர்ப்பணித்துக் கொள்வதற்கு முன்பாக நன்றாகச் சிந்திக்க வேண்டும். தவறுகளை இழைப்பதால் மனிதனுக்கு ஏற்படும் வீழ்ச்சியையும் நன்கு கவனத்திலிருத்திக் கொள்ள வேண்டும்.

இப்படிச் சொல்வதின் பொருள், ஊர்சுற்றிகளும் நடைமுறைக் கொவ்வாத பிரம்மச்சரியத்தைக் கைக்கொள்ள வேண்டுமென்பதல்ல, தற்காலச் சமுதாயம் கடுமையாகக் கைக்கொள்ள வேண்டுமென்று கருதக்கூடிய விதிமுறைகளைச் சுலபமாகத் தகர்த்தெறிந்து விடலா மென்று எண்ணுவது வெறும் கற்பனையேயாகும். இவ்விதிமுறைகள் சில ஆண்டுகளுக்குப் பிறகு மாறிவிடவும் கூடும். அப்பொழுது ஊர்சுற்றியின் பாதையில் வரும் எத்தனையோ தடைகள் மறைந்து விடவும் கூடும். ஆனால் இன்று ஊர் சுற்றிகூடத் தற்கால விதிமுறை களை அனுசரிக்கத்தான் வேண்டும். எனவே வெட்கத்தையும் சங்கோஜத்தையும் அவன் துறந்துவிடக்கூடாது என்றாலும் காதல் செய்வதில் குற்றமேதுமில்லை. காதல் ரசமற்ற மனித வாழ்க்கையை மகிழ்ச்சியுடையதாக்கிவிடுகிறது. மகத்தான தியாக உணர்வை ஊட்டுகிறது. இருவரின் காதலால் எத்தனையோ யுகங்களாக மனித இனம் வளர்ந்துகொண்டிருக்கிறது. வருங்காலத்திலும் ஆண்-பெண் கவர்ச்சி இல்லாமலிருப்பதைக் கற்பனை செய்தும் பார்க்க முடியாது. காதல் இருக்கக்கூடாதென்று நாம் கூறவில்லை. காதலும் இருக்கக்

கட்டும்: அத்துடன் பறந்து திரிய இறக்கைகளும் இருக்கட்டும். இறக்கைகளை வெட்டிக்கொண்டு காதலில் கட்டுண்டு கிடக்க வேண்டுமென்றால், ஊர்சுற்றி அந்தக் காதலுக்கு விடை கொடுத்துவிட வேண்டியதுதான். காதலர்கள் இருவரும் ஊர் சுற்றிகளாக இருந்தால், தடைகள் குறைவாக இருக்கும். இமயமலைகளிலிருந்து ஊர் சுற்றியொருவர், பல வருடங்கள் வரையிலும் இந்தியாவின் எல்லையிலிருந்து சீனாவுக்குத் திரிந்துகொண்டிருந்தார். அவர் கூடவே ஒரு பெண் ஊர்சுற்றியும் இருந்தாள். சில ஆண்டுகளுக்குப் பிறகு அவர்கள் ஏனோ இருவரிலிருந்து மூவராகிவிட்டனர். அவ்வளவுதான்! அவருடைய உற்சாகமும், வேகமும் எங்கோ போய் மறைந்துவிட்டன.

காதலைப் பற்றி நாம் எப்படியெப்படிச் சிந்திக்க வேண்டுமென்பதை இங்கே எடுத்துக் காட்டினோம். ஊர் சுற்றி, சூழ்நிலைக்கேற்றவாறு சிந்தித்து, தன் பாதையை அமைத்துக்கொள்ள வேண்டும். உடலில் வலுவிருக்கும்போது தவறு இழைத்தாலும் சமாளித்துக் கொள்ளலாம். ஆனால் காலம் கடந்துவிட்ட பிறகு, உடலில் சக்தி அற்றுப் போய்விட்ட பிறகு, தோளின் மேல் சுமையை ஏற்றிக் கொள்வது வேதனை நிறைந்ததாகி விடுகிறது. ஊர் சுற்றியின் கடைசிக் காலம் பென்ஷன் பெறக் கூடியதல்ல, அவன் முதுமையில் தான் பெற்ற சிறந்த அனுபவத்தையும், அறிவையும் உலக வளர்ச்சிக்காகப் பயன்படுத்த வேண்டும். அப்படிச்செய்தால்தான் அவன் தன் நெஞ்சுச் சுமையை இறக்கிக் கொள்ள முடியும். காலம் போகப் போக, இரவும் பகலும் குறைந்து கொண்டே வருகின்றன என்பதையும் இத்துடன் நினைவிலிருத்திக் கொள்ள வேண்டும். சிறு வயதில் கடந்து போன காலத்தை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள். அன்றைய ஒருநாள் இன்றைய பத்து நாட்களுக்குச் சமமாக விளங்கும். மனிதனின் கடைசிக் காலத்தில் ஒரு பக்கம் நாட்கள் வேகமாக ஓடிக்கொண்டிருக்கும். மறுபக்கம் அவன் செய்ய வேண்டிய காரியங்கள் அதிகமாகிக் கொண்டே இருக்கும். இந்த உலகத்திலிருந்து விடைபெற்றுச் செல்லும்போது, காலத்தின் முக்கியத்துவத்தை உணர்ந்து, ஊர் சுற்றியதில் தனக்குக் கிடைத்த அறிவையும் அனுபவங்களையும் உலகத்துக்குத் தந்துவிட்டு, இறுதி யாத்திரையைத் தொடங்கிவிட வேண்டும். இந்நிலையில் ஊர்சுற்றி கடமைக்கு வெளியே சென்று காதல் செய்ய எங்கே அவகாசம் இருக்கிறது? இதேபோல் ஊர் சுற்றுவதிலிருந்து ஓய்வு பெற்றுக் காதலிக்கும் யோசனையும் சொல்வதற்கில்லை.

அப்படியென்றால், காளிதாசரின் காவியமான “மேக தூத”த்தில் வரும் யக்ஷனைப் போல் ஓராண்டுக்கல்லாமல் வாழ்க்கை பூராவுமே

ஊர்சுற்றி காதலில்லாமல் வாழ வேண்டியதுதானா? நடைமுறையில் அப்படித்தான் வாழ வேண்டும் போல் தோன்றுகிறது. ஊர் சுற்றி தன் வாயால் சொன்னாலும் சொல்லாவிட்டாலும், அவனைக் காதலித்த வர்கள் எவருமே மகிழ்ச்சியாக இருக்க முடியாது. அவன் தன் இதயம் முழுவதையும் ஏற்கெனவே இன்னொரு காதலியான ஊர் சுற்றுதலுக்குத் தந்துவிட்டான். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொன்றைத் தர அவனுக்கு இரண்டு இதயங்கள் இல்லை. ஊர் சுற்றிகளைக் காதலித்தவர்கள் எப்பொழுதுமே மகிழ்ச்சியடைந்ததில்லை: திருப்திகரமான வாழ்வை அனுபவித்ததில்லை. நமது நாட்டில் வங்கத்திலும், அஸ்ஸாமிலும், ஒரிசாவிலும் மந்திர மாயாஜாலக்காரிகள் அதிகம் பேர் இருப்பதாகச் சொல்லிக்கொள்கிறார்கள். அவர்கள் ஆண்களைச் செம்மறியாடு களாக மாற்றி, தம்மிடம் வைத்துக் கொள்வதாகவும் கூறிக் கொள் கிறார்கள். ஊர் சுற்றிகள் மத்தியில் இப்படிப்பட்ட கற்பனைக் கதைகள் மிக வேகமாகப் பரவி விடுகின்றன. எல்லா இடங்களிலுமே சுற்றித் திரிந்த ஒரு சாது இமயமலைப் பகுதியிலுள்ள ‘குலூ’ பள்ளத் தாக்குக்கு மட்டும் போகவே இல்லை. காரணம், அவருடைய குருநாதர் குலூவுக்குப் போனால், ஆந்தையாகி விடுவாய் என்று சொல்லி வைத்தாராம்! இன்றைய நமது ஊர்சுற்றி இந்தியாவுக்குள் மட்டுமல்ல, வெளிநாடுகளிலும் நன்றாகச் சுற்றித் திரிய வேண்டும்: எத்தனையோ புதிய இடங்களுக்குச் செல்ல வேண்டும்: எத்தனையோ புதிய அனுபவங்களைப் பெற வேண்டும். பயங்கரப் பாதைகளில் போகும்போது துணிவு மிகமிகத் தேவைப்படுவது போலவே, ஊர் சுற்றியிடம் மனோதிடமும் பெருமளவுக்கு இருக்க வேண்டும்.

## 11. நாட்டறிவு

இன்றைய உலகத்திற்குத் தேவையான ஊர் சுற்றிகள் தமது சொந்த நலத்துக்காக மட்டுமே சுற்றுப்பயணம் செய்யக்கூடாது. அவர்கள் காணும் ஒவ்வொரு பொருளையும், ஊர் சுற்றித் திரியாத மக்களுக்குப் பயன்படும் விதத்தில் ஆராய்ந்து பார்க்க வேண்டும். ஆகவே ஒரு நாட்டில் சுற்றித் திரிவதற்கு முன்பாகவே ஊர்சுற்றி அந்நாட்டைப் பற்றிய எல்லா விஷயங்களையும் தெரிந்து வைத்திருக்க வேண்டும். எல்லாவற்றுக்கும் முதலில் அந்த நாட்டுக்குப் போகும் பாதையையும், அந்த நாட்டுத் தேசப் படத்தையும் தெரிந்து கொள்ள வேண்டும். பழைய காலத்து ஊர்சுற்றிகளுக்கு இந்த விஷயத்தில் மிகவும் வசதிக் குறைவு இருந்தது. அப்பொழுதிருந்த வரைபடங்களும் கச்சித மானவையல்ல: வெறும் ஊகங்களைக் கொண்டே தயாரிக்கப் பட்டவை. அவ்வரைபடங்களின் மூலம் சிறு முக்கிய விஷயங்களும், திசைகளும் மட்டுமே தெரிந்தன. இன்றும் “டாலமி” போன்ற பயணிகள் தயார் செய்த வரைபடங்களைப் பார்க்கும்போது இது விளங்கும். அவ்வரைபடங்களின் மூலம் இன்றைய நாடுகளைத் தெரிந்துகொள்வது கடினம்தான்! கிருத்துவ நூற்றாண்டு தொடங்கிய பின்னர் ரோமானிய, இந்திய, அரேபிய ஜோதிடர்கள் தொலை நோக்கிகளின் வழியாகப் பல்வேறு நாடுகளையும், நகரங்களின் அட்சரேகைகளையும் தெரிந்து கொண்ட பிறகு, பூலோக அறிவைப் பெறுவது சுலபமாகிவிட்டது. எனினும் பதினெட்டாம் நூற்றாண்டி லிருந்துதான் நல்ல வரைபடங்கள் தயாராகத் தொடங்கின. இன்று வரைபடத் தயாரிப்பு ஒரு சிறந்த கலையாகவும், விஞ்ஞானமாகவும் திகழ்கிறது. ஒரு நாட்டில் சுற்றுப் பயணம் செய்ய விரும்பும் ஊர் சுற்றிக்கு, அந்நாட்டு வரைபடம் பார்க்கத் தெரிந்திருக்க வேண்டும். அந்நாட்டு முக்கிய இடங்களை மனத்திலிருத்திக் கொள்ளவேண்டும். அங்குள்ள நிலம் மலைப் பாங்கானதா, சமவெளியா, மணல் பாங்கானதா என்பது தெரிந்திருக்க வேண்டும். மலைப்பாங்கான தென்றால் எவ்வளவு உயரமானதென்பதும் அறிந்திருக்க வேண்டும்.

அட்சரேகைகளையும், உயரத்தையும் பொறுத்து தட்ப வெப்பநிலை மாறுபடுகிறது. "சுமத்ரா" தீவின் மத்தியில் செல்லும் பூமத்திய ரேகைக்கு வடக்கிலும், தெற்கிலும் பருவங்களின் மாற்றம் ஒன்றுக் கொன்று முரணாக இருக்கும். ஜாவா, பாலித்தீவுகளுக்குப் போகும் ஊர் சுற்றிகள் இதைக் கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டும். தேவலோகத்தில் ஆறு மாதங்கள் பகலும், ஆறு மாதங்கள் இரவும் இருக்குமென்றும் நம் நாட்டுப் புராணங்கள் சொல்கின்றன. ஆனால் பூகோள உண்மைகளின் மூலம் தற்காலத்தில் தான் இவ்வுண்மை தெரிந்தது. இரவும் பகலும் வளர்ந்து பெருகி ஒன்றையொன்று ஆக்கிரமிக்கும் உண்மை எப்பொழுதோ கண்டுபிடிக்கப்பட்டது. கி.பி. 1395-ல் தைமூர் என்பவன் ருஷ்யாவின் மங்கோலிய மன்னர்களின் மேல் படையெடுத்து மாஸ்கோ நகர் வரை சென்றான். அவனது படை வடக்கில் வெகு தூரம் வரை போயிற்று. அங்கு இரவு பெயரளவுக்குத் தான் இருந்தது. இஸ்லாம் மதத்தைச் சேர்ந்த தைமூருக்கு அதிர்ஷ்ட வசமாக அப்பொழுது உண்ணா நோன்பிருக்கும் ரம்ஜான் மாதமல்ல. இல்லாவிட்டால் அவன் மதத்தையாவது இழந்திருக்க வேண்டும்: அல்லது உயிரையாவது துறந்திருக்க வேண்டும். இருபது மணிநேரப் பகலை ஐந்து தொழுகைகளுக்காக எப்படிப் பிரிப்பது? மூன்றாண்டு களுக்குப் பிறகு, கி.பி. 1398-ல் தைமூர் டெல்லியையும் கொள்ளை யடித்தான். ஆனால் தைமூரின் சிப்பாய்கள் கூறிய இவ்வுண்மையை டெல்லி நகரவாசிகள் நம்பியிருக்கமாட்டார்கள். மிகத் தொலை விலுள்ள வட துருவத்தில் ஆறு மாதம் பகலும், ஆறு மாதம் இரவும் இருக்கின்றன. லெனின் கிராட் நகரில் நான் இருந்தபோது கோடையில் மூன்று மாதங்கள் வரை இரவே வராததைக் கண்டேன். பத்து மணிக்குச் சூரியன் மறையும். மேற்கொண்டு இரண்டு மணி நேரம் தெளிவற்றி ருக்கும். பிறகு சூரியன் உதித்துவிடும். பாவம், இரவுக்கு வாய்ப்பே இல்லாமற் போய்விடும். நட்ட நடுநிசியிலும்கூட லெனின்கிராடில் நீங்கள் விளக்கில்லாமலேயே செய்திப்பத்திரிக்கையைப் படித்துக் கொள்ளலாம்.

ஊர்சுற்றி தன் முதல் பயணத்துக்கு முன்பாகவே இந்தப் பூகோள அற்புதங்களைப் பற்றித் தெரிந்திருக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட நாட்டில் சுற்றித் திரிவதற்கு முன்பாக அவன் வரை படத்தைப் பார்த்து, அந்நாட்டின் முக்கிய இடங்களைக் குறித்து அறிந்துகொள்ள வேண்டும். திபேத்துக்கும் இந்தியாவுக்குமிடையே வானத்தைத் தொடும் இமயமலைத் தொடர்கள் இருக்கின்றன. ஆனால் அவை எப்பொழுதுமே மனிதனால் தாண்ட முடியாதவையாக இருந்ததில்லை. காஷ்மீரிலிருந்து அஸ்ஸாம் வரை எத்தனையோ கணவாய்கள் உள்ளன. அவற்றின் வழியாக இமயமலைகளைக் கடந்து

செல்லலாம். ஆனால் எல்லா வழிகளுமே சுலபமானவையல்ல என்பது உண்மைதான்! எல்லாப் பாதைகளிலும் கிராமங்கள் இல்லை என்பதும் உண்மையே! முதல் தடவையாகச் செல்பவன் முக்கிய பாதைகளின் வழியாகவேதான் செல்வான். எங்கெங்கு எல்லைப் பாதுகாப்பு உள்ளதோ, அங்கெல்லாம் மாறுவேடமணிந்து போகலாம் அல்லது அதிக ஜன நடமாட்டமில்லாத வழிகளில் பயணத்தைத் தொடரலாம்.

தேசப் படத்தைப் பார்த்து, அஸ்ஸாம், பூட்டான், ஸிக்கிம், நேப்பாளம், குமாயூன், டிஹறி, புஷ்ஹர், காங்கடா, காஷ்மீர் ஆகிய இடங்களிலிருந்து, திபேத்துக்குப் போகும் பாதைகளையும், வழியில் வரும் ஊர்களையும் ஆங்காங்குள்ள மலை உயரங்களையும் தெரிந்து கொண்டவனுக்கு, எத்தனையோ விஷயங்கள் தெளிவாகிவிடுகின்றன. ஒரு மலை முகட்டைக் கடந்தால், மேற்கொண்டு செல்ல வேண்டிய பாதை தானாகவே புலப்பட்டுவிடும். ஊர் சுற்றுவதில் நாட்ட முள்ளவனுக்கு ஒரு முறை பார்த்த தேசப்படம் மறக்கவே செய்யாது. தேசப்படத்தின் மீது அவனுக்கு ஆர்வம் உண்டாகிவிடுகிறது. ரகசிய மாகச் செய்யும் பிரயாணங்களின்போது, தேசப்படத்தை நம்முடன் வைத்திருக்கக்கூடாதென்பதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். ஏனெனில் ஒருவேளை பிடிபட்டு விட்டால், வெளிநாட்டு ஒற்றனென்று கருதப்படும் அபாயமிருக்கிறது. ஆகவே வரைபடத்தை நமது மூளையில் பதித்துக் கொள்வதே சிறந்ததாகும். ஒரோர் சமயம் எல்லாருக்கும் தெரிந்த புத்தகத்தில் அச்சாகியுள்ள தேசப்படத் தையும் பயன்படுத்திக்கொள்ளலாம். ஒரோர் சந்தர்ப்பத்தில் தேசப் படத்துடன் புத்தகத்தையும் விட்டுவிட நேரிடலாம். முதல் திபேத்திய யாத்திரையின்போது, ஆங்கிலத்தின் வழியாகத் திபேத்திய மொழி யைக் கற்று வந்த புத்தகத்தை நான் ஓரிடத்தில் வீசி எறிந்து விட்டேன்: பல தேசப் படங்களை ஆற்று வெள்ளத்துக்கு அர்ப்பணித்து விட்டேன்.

தேசப்படத்தை உபயோகிப்பதுடன், அதைத் தயார் செய்வதையும் சற்றுக் கற்றிருக்க வேண்டும். மற்ற தேசப் படங்களிலிருந்து முக்கிய விஷயங்களைக் குறித்துக் கொள்ளத் தெரிந்திருத்தல் அவசியம். பூகோள அறிவு பெற்றிருப்பவன், சற்றுத் தெரிந்த இடங்களில் பிரயாணம் செய்யவிருப்பவன், தேசப் படத்தைப் பார்த்து அது சரியாக இருக்கிறதா, இல்லையா என்று கவனிக்க வேண்டும். திபேத்தில் மட்டுமல்ல: அஸ்ஸாமின் வடக்கு மூலையிலுள்ள சில இடங்களைக் குறித்துச் சரியான வரைபடம் இன்னும் தயாரிக்கப்பட வில்லை. சில தேசப்படங்களில் புள்ளிகளின் மூலம் ஆறுகளைக்

காட்டியிருப்பார்கள். இதன் பொருள் அந்தத் தேசப் படம் கச்சிதமானதல்ல என்பதுதான்! இப்படிப்பட்ட விவாதத்திற்குரிய இடங்களைப் பற்றிய உண்மைகளை அறிந்துகொள்வதும் இன்றைய ஊர்சுற்றியின் ஒரு கடமையாகும். ஓரோர் சமயம் அவன் முதலில் எதற்கும் தயாராயிருப்பதில்லை: ஆனால் தேவை ஏற்படும்போது ஒரு விஷயத்தைக் கற்றுக் கொள்கிறான். தேவைதான் எனக்கு எத்தனையோ விஷயங்களை வலுக்கட்டாயமாகக் கற்றுத் தந்தது. என்னுடைய ஊர் சுற்றி நண்பரும், இமயமலையிலுள்ள மானஸரோ வரைச் சேர்ந்தவருமான சுவாமி பிரவாணந்த் அவர்களைத் தேவை தான், சாமியாராக இருந்தவரைப் பூகோள அறிஞராக மாற்றிவிட்டது. அவர் மானஸரோவர் பகுதியைப் பற்றிய எத்தனையோ தவறான கருத்துக்களை ஆராய்ச்சி செய்து போக்கினார். ஒவ்வொரு ஊர் சுற்றியும் எல்லாம் அறிந்த அறிஞனாக இருக்க வேண்டுமென்று நாம் கூறவில்லை. ஆனால் ஊர் சுற்றுவதற்குப் புறப்பட்ட அவன், எல்லா விஷயங்களைக் குறித்தும் கொஞ்சம் கொஞ்சம் தெரிந்து வைத்தி ருப்பது அவசியமாகும்.

எல்லா நாடுகளின் தேசப் படங்களும் கிடைக்காமல் போகலாம். எல்லா நாடுகளையும் பற்றிய அறிமுக நூல்களும் நமக்குத் தெரிந்த மொழியில் இல்லாமலும் இருக்கலாம். ஆனால் ஒரு நாட்டைச் சுற்றப் புறப்படுவதற்கு முன்பாக, அந்நாட்டைப் பற்றிக் கிடைக்கக்கூடிய எல்லாத் தகவல்களையும் படித்தறிந்து கொள்வது பயனுள்ள தாயிருக்கும். இதனால் ஊர்சுற்றியின் கண்ணோட்டம் விசாலமான தாகிவிடும். தெளிவில்லாமலிருக்கும் இடங்களும் அவனுக்குத் தெளிவாகிவிடும். தனக்கு முன்பிருந்த ஊர்சுற்றிகளின் உழைப்பின் பலனைப் பயன்படுத்திக் கொள்வது, ஒவ்வொரு ஊர் சுற்றியின் கடமை யாகும்.

ஊர்சுற்றிக்குப் பயன்படும் நூல்கள் ஆங்கிலத்தில் மட்டுமல்லாமல், ஜெர்மனி, ருஷ்யா, பிரெஞ்சு மொழிகளிலும் நிறைய இருக்கின்றன. ஆனால் நமது இந்தி மொழி அடிமைத்தனத்தின் காரணத்தினால், இதுவரை அனாதையாகக் கிடந்தது. இப்பொழுது இந்தியிலும் இப்படிப்பட்ட இலக்கியத்தைப் படைப்பது நமது கடமையாகும். நமது நாட்டுக்காரர்கள் வியாபாரத்திற்காகவோ, அல்லது மற்ற காரியமாகவோ உலகத்தின் எந்த மூலையைப் போய் அடையவில்லை? ஆசியாவிலும், ஐரோப்பாவிலும் நம்மவர்கள் இல்லாத இடமே இல்லை. வட அமெரிக்காவிலும், தென் அமெரிக்க நாடுகளில் பல இடங்களிலும் ஆயிரக்கணக்கில் நம் நாட்டுக்காரர்கள் வாழ்ந்து வருகிறார்கள். கண்களால் பார்த்து, தம் எழுதுகோலால் எழுதக்

கூடியவர்களால் எத்தனையோ பயண நூல்களை எழுதிவிட முடியும். இதுவரை ஆங்கிலம், பிரெஞ்ச், ஜெர்மனி, ருஷ்ய, சீன மொழிகளில் பல்வேறு நாடுகளைப் பற்றி எழுதப்பட்ட பயண நூல்கள் நமது மொழிகளில் மொழிபெயர்க்கப்பட வேண்டும். அரேபியச் சுற்றுப் பயணிகள் எட்டாம் நூற்றாண்டிலிருந்து, பதினான்கு பதினைந்து நூற்றாண்டுகள் வரை உலக நாடுகளைப் பற்றி எத்தனையோ பூகோள நூல்களை எழுதினர். மேற்கத்திய மொழிகளில் இந்நூல்கள் எல்லாம் மொழிபெயர்க்கப்பட்டுவிட்டன. பழங்காலத்திலிருந்து இன்று வரை உலக மொழிகளில் எல்லாம் எழுதப்பட்ட பூகோள நூல்கள் அனைத்தும் மொழி பெயர்க்கப்படுவது நமது ஊர்சுற்றிகளின் சுற்றுப் பயணத்திற்கு மிகவும் உதவிகரமாக இருக்கும். இப்படிப்பட்ட நூல்கள் ஏறக்குறைய இரண்டாயிரம் இருக்கலாம். இனிவரும் பத்து- பதினைந் தாண்டுகளில் இந்தத் துறையில் நல்ல முன்னேற்றம் இருக்கும் என்று எதிர்பார்க்கிறோம். அது வரை படித்தவர்களாகிய நமது ஊர்சுற்றிகள் ஆங்கிலத்தில் பயன் பெற்றுக் கொண்டிருப்பர்.

பூகோள அறிவுடன் நாம் செல்லப் போகும் நாட்டிலே வாழும் மக்களைப் பற்றியும் முன்கூட்டியே அறிந்து கொள்வது அவசியமாகும். நிலத்தைப் பற்றித் தெரிந்து கொண்டபின், அங்குள்ள மக்களின் இனத்தைக் குறித்து அறிந்து கொள்ள வேண்டும். திபேத், மங்கோலியா, சீனா, ஜப்பான், பர்மா ஆகிய நாடுகளைச் சேர்ந்த மக்களின் முகத் தையும், கண்களையும் காணும்போது, அவர்களனைவரும் ஒரு குறிப்பிட்ட இனத்தைச் சேர்ந்தவர்களென்று நமக்குத் தெரிந்து விடும். ஆனால் அவர்களைப் போன்ற கண்கள் நேப்பாளியருக்கும் உள்ளன. சிறிய மூக்கு, கன்னத்தின் மேலுயர்ந்த எலும்பு, சற்றுப் பாதி மூடிய கண்கள், கொஞ்சம் மேலுக்குயர்ந்த புருவங்கள்- இவை மங்கோலிய இனத்தின் சின்னமாகும். இதேபோல் மனித இன இயல் மூலமாக நீக்ரோக்கள், திராவிடர்கள், இந்தோ ஐரோப்பியர்கள், மற்றக் கலப்பு இனத்தவர்கள் ஆகியோரைப் பற்றி எத்தனையோ விஷயங்கள் நமக்குத் தெரிந்துவிடும். கண்கள், எலும்புகள், மூக்கு, மண்டையோட்டின் உருவமைப்பு- இவற்றைத் தெரிந்து கொண்டால், ஒரு நாட்டு மக்களின் வரலாற்றினையும் சுலபமாகப் புரிந்து கொள்ளலாம். மனிதன் அசையும் பிராணி என்பதையும், அவன் எப்பொழுதும் திரிந்து கொண்டே இருந்தான் என்பதையும் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். மனிதர்கள் ஒருவருக்குள் ஒருவர் எவ்வளவோ இரண்டறக் கலந்து விட்டனர். இன்று மத்திய ஆசியாவிலும், அல்தாயின் மேற்குப் பகுதியிலும் மங்கோலிய இன மக்கள் வாழ்கின்றனர்: ஆனால் இரண்டாயிரத்து நூறு வருடங்களுக்கு முன்பு அங்கு அவர்கள் இருந்ததே இல்லை. இந்தியாவிலும், ஈரானிலும் 'ஆரியர்கள்' என்று

சொல்லப்பட்டவர்களும், வோல்காவின் மேற்குத் திசையில் 'சகர்கள்' என்று கூறப்பட்டவர்களும் அன்று அங்கே வாழ்ந்து வந்தனர். இன்று இதே போல் 'லடாக்' மக்கள் திபேத்திய மொழியைப் பேசுகின்றனர்: ஆனால் கி.பி. ஏழாம் நூற்றாண்டுக்கு முன்பு அங்கே 'கஷ-தரத்' என்றழைக்கப்பட்ட மங்கோலியரல்லாத இனத்தவர் இருந்து வந்தனர். மனித இனத்தைப் பற்றிய சுமாரான அறிவு, நாம் செல்லப்போகும் நாட்டின் பிரயாணத்தைச் சுலபமாக்கிவிடும்.

நாம் பயணம் செய்யும் நாட்டின் மொழியைக் கற்றுக்கொண்ட பிறகு தான், அந்நாட்டிற்கு ஊர்சுற்றி கிளம்ப வேண்டுமென்பதில்லை. தேவை ஏற்பட்டால் அல்லது ஊர்சுற்றி அதிக நாட்கள் அங்குத் தங்குவதாயிருந்தால், அவன் தானாகவே அந்நாட்டு மொழியைக் கற்றுக் கொண்டுவிடுவான். ஒரு மொழி எங்கே பேசப்படுகிறதோ, அங்கே சென்று அம்மொழியைக் கற்றுக் கொள்வது பத்து மடங்கு சுலபமானது. வரி வடிவமுள்ள (எழுத்துக்கள்) மொழிகளை எழுதுவதும் படிப்பதும் எளிதாகும். ஆனால் சீன, ஜப்பானிய மொழிகள் வேறு ரகத்தைச் சேர்ந்தவை. இம்மொழிகளின் எழுத்துக்களை மிகச்சில ஊர்சுற்றிகளாலேயே கற்றுக் கொள்ள இயலும். ஆனால் சீன, ஜப்பானிய மொழிகளைப் பேசுவது கஷ்டமானதல்ல: சீன மொழி ஜப்பானிய மொழியை விட இன்னும் சுலபம். மொழியை அதே வேலையாகக் கற்றுக் கொள்ளாவிட்டாலும் செல்லப்போகும் நாட்டின் மொழியைக் கொஞ்சமாவது தெரிந்து கொள்வது அவசியமாகும். மிகவும் அதிகமாகப் புழக்கத்திலிருக்கும் இருநூறு சொற்களைக் கற்றுக் கொண்டுவிட்டால் பயணத்தில் மிகவும் உதவிகரமாக இருக்கும். சில நாட்டு மொழிகளின் சொற்களை நாம் புத்தகங்களின் வாயிலாகத் தெரிந்து கொள்ளலாம். இந்தியில் இது விஷயமாக இன்னும் கவனம் செலுத்தப்படவே இல்லை. இந்தியப் புராதன காலத்தைப்போல் மீண்டும் முதல் ரக ஊர்சுற்றிகளைப் படைக்க விரும்பினால், இந்தியில் ஒவ்வொரு நாட்டைக் குறித்தும் நூறு-நூற்றைம்பது பக்கங்களில் அறிமுக நூல்கள் வெளியிடப்பட வேண்டும். அவற்றில் தேசப் படங்களுடன் கூட, இருநூறு- முந்நூறு சொற்களும் இடம்பெற வேண்டும்.

ஒரு புதிய நாட்டில் முதலில் நமது கவனத்தை ஈர்க்கக்கூடிய விஷயங்களைப் பற்றிக் கூறினோம். ஒரு நாட்டைப் பற்றித் தெரிந்து கொள்வதற்குக் கண்களால் பார்க்கும் விஷயங்களே போதுமானவை யல்ல. ஒவ்வொரு நாடும், சமுதாயமும் நூற்றுக்கணக்கான, ஆயிரக் கணக்கான ஆண்டுகள் வளர்ச்சியின் விளைவுகளாகும். ஆகவே குறிப்பிட்ட நாட்டின் வரலாற்றைப் பற்றியும் தெரிந்திருக்க வேண்டும்.

அந்த நாட்டின் புழக்கத்திலுள்ள மொழியோ அல்லது அந்நாட்டு மத மொழியோ ஊர்சுற்றிக்கு வந்திருந்தால், அதன் வரலாற்றையும், வரலாற்றுப் பொருட்களையும் சிறப்பாக ஆராயவேண்டும். சுமத்ரா, ஜாவா, பாலி, மலேயா, பர்மா, தாய்லாந்து, கம்பூச்சியா போன்ற நாடுகளுக்குச் செல்லக்கூடிய இந்திய ஊர் சுற்றிகள், இவ்விஷயத்தில் அதிகக் கவனம் செலுத்துவது அவசியமாகும். இந்நாடுகளின் மக்கள் இந்திய ஊர் சுற்றியிடமிருந்து இவ்விஷயத்தில் கொஞ்சம் அதிக மாகவே எதிர்பார்ப்பார்கள். இந்நாடுகளில் இந்தியப்பண்பாடு பரவியிருந்தால், அம்மக்கள் இந்தியாவைத் தமது பண்பாட்டின் பிறப்பிடமாகக் கருதுவதால், இந்தியரிடமிருந்து அவர்கள் அதிகமாக தகவல்களை எதிர்பார்க்கிறார்கள். ஐரோப்பியச் சுற்றுப்பயணியிடம் இந்தியாவைப் பற்றிய அறிவுக் குறையைக் கண்டாலும், அவர்கள் அவ்வளவாகப் பொருட்படுத்த மாட்டார்கள். ஆனால் இந்திய ஊர்சுற்றியிடம் இக்குறையைக் கண்டால், அவர்களுக்கு வியப்பும், வருத்தமும் கூட உண்டாகலாம். ஆகவே நமது ஊர் சுற்றிகள் முதலிலேயே எல்லா விஷயங்களும் தெரிந்துகொண்டே புறப்பட வேண்டும்.

வரலாற்றை உருவாக்குவதற்கு எழுத்துருவங்கள் கூடப் பயன் படுகின்றன. நாகரிகமடைந்த ஒவ்வொரு நாட்டிலும் முழுச் சரித்திர நூல்களும் அரைகுறைச் சரித்திர நூல்களும் எழுதப்பட்டு வருகின்றன. இப்படிப்பட்ட நூல்களின் முக்கியத்துவமும் குறைந்ததல்ல. என்றாலும் சரித்திர ஆதாரங்களாக விளங்குபவை அந்தந்தக் காலத்திய கல்வெட்டுகளும், நாணயங்களுமேயாகும். செங்கற்களும், சிலைகளும் கூட மதிப்புள்ளவைதான்: ஆனால் அவை காலத்தை முடிவு செய்ய அவ்வளவு உதவிகரமாக இருப்பதில்லை. ஆனால் கல்வெட்டுக்களும் நாணயங்களும் மாறிக்கொண்டே இருக்கும் எழுத்துருவங்களினால், அவற்றில் ஆண்டுகள் குறிக்கப்படாமலிருந்தாலும், காலத்தை நிர்ணயிப்பதற்கு மிகவும் உதவிகரமாக இருக்கின்றன. இந்தியாவில் புழக்கத்திலிருந்த எழுத்து வடிவமே, இந்தியாவைச் சுற்றியுள்ள நாடுகளிலும் இருந்தது. பழைய எழுத்து வடிவத்தை விரும்பக் கூடியவர்கள், அதைச் சற்றுக் கற்றிருக்க வேண்டும். "பிராம்மி" வரிவடிவத்திலிருந்து வந்த எழுத்து வடிவங்களைப் பற்றிய விவரங்கள் தன்னிடம் வைத்துக் கொள்வது மிகவும் நல்லது. இவையெல்லாம் தெரிந்து வைத்துக் கொள்வது அறிவு வளர்ச்சிக்கு மட்டுமே பயன் படாது: நமது ஊர்சுற்றி அங்குள்ள மக்களின் ஆதரவைப் பெறவும் இது உதவி செய்யும்.

கட்டடங்களும், கற்களும், செங்கற்களும் கூட வரலாற்றைப் புரிந்து கொள்வதில் உதவி புரியக்கூடியவையே! இந்தியாவிலிருந்து

கி.பி. முதல் நூற்றாண்டிலிருந்து பதினோராவது நூற்றாண்டு வரையிலும், இந்தியாவைச் சுற்றியுள்ள நாடுகளுக்கு மதப் பிரசாரகர் களும், வியாபாரிகளும், அரசப் பரம்பரையினரும் சென்றுகொண்டே இருந்தனர். அவர்கள் அந்த நாடுகளின் கட்டட வளர்ச்சியில் அதிகப் பங்கு கொண்டனர். ஒன்றையொன்றை மதிப்பிடுவதற்குக் கட்டடக் கலையின் ஆரம்ப அறிவு அவசியம் இருக்க வேண்டும். இந்நாடுகளின் புராதனக் கலைகளையும், கட்டடக்கலைகளையும் ஆராய்ச்சி செய்தவர்களுக்கு நம் நாட்டின் புராதனக் கலைகளும், கட்டடக் கலையும் துல்லியமாகத் தெரியாதென்பதை நமது ஊர்சுற்றி கவனத்தில் கொள்ள வேண்டும்.

இந்திய ஊர்சுற்றி பௌத்தர்களின் நாட்டிற்குப் புறப்படுவதற்கு முன், இந்தியாவைப் பற்றியும், இந்தியாவைச் சுற்றியுள்ள நாடுகளைப் பற்றியும், பௌத்த இலக்கியம், வரலாறுகளைப் பற்றியும், பௌத்த மதத் தத்துவங்களைப் பற்றியும் தெரிந்து கொள்ள வேண்டும். நமது ஊர்சுற்றிச் சகோதரர்கள் எத்தனையோ பேர் பௌத்தர்களின் நாடுகளுக்குச் சென்று, புத்தரிடம் தமக்குள்ள உண்மையான பக்தியை வெளிப்படுத்தியவாறே, கடவுள், பரமாத்மா யக்ஞம்- கேள்வி என்பனவற்றையெல்லாம் சொல்மாரி பொழிந்து விடுகிறார்கள். இது போன்ற விவாதத்திற்குரிய விஷயங்களைக் குறித்து, எதிர்மறையான கருத்துக்களைக் கொண்டு இந்தியாவில் எத்தனையோ பௌத்த அறிஞர்கள் நூல்கள் எழுதியிருப்பதும், அவற்றின் மொழிபெயர்ப்புக் களை அந்நாடுகளைச் சேர்ந்த பௌத்தர்கள் விரிவாகப் படிப்பதும், பாவம், இவர்களுக்குத் தெரியாது. நமது சாஸ்திர நூல்களைக் கொஞ்சமாவது படித்துள்ள திபேத்தியக் கல்விமான், இந்திய பௌத்த அறிஞரான தர்மகீர்த்தியின் கீழ்க்கண்ட கூற்றை நிச்சயம் அறிந் திருப்பான்.

> "1. வேதங்களைக் கடவுளால் படைக்கப்பட்டவையாகக் கருதுதல், 2. ஒருவரை (கடவுளை) எல்லாமும் படைத்தவராகக் கூறுதல், 3. கங்கா நதியைப் போன்ற நதிகளில் குளித்து, மதத்தை அனுசரிப்ப தாக நினைத்தல், 4. தாழ்ந்த- உயர்ந்த ஜாதி வேற்றுமைகளைப் பாராட்டுதல், 5. பாவத்தைத் தொலைப்பதற்கு விரதம் போன்றவை இருத்தல்- இவை ஐந்தும் அறிவை இழந்த ஜடங்களின் சின்னங் களாகும்."
>
> - ('பிரமாண வார்த்திக்' என்ற நூல்)

அந்த நாடுகளிலுள்ள விஷயம் தெரிந்தவர் ஒருவரின் முன்னால் இந்திய ஊர் சுற்றி, புத்தரைப் புகழ்பவனைப் போல் மட்டுமல்லாமல்,

பௌத்தனைப் போலவே, மேற்சொன்ன ஐந்து முட்டாள் தனங்களில் ஒன்றை ஆதரித்துப் பேசினாலும், அவர் இவனுடைய அறியாமையைக் கண்டு புன்னகை பூப்பார். நம்மவர்களில் பலரும் பௌத்தர்கள் பொய்யான கருத்துக்களைக் கொண்டிருக்கிறார்களென்றும், தம்முடைய கருத்துக்களே சரியானவை என்றும் தவறாக எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் புத்தரின் உபதேசங்கள் என்னவென்பது பௌத்தர்களுக்குத் தெரியும். அவற்றைப்பற்றித் தெரிந்து கொள்வதற்கான வழிமுறைகள் எல்லாம் அவர்களிடம் உள்ளன. பௌத்த மதத்தை அவர்கள் உயிருள்ளதாகவும் வைத்திருக்கிறார்கள். இவ்வுண்மைகளை நம்மவர்கள் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். பௌத்தம் தோன்றிய நம் நாட்டில் பத்து- பதினைந்து பௌத்த மத நூல்கள் கூட எஞ்சியிருக்காத நிலையில் திபேத்திலும் சீனாவிலும் நம் நாட்டிலிருந்து மறைந்துவிட்ட எட்டாயிரத்திலிருந்து பத்தாயிரம் வரையிலான பௌத்த மத நூல்கள் மொழிபெயர்ப்புகள் உருவத்தில் பத்திரமாக இருக்கின்றன. ஆகவே இந்திய ஊர்சுற்றி தனது மண்டைக் கர்வத்தையும், மேதா விலாசத்தையும் காட்ட முயற்சிக்காமல், பௌத்த மதத்தைப் பற்றிச் சற்று விரிவாகத் தெரிந்து கொண்டால், நகைப்புக்கிடமான பல தவறுகள் செய்வதிலிருந்து தப்பித்துக் கொள்ளலாம். பின்னர் அவன் பௌத்த மதத்தைக் கண்டனம் செய்தாலும் பரவாயில்லை.

நாம் செல்ல நினைக்கும் நாடுகளுக்கான முன் தயாரிப்பும் வெவ்வேறு விதமாக இருக்கும். ஒவ்வொரு நாட்டையும் பார்த்து இந்தியாவுக்குத் திரும்பி வந்த பிறகு, மற்றொரு நாட்டுக்குப் போகத் தயாரிப்பு செய்து கொள்ள வேண்டுமென்பதில்லை. நம் நாட்டு ஊர் சுற்றி இருபது- இருபத்தோரு வயதுவரை கல்விகற்று, கல்லூரிப் பாடப் புத்தகங்கள் தவிர, மற்றப் பயண நூல்களையெல்லாம் படித்தறிந்த பிறகு, ஆறு ஆண்டுகளுக்குள் இலங்கை, பர்மா, தாய்லாந்து, மலேயா, சுமத்ரா, பாலி, ஜாவா, கம்பூச்சியா, டாங்கின் வளைகுடா, சீனா, ஜப்பான், கொரியா, மங்கோலியா, துருக்கி ஆகிய நாடுகளைச் சுற்றிவிட்டு இந்தியாவுக்குத் திரும்பலாம். இந்த நீண்ட சுற்றுப் பயணத்தை விவரித்துப் பல நூல்கள் எழுதி நாட்டுக்குத் தரலாம்.

மேற்கூறிய நாடுகளுக்குப் பயன்படும் வழிமுறைகளே எல்லா நாடுகளுக்கும் பயன்படமாட்டா. சோவியத் யூனியனுக்கும், கிழக்கு ஐரோப்பிய நாடுகளுக்கும் செல்வதற்கு முன்னால், அந்நாடுகளைக் குறித்த விவரங்களைச் சேகரித்துக் கொள்ள வேண்டும். ஊர் சுற்றிக்கு சமஸ்கிருத மொழி தெரிந்திருந்தால், அவன் கிழக்கு ஐரோப்பிய "ஸ்லாவ்" மொழிகளின் முக்கியத்துவத்தை உணர்ந்துகொள்ள முடியும்:

அத்துடன் ஸ்வாவ் இன மக்களுடன் நட்புரிமையையும் வலுப்படுத்திக் கொள்ள முடியும். பல்வேறு இனங்களின் பழமையான வரலாற்றைத் தெரிந்து கொள்ள மொழி எவ்வளவோ உதவி செய்யும்.

முஸ்லிம் நாடுகளில் சுற்றித் திரியக் கூடிய வாலிபர்கள் இஸ்லாம் மதமும், சரித்திரமும் தெரிந்து கொண்டிருக்க வேண்டும். அத்துடன் நீண்ட காலம் இருக்க வேண்டிய பிரதேசத்தின் மொழியையும் கற்றிருக்க வேண்டும். மேற்காசியாவிலும், மத்திய ஆசியாவிலுமுள்ள முஸ்லிம் மக்களுடன் நெருங்கிப் பழக, துருக்கி, பாரசீகம், அரேபிய மொழிகள் தெரிந்திருந்தால் போதுமானது. சமஸ்கிருதம் அறிந்த வர்கள் மொழியியலும் கொஞ்சம் தெரிந்திருந்தால் பாரசீகத்தைக் கற்றுக் கொள்வது மிகச் சுலபமாகும்.

மொழியியலைக் குறித்தும், பழம்பொருள் இயலைக் குறித்தும் இவ்வளவு சொல்லியதன் பொருள், இவற்றிலெல்லாம் நன்கு தேர்ச்சி பெறாதவன் ஊர் சுற்றுவதற்கு அருகதையற்றவன் என்பதல்ல. இந்த "ஊர் சுற்றிப் புராணம்" எல்லா ரகமான வாசகர்களுக்காகவும் எழுதப் பட்டதாகையால், பல்வேறு விஷயங்களைப் பற்றியும் விவரிக்கப் படுகிறது. ஆனால் முதலிலிருந்து கடைசி வரை எல்லா விஷயங் களையும் தெரிந்து கொண்ட பிறகே, ஊர் சுற்றக் கிளம்ப வேண்டு மென்பது இதன் அர்த்தமல்ல.

# 12. மரண தத்துவம்

ஊர்சுற்றியின் அகராதியில் 'பயம்' என்ற சொல்லுக்கே இடமில்லை. அப்படியிருக்கும்போது மரணத்தைப் பற்றி இங்கே விவாதிப்பது பொருளில்லாததுபோல் தோன்றலாம். என்றாலும் மரணம் என்பது ஒரு புரியாத புதிராகையால் ஊர்சுற்றிக்கும் அதைக் குறித்து அதிக மாகத் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற ஆர்வம் உண்டாகக்கூடும். ஊர் சுற்றியும் ஒரு சாதாரண மனிதன்தானே! மனிதனுக்கே உரித்தான பலவீனங்கள் ஒரோர் சமயம் அவனுக்கும் ஏற்படலாம். சாவு தவிர்க்க முடியாதது என்பதையறிந்தும், மனிதன் சாவில்லாவிட்டால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று அடிக்கடி கற்பனையில் மிதக்கத் தொடங்கி விடுகிறான். எல்லா உயிர்களுமே மரிக்கக்கூடியவையே என்று சொல்லப்பட்டாலும், சாவே இல்லாத சில உயிர்களும் இருக்கத்தான் செய்கின்றன. ஆனால் முட்டையிலிருந்து பொரிந்த வற்றிலும் வேர்வையிலிருந்தும், அழுக்கிலிருந்தும் தோன்றியவற்றிலும், கருப்பையிலிருந்து பிறந்தவற்றிலும் இப்படிப்பட்ட உயிர்கள் இல்லை. மனிதனின் உடல் பலநூறு கோடிக்கணக்கான சின்னஞ்சிறு ஜீவ அணுக்களால் தயாரானது. ஆனால் ஒரேயொரு ஜீவ அணுவால் உண்டான பிராணிகளும் இருக்கின்றன. இப்படிப்பட்ட பிராணி களுக்குப் பிறப்பும், உணர்வும் உண்டு: மூப்பும், சாவும் மட்டும் கிடையாது. 'அமீபா' என்ற கடல் வாழ் பிராணி உள்ளது. எதிர் பாராத தாக்குதலுக்கு மட்டும் ஆளாகாமலிருந்தால் அது மூப்பும், சாவும் இல்லாமல் உயிர் வாழ்ந்துகொண்டே இருக்கும். அமீபாவின் உடல் ஒரு எல்லைவரை வளர்ந்துகொண்டே இருக்கும்: பிறகு அது இரண்டு உடல்களாகப் பிரிந்து போய்விடும், இரண்டு உடல் களுக்கு இரு 'அமீபா'க்களாக வளரத் தொடங்கும். அமீபாவைப் போல் மனிதனால் தனக்குத்தானே பிளவுண்டு வாழ முடியாது; ஏனெனில் அவன் ஒற்றை ஜீவ அணுவினால் உண்டான பிராணி அல்ல. இனிப்பான தண்ணீரில் 'பிலனாரியன்' என்றொரு எலும்பில்லாப் பிராணி இருக்கும். அது அரை அங்குலத்திலிருந்து ஓரங்குலம் வரை

நீளமாக இருக்கும். பிலனாரியனுக்குள் எலும்பு கிடையாது. மிருதுவான மாமிசத்தில் வளர்ச்சியும், வீழ்ச்சியும் ஏற்படுவது போல் எலும்பிலே ஏற்படாது. உணவு உட்கொள்வதை நிறுத்திவிட்டாலும், உடலுக்குள் உள்ள மாமிசத்தினாலும், கொழுப்பினாலும் பத்துப் பன்னிரண்டு நாட்கள் வரையிலும் அசையலாம். அந்தச் சமயத்தில் ஏற்கெனவே சேகரிக்கப்பட்டுள்ள நமது மாமிசமும், கொழுப்பும் உணவாக உபயோகப்படுகின்றன. பிலனாரியனுக்கு உணவு கிடைக்காத போது அது தன் உடலையே சேகரிக்கப்பட்ட உணவாகப் பயன் படுத்திக் கொள்கிறது. உணவு கிடைக்காதபோது அது தனது உடலுக்குள்ளிருந்தே செலவு செய்யத் தொடங்குகிறது. அதன் உடலில் எலும்பைப் போன்ற கடினமான பொருள் ஏதுமில்லை. அதன் உடலில் எலும்பு இருந்திருந்தால், அதைக் கரைத்து உணவாக்கிக் கொள்ள இயலாது. அத்துடன் அதற்காக வேறு உணவு தேவைப்படும். பிலனாரியன் உணவு கிடைக்காத காரணத்தால், தனது உடலையே உணவாக்கிக்கொண்டு, சிறியதாக மாறத் தொடங்குகிறது. சிறியதாகச் சிறியதாக அதனுடைய உணவுச் செலவும் குறைந்துகொண்டே வருகிறது. பல மாதங்கள் உணவில்லாமல் கிடந்த பிறகு, முட்டையி லிருந்து முதலில் வெளிவந்த போதிலிருந்த அளவுக்குக் குறையும் வரை, அது சாவிடம் தோற்றுப் போவதில்லை. அதோடு அந்தப் பிராணியில் இன்னொரு மாற்றமும் ஏற்படுகிறது. உருவத்தில் அது சிறியதாகச் சிறியதாக, அது இளமையிலிருந்து குழந்தைப் பருவத் துக்குத் திரும்பத் தொடங்குகிறது. உணவு சாப்பிடாமலிருப்பதன் மூலம் இழந்துவிட்ட இளமையைத் திரும்பப் பெற நம்மவர்கள் எவ்வளவோ முயற்சிக்கிறார்கள். இதற்காக அவர்கள் குழந்தைகளைப் போன்ற செயல்களில் ஈடுபடுகிறார்கள். பிலனாரியனைப்போல் உண்ணாமல், இளமையைத் திரும்பப் பெறும் ஆற்றல் மனிதனுக்குக் கிடையாது. ஆராய்ச்சியாளர்கள் உண்ணாவிரத வழிமுறையைக் கொண்டு, பிலனாரியனைக் குழந்தைப் பருவத்துக்கும், வயோதிகப் பருவத்துக்கும் இடையே ஊஞ்சலாடச் செய்திருக்கின்றனர். ஆயுள் குறைந்து இயற்கையான மரணங்களால் பத்தொன்பது தலைமுறைகள் மறைந்த நீண்ட காலம் வரை ஒரு பிலனாரியன் உண்ணாவிரதம் மூலம் குழந்தைப் பருவத்துக்கும், இளமைப் பருவத்துக்குமிடையே ஊஞ்சலாடிக் கொண்டே இருந்தது. வெளித் தாக்குதல்களிலிருந்து பாதுகாக்கப்பட்டால், பிலனாரியன் பத்தொன்பது தலைமுறை களென்ன, ஆயிரத்துத் தொள்ளாயிரம் தலைமுறைகள் வரைகூட முதுமையிலிருந்தும், சாவிலிருந்தும் தப்பி வாழக்கூடும். மனிதனின் உடல் பளுவான, நிலையான எலும்புகளாலும், நிலையற்ற மாமிசத் தாலும் தயாரானது. இதனால் அவனை முதுமையிலிருந்து காப்பாற்ற முடியவில்லை. ஆகவே மனிதன் சாவை வெல்ல முடியவில்லை.

சாவை வெல்வதென்ற கற்பனை தவறானதுதான்! ஆனால் நூற்று இருபத்தைந்து அல்லது நூற்றைம்பது வயது வரை வாழ்பவர்கள் நமது நாட்டிலும் ஆங்காங்கே காணப்படுகிறார்கள். பல வயோதிகர் களும் நூற்றைம்பது வயது வரை வாழ விரும்புவார்கள். ஒரு சிலர் நூற்றைம்பது ஆண்டுகள் வாழ்ந்தால் பரவாயில்லை: ஆனால் நாட்டிலுள்ள அனைவருமே இந்த வயது வரை வாழ ஆரம்பித்து விட்டால், நாட்டுக்குப் பேரபாயமே ஏற்பட்டுவிடும். நூற்றைம்பது வயதுவரை வாழ்வதன் பொருள், எட்டுத் தலைமுறைகள் வரையிலும் வாழ்ந்திருப்பதுதான்! இப்பொழுதுவரை நமது நாட்டின் சராசரி வயது முப்பதாண்டுகளாகும். அதாவது ஒன்றரை தலைமுறையாகும். நம் நாட்டில் ஐம்பது லட்சம் பேர் அதிகமாகிக்கொண்டே வருகிறார்கள். எட்டுத் தலைமுறையினர் ஒரே சமயத்தில் வாழ்ந்திருந் தால், இரண்டு தலைமுறைகளுக்குள்ளாகவே, நமது மைதானங்களும், மலைகளும் வீடுகளால் நிரம்பி வழிந்துவிடும். அப்படியும் பலருக்கும் இருக்க இடம் கிடையாது. இனி விவசாயம் செய்ய நிலம் எங்கே இருக்கப் போகிறது?

இத்தனை தலைமுறையினர் ஒன்று சேர்ந்துவிட்டால் அடுத்த தலைமுறை வாழவே முடியாததாகிவிடும். இருபது வயதுள்ள வாலிபர்களும், இளம் பெண்களும் தமது நாற்பது வயதுள்ள பெற்றோருடன் மிகச் சங்கடத்துடனே வாழ்கின்றனர். இவ்விரு தலைமுறைக்கிடையே சுபாவத்திலும், விருப்பு வெறுப்பிலும் எவ்வளவோ வித்தியாசம் தெரிகிற பெற்றோர் தம் இளம் தலைமுறை யினரின் அறியாமையையும் அவசரத் தன்மையையும் குறை கூறுகிறார்கள். இளைஞர்களோ தம் பெற்றோரைக் காலத்துக் கொவ்வாதவர்களாகக் கருதுகின்றனர். அறுபது வயதான பாட்டி-பாட்டனாரைப் பற்றிக் கேட்கவே வேண்டாம். முதல் தலைமுறைக்கும் மூன்றாவது தலைமுறைக்குமிடையே முரண்பாடு இன்னும் தெளி வாகத் தெரியும் என்றாலும் அதிகநாள் சேர்ந்திருக்கத் தேவையில்லை என்பதாலேயே அவ்விரு தலைமுறையினரும், தற்காலிகமாகச் சேர்ந்து வாழ்கின்றனர். மூன்றாவது தலைமுறையிலேயே இத்தனை மாற்றம் என்றால், எட்டாவது தலைமுறையின் நிலைமை எப்படி இருக்கும்? அதை எண்ணும் போது மனிதன் மிக நீண்ட காலம் வாழக்கூடா தென்பது விளங்கும். மிகச் சில பாட்டி- பாட்டன்மார்களே நான்காம் தலைமுறையினரைக் காண முடிகின்றனர். எனக்குத் தெரிந்த கிழவரொருவர் இருந்தார். அவர் சமஸ்கிருத மொழியில் பெரிய அறிஞர். பிராமணர்களின் ஆசார அனுஷ்டானங்களையும், தீண்டாமை யையும் கடைப்பிடிப்பவர். அவர் தனது மகனுக்கும் சமஸ்கிருதத் தையும், மற்ற தன் விஷயங்களையும் கற்றுத் தந்தார். அதோடு

மார்க்கெட்டில் நல்ல விலை போவதால், ஆங்கிலக் கல்வியும் கற்பித்தார் இப்பொழுது அவர் மகன் ஒரு கல்லூரி ஆசிரியராக இருக்கிறார்: பெரியவர் காலமாகிவிட்டார். ஆனால் இப்பொழுது பெரியவர் பரலோகத்தின் ஜன்னலிலிருந்து தனது மகன் வீட்டுச் சமையலறைக்குள் எட்டிப் பார்த்தாரானால், அங்கே நடந்து கொண்டிருக்கும் முட்டை ஆராதனையைக் கண்டு என்ன எண்ணுவார்? பெரியவரின் அடுத்த தலைமுறையிலேயே இம்மாற்றம் ஏற்பட்டதென்றால் இந்தச் சூழ்நிலையிலேயே பிறந்து வளர்ந்த மூன்றாம் தலைமுறையைச் சேர்ந்த பேரன் இன்னும் எவ்வளவு தூரம் போவான் என்பதைக் கற்பனைக் கண் கொண்டுதான் பார்க்க வேண்டும்.

அதிர்ஷ்டசாலியான என்னுடைய மற்றொரு வயோதிக நண்பரும் இருக்கிறார். அவர் மகன்களின் வழியில் நாலு தலைமுறைகளையும், மகள்களின் வழியில் ஐந்து தலைமுறைகளையும் பார்த்துவிட்டார். அவர் இப்போது எண்பது வயதையும் கடந்து விட்டார். நல்ல வேளையாக அவர் முப்பத்தைந்து ஆண்டுகளாகத் துறவறம் பூண்டு எப்போதாவது ஒரு சமயம் வீட்டுக்குப் போகிறார். வீட்டுக்குப் போகும் போதெல்லாம் அவருடைய துறவு உள்ளம் வேதனையடையாமல் இருப்பதில்லை. அவர் காந்தி யுகத்திற்கு முன்பிருந்தே ஒவ்வொரு விஷயத்திலும் எளிமையும், புனிதமும் விரும்புபவர், அநீதிக்கு அஞ்சுபவர். வாழ்க்கைக்குப் பயன்படுமென்ற நம்பிக்கை இல்லாவிட்டாலும், அவர் தன்னுடைய ஒரு மகனுக்குச் சமஸ்கிருதம் கற்பித்தார். ஆனால் அந்த மகனைப் பற்றிக் கேட்கவே வேண்டாம். தற்காலத்துக்குத் தகுந்தாற் போலவே, அவருடைய பேரப்பிள்ளைகள் நன்னடத்தையும், நல்லொழுக்கமும் கொண்டவர்கள்தான்! ஆனால் தாத்தாவின் கண்ணோட்டத்தில் அவர்கள் பரம அயோக்கியர்கள்! அவர்கள் வீட்டில் சோப்பு உபயோகிப்பது அதிகமாகிவிட்டது. வாசனை எண்ணெய் இல்லாமல் தலை வாருவதில்லை. பெண்களும் செருப்புகளில்லாமல் வெளியே கிளம்புவதில்லை. பேரப்பிள்ளைகளுக்குத் தேநீர் இல்லாமல் நாளே ஓடாது. அந்தத் தேநீரும் கோப்பைகளில் ஊற்றி 'ட்ரே'யில் கொண்டு வர வேண்டும். "இதெல்லாம் வீண் செலவுதானே! இவர்களுக்கு எப்படிப் புரிய வைப்பது?" என்று அங்கலாய்க்கிறார் முதியவர். "நீங்கள் சும்மா இருங்கள் தாத்தா! உங்கள் காலத்தைப் பற்றி எங்களுக்கும் தெரியும். அப்பொழுது ஒன்றிரண்டு சேலைகளை வைத்துக்கொண்டே பெண்கள் வாழ்க்கையை ஓட்டுவிடுவார்கள். இந்தக் காலத்துப் பெண்களின் பெட்டிகளைத் திறந்து பாருங்கள்! ஒவ்வொருவருக்கும் குறைந்தது எட்டு-பத்து நல்ல சேலைகள் நிச்சயமாக இருக்கும்" என்று பேரன் சொல்கிறான். "இது இன்னும் மோசமான வீண் செலவு!" என்று

பெரியவர் கோபித்துக்கொள்கிறார். "உங்கள் காலத்தில் வீண் செலவாக இருந்தது, எங்கள் காலத்தில் அத்தியாவசியத் தேவையாகி விட்டது. உங்கள் தலைமுறையினர் மாமிசத்தின் பெயரைக் கேட்டதுமே காதைப் பொத்திக் கொண்டிருந்தீர்கள்! எங்களால் வேக வைத்த முட்டை இல்லாமல், தேநீர்கூடக் குடிக்க முடியவில்லை!" என்று மூன்றாம் தலைமுறையினர் கூறுகின்றனர்.

பாவம், தாத்தாவின் கோபம் எல்லை மீறிக் கொண்டிருந்தது. அவரை ஆதரிக்க நானும் போய்ச் சேர்ந்தேன். அவர் மிகவும் வருந்திக் கொண்டிருந்தார். அவரை நான் தேற்றினேன்: "சென்ற நூற்றாண்டின் இறுதியில் நீங்கள் ஆரிய சமாஜி (இந்து சீர்திருத்த இயக்கம்)யாக மாறிய போது, கிராமத்தினர் உங்களை நாஸ்திகரென்று சொன்னார்கள். தீண்டாமையை நீங்கள் விட்டு விட்டிருந்தால், உங்கள் ஜாதியிலிருந்தே விலக்கி வைத்திருப்பார்கள், அந்தக் காலத்தில் நீங்கள் செய்ததே ஒரு பெரிய புரட்சியாகும்: நீங்கள் உங்கள் மனைவிக்கு பூணூல் அணியச் செய்தீர்கள். நீங்களிருவரும் ஒன்றாக அமர்ந்து வேள்வி வளர்த்தீர்கள். இவற்றைக்கூட அக்காலத்தியப் பழமையாளர்கள் விரும்பவில்லையே! பேரப்பிள்ளைகள், காலத்தைப் பொறுத்து எப்படியாவது செய்து கொள்ளட்டுமே! நீங்கள் ஏன் கவலைப்படுகிறீர்கள்?"

பெண்களையே எடுத்துக்கொள்ளுங்களேன்! எனக்கு முப்பதாண்டு காலமாக அறிமுகமான 'மீரட்' பகுதியைச் சேர்ந்த பெண்களைக் குறித்துக் கூறுகிறேன். இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் மீரட்டிலிருந்த மத்திய தர மக்களிடையே ஒரு பெரிய கோலாகலமே ஏற்பட்டது. கல்வி கற்றவர்கள் எத்தனையோ பேர், இந்து மதச் சீர்திருத்தவாதி யான ரிஷி தயானந்தரின் மூடநம்பிக்கைகளுக்கெதிரான புரட்சிக் கொடியைக் கையிலேந்திக் கொண்டனர்.

பழமை விரும்பிகள் பெண்களுக்கும், சூத்திரர்களுக்கும் கல்வி கற்பிக்கக் கூடாதென்று விதித்திருந்தனர். சுவாமி தயானந்தர் இதை மக்களை ஏமாற்றும் வேலையென்று சாடினார். அவரது ஆதர வாளர்கள் பெண்களுக்குக் கல்வி கற்பிக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டனர். தம் வீட்டிலிருந்தே இதை ஆரம்பிக்க வேண்டும். என்றாலும் அவர்களுடைய தீவிரம் இன்றைய கண்ணோட்டத்தில் மிகவும் சொற்பமானது. அவர்கள் பெண்களுக்கு ஆங்கிலம் கற்றுத் தருவதை எதிர்த்தனர். தனது பெண்கள் இந்துத் தோத்திரங்களைப் படிக்கவும், கடிதங்களைப் படிக்கவும் மட்டுமே இந்தியைக் கற்றால் போதுமென்றே அவர்கள் கருதினர். பெண்கள் வீட்டு வேலைகளில் தேர்ச்சி பெற்ற பிறகு, வேத சாஸ்திரங்களைப் பற்றி சற்றுத் தெரிந்துகொண்டிருந்தாலே போதுமென்று அவர்கள் எண்ணினர்.

முதல் உலகப் போர் காலத்திய பெண்கள், தமது இளம், படித்த கணவர்களிடம் கல்வி கற்பதை விரும்பினர். அவர்களின் மகள்களில் சிலர் கல்லூரியிலும் அடியெடுத்து வைத்தனர். இவ்விளம் பெண்கள் காந்திஜியின் இரண்டு இயக்கங்களில் பங்கெடுத்து, சிறைகளுக்கும் சென்றனர். இன்று மூன்றாவது தலைமுறையைச் சேர்ந்த பெண்கள் இருக்கிறார்கள். அவர்களில் பலரும் ஐரோப்பியப் பெண்களுடன் பல விஷயங்களிலும் போட்டி போடக்கூடியவர்கள். அவர்களுக்கும், இவர்களுக்கும் நிறத்திலும், புடவையிலும் மட்டுமே வித்தியாசம்! முதல் உலகப் போர் காலத்திய பெண்களின் மாமியார்கள் இன்று உயிரோடிருந்தால், தற்கொலைகள் தான் செய்து கொள்வார்கள். அங்கொருவர், இங்கொருவராக எஞ்சியிருக்கும் பழங்காலத்து மாமியார்கள் பாவம் மிகவும் அதிருப்தியுடன்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். தற்காலத் தலைமுறையைச் சேர்ந்த இளைஞர் களும், இளம்பெண்களும் தமது திருமண விஷயத்தில் பெரியவர் களின் தலையீட்டையே விரும்பமாட்டேனென்கிறார்கள். ஜாதி பேதங்களைப் பொருட்படுத்தாமல் 'மோசமாக' நடந்து கொள் கிறார்கள். இதையெல்லாம் பார்க்கும் போது, பழைய காலப் பாட்டி மார்களுக்கு, பாவம், எப்படி இருக்கும்? இப்பாட்டிமார்களின் மன வேதனையை நிரந்தரமாகப் போக்குவதற்காகவாவது, அவர்களுக் கென்றே சாவை வலுக்கட்டாயமாக அழைத்து வர வேண்டும்.

உண்மையில் முதல் ரக ஊர்சுற்றி புத்தி சுவாதீனமில்லாத கிழவர்களை ஆதரிப்பவனாக இருக்க மாட்டான். இந்தக் கிழக் கட்டைகள் இருக்கவேண்டிய இடம் மனித சமுதாயமல்ல; கண்காட்சி சாலைதான்! பழமை விரும்பிகளான கிழங்களின் ஆட்சி நடந்தால், "ஊர் சுற்றிப் புராண"த்தின் ஆசிரியரின் கதி என்னவாகுமென்பதைச் சொல்லத் தேவையில்லை; இந்நூலின் ஆசிரியன் வயோதிகர்களின் பகைவனல்ல; அவர்களின் நலம் நாடியே! அவர்களுடைய நலத்தைக் குறித்துச் சிந்தித்த பின்னரே, ஒரு பொருள் காலம் கடந்துவிட்ட பிறகு, மக்களின் பார்வையிலிருந்து மறைந்து விடுவதே நல்லதென்று கருதுகிறோம்.

வீணாகவே சாவைப் பயங்கரமானதாக நினைக்கிறோம். நமது வாழ்க்கையில் ஏதாவது விரும்பத்தகாத விஷயம் இருக்கிறதென்றால், அது சாவல்ல; சாவைப் பற்றிய பயம் தான்! சாவு ஏற்பட்டுவிட்ட பிறகு அதைப் பற்றிச் சிந்திக்க வேண்டிய அவசியமே இல்லை. சாதாரணமாகச் சாவுக்கு முன்னதாக மயக்க நிலை வந்துவிடுகிறது. அந்நிலையில் மனிதன் மரணத்தின் பயங்கர உருவத்தையே பார்ப்ப தில்லை. பிறகு விரும்பத்தகாத சாவைப் பற்றிய பயமெதற்கு? மரணம்

தன்னுடன் எவ்விதமான விரும்பத்தகாததையும் கொண்டு வருவதில்லை. மரணத்தைக் குறித்து நாம் சாதாரணமாக, கெடுதலாகவே குறிப்பிட்டுப் பேசுகிறோம். ஆனால், அது ஒன்றும் அப்படிக் கெட்ட விஷயமல்ல. பல சந்தர்ப்பங்களில் ஒரு சாதாரண மனிதனும் வாழ்வதற்குப் பதில் மரணத்தை விரும்புகிறான். சிலர் தமது மானத்தைக் காத்துக் கொள்வதற்காகச் சாவைத் தழுவிக் கொள்கிறார்கள்; வேறு சிலர் நாட்டிற்காகவும், சமுதாயத்துக்காகவும் சாவை அணைத்துக் கொள் கிறார்கள். "குதீராம் போஸ்" எல்லாருக்கும் முன்பாக நாட்டிற்காக உயிர்த் தியாகம் செய்யும் முன்னுதாரணத்தை நம் இளைஞர்களுக்கு முன் வைத்த போது, அவரது மனத்தில் சாவைப் பற்றிய பயம்தான் இருந்திருக்குமா? குதீராமுக்குப் பிறகு நூற்றுக்கணக்கான தேச பக்த இளைஞர்கள் அவரது பாதையிலேயே தொடர்ந்து சென்றனர். பகத்சிங்குக்குச் சாவு ஒரு பொருட்டா? குதீராமுக்கும், அவருடைய நெருங்கிய நண்பர்களுக்கும் "பகவத் கீதை" கூறியுள்ளதைப் போல், செத்த பிறகு மீண்டும் பிறப்போம் என்ற நம்பிக்கையாவது இருந் திருக்கும். ஆனால் பகத்சிங்குக்கு அந்த நம்பிக்கையும் கிடையாது. இரண்டாம் உலகப் போரின் போது, சோவியத் யூனியனைச் சேர்ந்த இலட்சக்கணக்கான இளைஞர்களும், இளம் பெண்களும் சாவைக் கண்டு எள்ளி நகையாடினர். இவற்றையெல்லாம் பார்க்கும் போது எல்லாரும் நினைப்பதைப் போல், சாவு அவ்வளவு பயங்கரமான விஷயமல்ல. ஊர்சுற்றி இளைஞர்கள், இப்படிப்பட்ட இலட்சக் கணக்கான இளைஞர்களில் மிகவும் துணிவானவர்கள். அப்படிப் பட்டவர்களுக்குச் சாவைப் பற்றி என்ன பயம்?

மரணத்துடன் கூடவே மனிதனுக்குப் புகழைப் பற்றிய எண்ணமும் வருகிறது. வாழும் காலத்தில் சம்பாதித்த புகழ் சாவுக்குப் பிறகும் நிலைத்து இருக்கும். அதைப் புகழுடல் என்கிறோம். அது இந்த அழியும் உடலுடன் தொடர்ந்து வருவதாகும். புகழ் பெற வேண்டு மென்ற எண்ணம் தவறானதல்ல; ஏனெனில் இதனால் மனிதன் சுயநலத்திலிருந்து மேலே உயர்கிறான். அவன் தன் நிகழ்கால லாபத்தை துறந்துவிடுகிறான். இதுவெல்லாம் அவன் புகழாசையால் செய் கிறான். புகழாசை மனிதனைப் பல நல்ல காரியங்களைச் செய்யத் தூண்டுகிறது. பல நூற்றாண்டுகளாக இருந்து வரும் அஜந்தா, எல்லோரா, பாஜா, கார்வே குகைக் கட்டடங்கள் இன்று எவரும் வாழப் பயன்படவில்லையென்றாலும், முதலில் சில நூற்றாண்டுகள் வரை அவற்றில் மனிதர்கள் வாழ்ந்து வந்தனர். பல தலைமுறையினர் அவைகளைப் பயன்படுத்தியதற்குக் காரணம், அக்குகைக் கட்டடங் களை அமைத்தவர்களின் புகழாசையேதான்! நுண்கலைகள், கட்டடக் கலை, பண்பாடு ஆகியவைகளின் அடிப்படையில் பார்த்தால், புகழ்

பெற வேண்டுமென்ற எண்ணத்தின் முக்கியத்துவம் மேலும் அதிக மாகப் புலப்படுகிறது. என்றாலும் படைத்தவர்களின் பெயர்களையும் நாம் அறிய முடியாத நிலையில், நிலையான புகழ் என்பதும் வெறும் பிரமையே என்று தெரிகிறது. இந்தியாவிலுள்ள எத்தனையோ ஸ்தூபிகள், குகைக் கட்டடங்கள் நிர்மாணித்தவர்களின் பெயர் தெரியாமலேயே இருக்கின்றன. எல்லாவற்றின் மேலும் அசோகத் தூபிகளிலுள்ளதைப் போல் கல்வெட்டுகள் இல்லை. பலவற்றுக்கு நம் கற்பனையாலேயே பெயர்களையும் சூட்டி விடுகிறோம். இப்படிப் பட்ட காரியங்களால் அவர்களின் பெயர்கள் நிலை பெற்று விடுமென்ற பிரமையைச் சாதாரண மக்களின் மனத்திலிருந்து துடைத்தெறிய நாம் விரும்புவதில்லை. தாம் பெற்ற பிள்ளைகளால் அமரர்களாகி விடலாமென்று மக்கள் நினைக்கிறார்கள். ஆனால் எத்தனையோ பேருக்குத் தம் கொள்ளுப் பாட்டனாரின் பெயர்கூடத் தெரியாது.

கல்லாலும், உலோகத்தாலும் புகழ் பெற வேண்டுமென்ற விருப்பம் எல்லா நாடுகளிலும் மிகப் பழங்காலத்திலிருந்து இருந்து வருகிறது. நமது நாட்டில் சில கோடீஸ்வர சேட்டுகள், அஜந்தா, எல்லோரா, புவனேஸ்வர், கோணார்க் போன்ற இடங்களிலுள்ள கோயில்களின் அழியாப் புகழைப் பார்த்துத் தம் பெயரையும் நிலைபெறச் செய்துவிட வேண்டுமென்ற விருப்பத்துடன் செங்கற் களாலும், சிமெண்டாலும் செயற்கையான ஆடம்பரக் கோயில் களைக் கட்டுவிக்கிறார்கள். எத்தனையோ எழுத்தாளர்கள் தமது புத்தகங்கள் அச்சாகியதுமே தம்மை அஸ்வகோஷ், காளிதாசராகக் கருதிக் கொண்டு விடுகிறார்கள். இன்று புத்தகங்களை அச்சிடுகிற காகிதம் நூறு வருடங்கள் கூட நிலைத்திருக்காது. அச்சு இயந்திரத்தின் மூலம் புத்தகங்களை அச்சிடுவது மிகச் சுலபமாகவிட்டதனால் ஒவ்வொரு ஆண்டும் ஆயிரக்கணக்கான புதிய புத்தகங்கள் வெளி வருகின்றன. கல்வி வளர வளர அவற்றின் எண்ணிக்கை, ஒரு நூறு வருடங்களில் இலட்சக்கணக்காகிவிடும். ஓராயிரம் வருடங்களுக்குப் பிறகு இப்புத்தகங்களுக்குத் தேவையான வீடுகளையும் கட்டமுடியாது. ஒவ்வொரு தலைமுறையும் தனது நிலையான புகழை அடுத்த தலைமுறையின் மேல் சுமத்தப் பார்ப்பது அறிவுள்ள செயலல்ல! நாம் நமது முந்தைய பத்து தலைமுறையினரின் பெயர்களை ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டும் என்று நமது முன்னோர் எதிர்பார்ப்பது போல்தான் இதுவும்!

தற்பொழுது இருபதாம் நூற்றாண்டின் முக்கால் பகுதி முடிந்து விட்டது. இந்த எழுபத்து ஐந்து ஆண்டுகளிலும் பல்வேறு துறை களிலும் மகத்தான சாதனைகள் புரிந்தவர்களின் பெயர்களை கி.பி. 1949-ல் மக்கள் நினைவில் வைத்திருப்பார்களென்று நீங்கள்

எதிர்பார்க்கிறீர்களா? காந்திஜி, ரவீந்திரநாத் தாகூர், கணிதமேதை ராமானுஜம் போன்ற சிலரின் பெயர்களையே மக்கள் ஞாபகத்தில் வைத்திருப்பார்கள். மற்றவர்களின் பெயர்கள் கால வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டுவிடும். வரலாற்றின் தீர்ப்பு கண்களின் முன்னால் சொல்லப்படுவதல்ல. யாரும் எவரையும் சிபாரிசு செய்ய இயலாத காலத்தில் அத்தீர்ப்பு வழங்கப்பட்டுவிடும். ஒரோர் சமயம் வரலாற்றின் தீர்ப்பு மிகப் பயங்கரமாகவும் இருக்கும். சமஸ்கிருதத்தைச் சேர்ந்த மாபெரும் கவிஞர்களிலும், சிந்தனையாளர்களிலும் "குணாட்டியர்" மிகவும் சிறந்தவர். அப்படிப்பட்டவர் சமஸ்கிருதத்தில் இயற்றிய "ப்ருஹத் கதா" ஏன் மறைந்து போய்விட்டது? அதனுடைய மொழி பெயர்ப்புக்களைப் பார்க்கும் போது, "ப்ருஹத்கதாவின் சிறப்பு தெரியவில்லையா? பலருடைய புகழ் வர்க்க பாரபட்சத்தால் அழிந்து விட்டது. நமது பழங்கவிஞர்களிலும், எழுத்தாளர்களிலும் எல்லோரும் நில மன்னர்களின் புகழ் பாடிக் கொண்டிருந்திருப் பார்கள்? ஆயிரத்தில் பத்துப் பேராவது அவர்களுடைய குறைகளை எடுத்துக்கூறி, மக்கள் நலனைப் பாடியிருப்பார்கள். ஆனால் நிலவுடை மையின் ஆதரவாளர்கள், அப்படிப்பட்ட கவிஞர்களின் நூல்களை நூல் நிலையங்களுக்குள் நுழையவிடவில்லை. நிலவுடைமையை ஆதரிக்கும் அறிஞர்களும் அந்நூல்களுக்கு இடமளிக்கவில்லை. இன்று நாம் யுக சந்தியில் வாழ்ந்து வருகிறோம். சென்ற நூற்றாண்டிலும் இந்த நூற்றாண்டின் துவக்கத்திலும் ருஷ்யாவில் மிகப்பெரும் வல்லவர் களென்று கருதப்பட்டவர்களெல்லாம் நம் கண் முன்னாலேயே இறந்துவிட்டனர். அதைப் போலவே இப்பொழுது சீனாவிலும் புதிய வரலாறு படைக்கப்பட்டு வருகிறது. இப்புதிய வரலாற்றில் "மகாகனம்" பொருந்திய சியாங்கே ஷேக்கின் கதி என்னவாகுமென்பதைக் கூறத் தேவையில்லை. இந்தியாவிலும் நிலையான புகழடைந்துவிட வேண்டுமென்று கருதக்கூடிய எத்தனையோ பேர் நிச்சயமாக மறக்கப்பட்டு விடுவார்கள் எத்தனையோ பேர் முகத்தில் எதிர்கால வரலாறு கரிபூசப் போகிறது. இதை விட அவர்கள் செத்துவிடுவதே நல்லது.

நிலையான புகழை ஆயிரக்கணக்கான வருடங்கள் அனுபவிக்க வேண்டுமென்ற பேராசை ஊர்சுற்றி வீரர்களுக்கு இருக்கக்கூடாது. நல்ல பெயருக்குப் பதில் அவர்கள் கெட்ட பெயரெடுக்க வேண்டு மென்பது இதன் பொருளல்ல. அவர்கள் மக்கள் நலத்துக்கான காரியங்களைச் செய்ய வேண்டும். சமுதாயத்தையும், உலகத்தையும் முன்னுக்குக் கொண்டு செல்ல வேண்டும். இம்முயற்சியில் அவர்கள் கொஞ்சமாவது வெற்றி பெற்றால், பெருமகிழ்ச்சியடைவார்கள். குளத்தில் ஒரு கல்லை வீசியெறிந்தால், முதலில் ஒரு வட்டமான அலை

எழுந்து மறைந்துவிடும். ஆனால், அது மறைவதற்கு முன்னால் வேறொரு புதிய அலையை எழுப்பிவிட்டே மறையும். அதேபோல் ஒரு ஊர்சுற்றி மக்கள் நலனுக்காக ஒரு அலையை எழுப்பிவிட்டு மறைந்து போகிறான். அதைத் தொடர்ந்து வேறொரு அலை எழுந்தால், அதை அவனுடைய வெற்றி என்றே எண்ண வேண்டும். முதலில் எழும் சில அலைகள் வலுவுள்ளவையாக இருக்கும். வேறு சில வலுவில்லாமல் இருக்கும். மனிதனின் செயல் திறமை, அவன் உண்டாக்கிய அலைகளின் வலிமையில் இருக்கிறது. படைக்க வேண்டுமென்ற எண்ணமே எல்லாவற்றையும் விட அழகானது. புகழுடலை விரும்பாமல், வாழும் காலத்திலேயே உலகத்திற்குத் தன்னாலானதை அளித்துவிட்டு, சூனியத்தில் மறைந்துவிடுவது பலருக்குக் கவர்ச்சியற்றதாகத் தோன்றலாம். ஆனால், தாம் வந்த காரியத்தை முடித்துவிட்டு, மணல்மேல் பதிந்த காலடிகளைப் போல், மறைந்து விடுவதிலேயே மகிழ்ச்சி கொள்ளும் சிந்தனையாளர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள். நம் கைக்கடிகாரத்திலுள்ள வினாடி முள் ஒரு நிமிடத்தில் ஒரு சுற்று சுற்றுகிறது. அறுபதாண்டு வாழ்க்கையில் அது எத்தனை தடவை சுற்றி வரும்? காலக் கடிகாரத்தின் முள் எப்போதுமே ஓயாது. வினாடிகள் சேர்ந்து நிமிடம், நிமிடங்கள் சேர்ந்து மணி, மணிகள் சேர்ந்து நாள், பிறகு வாரங்கள், மாதங்கள், வருடங்கள் நூற்றாண்டுகள்- இப்படிக் காலம் சென்றுகொண்டே இருக்கும். இப்போதைய வினாடியிலிருந்து பல கோடி ஆண்டுகள் கால வெள்ளம் தங்குதடையின்றி ஓடிக்கொண்டே இருக்கும். அமரர்களாகிவிட வேண்டுமென்ற பேராசை உள்ளவர்களால், சில ஆயிரம் வருடங்களாவது புகழுடலுடன் நிலைத்திருக்க முடியுமா? கடைசியில் என்றாவது ஒரு நாள், மணல் மேல் காலடிச் சின்னங்களாக மாறத்தான் வேண்டி வரும். இவ்வுலகில் உயிரின் சின்னமே இருக்காத போது, நிலையான புகழினால் என்ன ஆகப் போகிறது? ஊர்சுற்றி சாவைக் கண்டு பயப்படுவதில்லை. அவன் நற்காரியங்களையே செய்ய விரும்புகிறான்; ஆனால் ஏதோ ஒன்றைப் பெற வேண்டுமென்ற பேராசையால் அல்ல, அவன் இங்கே பிறந்திருக்கிறான். தன்னைச் சுற்றிலுமுள்ளவர்களைத் தன்னாலியன்ற வரை மகிழ்ச்சியுறச் செய்வது அவனுடைய கடமையாகும். அவன் கடமைக்காகவும், ஆத்ம திருப்திக் காகவுமே மாபெரும் தியாகங்கள் புரியவும் தயாராக இருக்கிறான். ஊர் சுற்றிச் சமுதாயத்தின் மாபெரும் குறிக்கோள் அதுவாகத்தான் இருக்க வேண்டும்.

## 13. எழுதுகோலும் தூரிகையும்

மனித மூளைக்குள் உறங்கிக்கிடக்கும் பகுத்தறிவுச் சக்திகள் அனைத்தும், சிந்தனையிலாழ்ந்த மனத்திலிருந்து விழித்தெழுகின்றன என்று பலரும் எண்ணுகிறார்கள். ஆனால், உண்மை அதுவல்ல. வெளியுலகத் தொடர்பு சற்றும் இல்லாவிட்டால் மனித உள்ளத்தில் கற்பனைகளே எழ முடியாது. பிலிம் நிரப்பிய புகைப்படக் கேமிரா 'ஷட்டரை'த் திறக்காமல், ஒன்றுமே செய்ய முடியாததைப்போல்தான் இதுவும்! குருடனாகவும், செவிடனாகவும் உள்ளவன் ஊமையாகவும் இருப்பான். அவன் குழந்தைப் பருவத்திலேயே ஐம்புலன்களையும் இழந்துவிட்டால், அவனுடைய மூளை வேலையே செய்வதில்லை. அவன் வாழ்க்கை பூராவும் ஒரு மரக்கட்டையாகவே இருந்து விடுகிறான். வெளியுலகத்தைப் பார்ப்பதாலும், அதைப்பற்றிச் சிந்திப்பதாலும் மனத்திற்கும் தூண்டுதல் கிடைக்கிறது. மனவலிமைக்கும் முக்கியத்துவம் இருக்கிறதென்பதை ஒப்புக்கொள்கிறேன்; ஆனால் மனவலிமை வெளியுலகத் தொடர்பின்றி வராது. நமது மாபெரும் சமஸ்கிருதக் கவிஞர்களில் "அஸ்வகோஷ்" ஒரு ஊர்சுற்றிதான்! அவர் அயோத்தியாவில் பிறந்து, பாடலிபுத்திரத்தில் (பாட்னாவில்) கல்வி கற்று, புருஷபுரத்தில் (பாகிஸ்தானிலுள்ள பெஷாவரில்) வாழ்ந்து வந்தார். கவி மன்னரான காளிதாசரும் கூட மிக அதிகமாக ஊர் சுற்றியிருக்கிறார். அவர் அன்னிய நாடுகளுக்குச் செல்லவில்லை யென்றாலும் உள்நாட்டிலே மிக அதிகமாகச் சுற்றியிருக்கிறார். அவர் யாரோ சொல்லக் கேட்டு, "தேவர்களின் ஆத்மா உறைந்திருக்கும் வடக்குத் திசையிலுள்ள மலை மன்னனான" இமயமலையை வர்ணிக்கவில்லை. இமயத்தின் எழில் கொஞ்சும் காட்சியை அவர் தன் கண்களால் பார்த்ததால், அதன் பெருமையை நன்கு உணர்ந்திருந்தார். இமயமலைச் சரிவிலுள்ள தேவதாரு மரங்களைச் சிவபெருமானின் பிள்ளைகளாக நினைத்து, உலகிலேயே மிக அழகான அம்மரங்களைச் சித்திரம் தீட்டியுள்ளார். வெள்ளிப் பனி மூடிய இமயமலைகளும், நிரந்தரமாகப் பச்சைப் பசேலென்று வான்முகட்டைத் தொட்டு நிற்கும்

தேவதாரு மரங்களும் அழகுக்கு இலக்கணமாக இருப்பவை. அவற்றை வீட்டுக்குள்ளிருந்தவாறே காளிதாசரால் அவ்வளவு சிறப்பாக வர்ணித்திருக்க முடியாது. காளிதாசர் தாம் இயற்றிய "ரகுவம்சம்" காவியத்தில் வர்ணித்த நாடுகளில் பலவற்றை அவரே பார்த்திருக்கிறார்: பார்க்காத சில நாடுகளைப் பற்றி நன்கு தெரிந்து வைத்திருக்கிறார். காளிதாசரின் இலக்கிய வெற்றிக்கு அவருடைய ஊர் சுற்றலும் ஒரு முக்கிய காரணமாகும். சமஸ்கிருத நாவலாசிரியரான பாண பட்டருடன் இன்றுவரை யாராலும் போட்டிபோட முடியவில்லை. அவருடைய நாவலான "காதம்பரி" மிகவும் புகழ் பெற்றது. பாண பட்டரும் ஒரு பெரிய ஊர்சுற்றியாவார். அவர் முப்பதுக்கதிகமான கலைஞர்களைத் தன்னுடன் அழைத்துக் கொண்டு, எத்தனையோ ஆண்டுகள் இந்தியாவை வலம் வந்து கொண்டிருந்தார். மற்றொரு சமஸ்கிருத எழுத்தாளரான "தண்டி" என்பவர் "தசகுமார சரித்திரம்" என்ற நூல் எழுதியுள்ளார். அதில் பல்வேறு நாடுகளில் செய்யப்பட்ட சுற்றுப்பயணங்களை விரிவாக வர்ணித்துள்ளார். அவர் காஞ்சிபுரத்தில் பல்லவர் அரசவைக் கவிஞராகத் திகழ்ந்தாலும், நாடு பூராவையும் சுற்றிப் பார்த்திருக்கிறார். இதேபோல் பல சமஸ்கிருதக் கவிஞர்களைப் பற்றிக் கூறலாம். நம் நாட்டுத் தத்துவ அறிஞர்கள் தமது மாணவப் பருவத்தில் இந்தியா முழுவதும் சுற்றி வந்தனர். அவர்களில் குமார ஜீவன், குணவர்மா போன்றோர் வெளிநாடுகளிலும் சுற்றி வந்தனர்.

பழைய வரலாறு மறந்தும் விட்டிருக்கலாம். ஆகவே இன்றைய யுகத்தில் மாபெரும் கவிஞரையே எடுத்துக் கொள்ளுங்களேன்! கவிச் சக்கரவர்த்தியான ரவீந்திரர் காவியப் படைப்பாளர், நாவல், நாடகாசிரியர் மட்டுமல்ல: அவர் பாரதத்தின் பண்பாட்டுச் சாதனைகளையும் பகுத்தறிவுச் சாதனைகளையும் நன்கு மதிப்பீடு செய்துள்ளார். மேற்கு நாடுகளின் கண்ணைப் பறிக்கும் கவர்ச்சி அவரை ஆட்கொண்டு விடவில்லை. நமது நாட்டு மூடக்கருத்துகள் அவரைச் செயலற்றவராக்கிவிடவில்லை. எதிர்கால இந்தியாவிற்காக எத்தனையோ வழிகாட்டு நெறிகளை அவர் நிலை நிறுத்தினார். "சாந்தி நிகேதன்" பல்கலைக் கழகத்தில் அவர் உண்டாக்கிய சூழ்நிலை அக்காலத்துக்குச் சற்று முன்னேற்றகரமானதுதான்! எனினும் நமது பண்பாட்டை விட்டு தூர விலகிவிடவில்லை. இப்பொழுது நாம் தலைநகரமான டெல்லியில் மேற்கத்திய நகரத்தில் ஊறித்திளைக்கும் வாலிபர்களையும் இளம் பெண்களையும் காணும் போது, ரவீந்திரரின் நிர்மாணப் பணியின் முக்கியத்துவத்தை நன்கு உணரலாம். அவர் இலக்கியத் துறையில் இந்தியா முழுவதற்கும் ஊக்கத்தையும், உற்சாகத்தையும் அளித்தார். அதை என்றுமே மறக்க இயலாது.

எனினும் அவருடைய மகத்தான பணி இத்துடன் நின்றுவிடவில்லை. அவர் ஓவியம், சிற்பம், இசை, நாட்டியம், வாத்தியம், நடிப்பு ஆகியவைகளையும் மறந்து விடாமல், அவற்றை உரிய இடத்தில் அமர்த்தினார். அவரிடம் வசதிகள் மிகக் குறைவாகவே இருந்தன. உயர்ந்த குறிக்கோள்களைக் கொண்டு மட்டுமே நிறுவனங்கள் முன்னேறிவிட முடியாது. எனினும் உயர்ந்த குறிக்கோள்கள் வெற்றி கரமான செயல்பாட்டிற்கு மிகவும் அவசியமாகும். ரவீந்திரர் உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் சேகரிக்க முடிந்த சொற்ப வசதி களைக் கொண்டே, பாரதத்தின் முழுமையான வளர்ச்சிக்குத் திட்டமிட முயற்சித்தார். சாந்தி நிகேதனில் அவர் இந்தியக் கல்வியும், இந்தியப் பண்பாடும், இந்தியத் தத்துவ ஞானமும் கூட மறக்கவில்லை. இந்தியாவைக் குறித்தும், இந்தியாவைச் சுற்றியுள்ள நாடுகளைக் குறித்தும், சாந்திநிகேதனிலுள்ள விரிவான, சிறந்த நூல்களைப் போல், நம் நாட்டில் வேறெங்கும் கிடைப்பது அரிது. ஆனால் இலக்கியம், இசை, கலைகளால் மட்டுமே பட்டினியுடன் கோவணாண்டியாக உள்ள பாரதத்துக்கு உணவும், உடையும் தர முடியாதென்பதை ரவீந்திரர் நன்றாக உணர்ந்திருந்தார். அவர் விவசாயம், தொழில் வளர்ச்சிக்கான கல்வியளிக்க அங்கேயே "ஸ்ரீநிகேதன்" என்ற நிறுவனத்தை அமைத்தார். எத்தனையோ இந்திய அறிவுலக மேதைகள் வெள்ளை ஆட்சியாளரின் தயவைப் பெற்று, உல்லாச வாழ்க்கையை அனுபவித்துக்கொண்டே, நாட்டு முன்னேற்றத்துக்கான காரியங்களை வீணானவையாக நினைத்த காலத்திலேயே, ரவீந்திரர் அப்படிப்பட்ட காரியங்களை ஆரம்பித்து வைத்தார். ஆனால் இன்று நமது நாட்டுத் தலைவர்கள் பலர் வெள்ளையரை ஆதரித்த இம்மேதைகளுக்கு நினைவுச் சின்னங்களை எழுப்பித் தமது நன்றியைத் தெரிவிக்க விரும்புவதுதான் வியப்பாக இருக்கிறது. நாட்டிற்காக உயிரையே தியாகம் செய்த சந்திரசேகர் ஆஸாதுக்காக அல்லாமல், ஆங்கிலேயே ஆதரவாளரான "ஸ்ப்ரூ"வுக்கு நினைவுச் சின்னம் எழுப்ப, அலகாபாத் நகரில் வேண்டுகோள் விடப்படுகிறது.

ரவீந்திரர் நமது நாட்டின் மாபெரும் கவிஞர் மட்டுமல்ல: இந்தியாவில் புது யுகத்தைத் துவக்குவதில் பெரும் பங்காற்றினார். அவர் மட்டும் ஓரளவுக்கு ஊர்சுற்றிப் பாதையில் பயணம் செய்யா மலிருந்திருந்தால், ரவீந்திரரின் திறமை இத்தனை துறைகளிலும் பளிச்சிட்டிருக்காது. அவரது எழுத்தோவியங்களின் சிறப்புக்கு ஊர் சுற்றுதல் எவ்வளவு உதவி புரிந்துள்ளதென்பதை மதிப்பிடுவது கடினம்தான்! எனினும் ரவீந்திரர் இப்பரந்த உலகை நெருக்கமான உணர்வோடு பார்த்தார். எதையும் பார்த்து அவர் வியப்பிலாழ்ந்து விடவில்லை; எதையும் பார்த்து அவர் குறைவாக எண்ணிவிடவில்லை.

நிச்சயமாக ரவீந்திரர் செய்த விரிவான சுற்றுப் பயணங்களே அவருக்குப் பெரிதும் உதவியிருக்கின்றன. ரவீந்திரரின் எழுத்துக்களுக்கு ஊர் சுற்றுதல் மெருகூட்டியுள்ளதென்பதை உலகு தழுவிய நிறுவனமாக்க ஊர் சுற்றுதலே அவரைத் தூண்டியது.

அழகான காவியங்களையும், மகா காவியங்களையும் எழுத ஊர் சுற்றுதலை மிக அதிகமாக ஊக்குவிக்கலாம். நமது ஊர் சுற்றிக் கவிஞர்கள் பெருங்காவியங்கள் இயற்றுவதற்கேற்றவாறு கதாபாத்திரங் களும், நிகழ்ச்சிகளும் எதிர்ப்படலாம். நான்காம் நூற்றாண்டின் இறுதியில் மகாகவி காளிதாசர், சந்திர குப்த விக்கிரமாதித்தனின் ஆட்சிக் காலத்தில் தனது அற்புதக் கவிதைத் திறமையைக் காட்டிக் கொண்டிருந்தார். அதே காலத்தில் காஷ்மீரத்தைச் சேர்ந்த பௌத்த பிட்சு அறிஞரொருவர் அழகிகளின் இருப்பிடமான துஷார் (சீன துருக்கிஸ்தானத்தின் வட பகுதி) பிரதேசத்தின் நகரமான கூசானில் அரசனாலும், மக்களாலும் கௌரவிக்கப்பட்டு உலவிக்கொண்டி ருந்தார். அந்தக் காலத்தில் காஷ்மீரம் இன்றைக்கு விட மிக அதிகமான அழகுடன் ஒளிர்ந்து கொண்டிருந்தது. இனி கூசானில் வாழ்ந்த பெண்கள் சாட்சாத் தேவ கன்னிகைகளே! அப்பெண்கள் அனைவரும் சந்தன வண்ணமும், நீல நிற விழிகளும், மஞ்சள் கூந்தலும், வெண்ணிலவை வெட்கமடையச் செய்யும் முகமும் கொண்டவர்கள். நமது காஷ்மீர் பிட்சு அழகு தேவதையான இளவரசிக்குத் தனது இதயத்தை அர்ப்பணித்து விட்டார். கூசானில் சுயேச்சையான சூழ்நிலை இருந்து வந்தது. அங்குள்ள மக்கள் பெருவாரியாகப் பௌத்த மதத்தைத் தழுவியவர்கள்: அதே சமயம் வாழ்க்கையில் ஆனந்தம் அனுபவிப்பதிலும் முன் நின்றவர்கள். பிட்சு- இளவரசியின் காதல் சின்னமாக ஒரு அழகிய ஆண் குழந்தை பிறந்தது. அவனே குமாரஜீவனாக உலகில் புகழ் பெற்றான். குமாரஜீவன் தன் தந்தை நாடான காஷ்மீரத்தில் சாஸ்திரங்களைக் கற்றிருந்தான். பின்னர் தன் தாய் நாடான கூசானில், தான் பெற்ற கல்வியால் மரியாதையையும், மதிப்பையும் அடைந்தான். அவனுடைய புகழ் சீனாவரை பரவியது. சீனச் சக்கரவர்த்தி குமாரஜீவனைத் தம்மிடம் ஒப்படைக்குமாறு கூசான் அரசனைக் கேட்டார். அவர் மறுக்கவே சீனப்படை கூசானியின் மீது படையெடுத்து, குமாரஜீவனைச் சீனாவுக்குக் கொண்டுசென்றது. கி.பி. 401-லிருந்து கி.பி. 412 வரை அவன் சீனாவில் பன்னிரண்டாண்டு வரை இருந்து, பல சமஸ்கிருத நூல்களைச் சீன மொழியில் மொழிபெயர்த்தான். சமஸ்கிருதத்தில் பல மூலநூல்கள் அழிந்துவிட்டாலும், அவற்றின் சீன மொழியாக்கங்கள் இன்றும் பத்திரமாக இருக்கின்றன. குமார ஜீவன் தனது அழகிய இலக்கிய மொழிக்காகச் சீன இலக்கிய கர்த்தாக்களில் முதலிடம் வகிக்கிறான்.

குமார ஜீவனின் வரலாற்றை இங்கு எழுதுவது நமது நோக்கமல்ல. ஒரு சிறந்த கவிஞன் குமார ஜீவனின் வாழ்க்கையைக் கருப்பொருளாக எடுத்துக்கொண்டு, எல்லாச் சுவைகளையும் சேர்த்து, ஒரு மாகாவியம் இயற்றலாம் என்பதைத் தெரிவிப்பதற்காகத்தான், இங்கே குமார ஜீவனைப் பற்றிக் குறிப்பிட்டோம். 431-ல் வாழ்ந்த மாபெரும் ஊர் சுற்றியான குணவர்மாவும் ஒரு சிறிய காவிய நாயகனாக முடியும், கம்போடியாவுக்குச் சென்று இந்தியப் பண்பாட்டையும், வைதீக மதத்தையும் பரப்பிய மாதுர் திவாகர் பட்டின் வாழ்க்கையும், ஒரு நல்ல கவிஞனை மாகாவியம் எழுதத் தூண்டக்கூடும். ஆகவே இலக்கியத் துறையில் ஊர்சுற்றியின் பணி சிறப்பாக இருக்குமென்பதில் மிகையில்லை.

நம் நாட்டு ஊர் சுற்றி, ஜாவாத் தீவில் இன்னும் எஞ்சியுள்ள நமது பல பண்பாட்டுச் சிறப்புகளால் ஊக்கம் பெற்று அங்குள்ள போரோதூர் சிற்பக்கலையின் மீது ஒரு அழகான காவியம் எழுதலாம். ஜாவாவிலுள்ள சிறந்த இந்துமதக் காவியங்களான "அர்ச்சுனன் திருமணம்" "கிருஷ்ணாயன்", "பாரத யுத்தம்" "ஸ்மர தகனம்" ஆகிய வற்றை இந்திய மொழிகளில் மொழி பெயர்க்கவும் செய்யலாம். கவிதை எழுத அழகான இயற்கைக் காட்சிகள் தூண்டுகோல்களாக இருப்பதானால், அற்புத நிகழ்ச்சிகள் கவிதைக்கு உயிரூட்டுவனவாக இருந்தால் செல்வங்கள் நாலாப் புறமும் பரவியுள்ள புகழ்பெற்ற கலைச்செல்வங்கள் கவிஞனின் உள்ளத்துக்கு உவகையூட்டுகின்றன என்றால், நமது இளம் ஊர்சுற்றியும் தனது பயண அனுபவக் காட்சிகளால் தூண்டப்பெற்று வால்மீகியைப் போல் அழகிய கவிதை மழை பொழிய முடியும்.

அழகிய மொழியில் எழுதுவதால், மற்ற இடங்களிலும் பயன் உண்டாகலாம். நமது நாட்டில் மட்டுமல்ல: வெளிநாடுகளிலும் கூடப் பழைய இலக்கியத்தில் உரைநடைக்கு இன்றுள்ளதைப் போன்ற முக்கியத்துவம் இருந்ததில்லை. உயர்தர ஊர்சுற்றி நல்ல எழுத்தாள னாகவும் இருப்பது அவசியம். எழுத்துத் திறமையை ஊர் சுற்றுதல் வெளிக் கொணராவிட்டால், பிறகு வேறெது வெளிக்கொணரும்? ஊர் சுற்றி பல்வேறு நாடுகளிலும் சுற்றித் திரிந்து, பலவிதக் காட்சி களைப் பார்க்கிறான். பல்வேறு நிற மக்களுடனும், பல தரப்பட்ட பழக்கவழக்கங்களுள்ளவர்களுடனும் பழகுகிறான். எழில்கொஞ்சும் காட்சிகளைக் கண்டு அவன் உள்ளத்தில் குதூகலமும் கவர்ச்சியும் மனநிறைவும் உண்டாகின்றன. அவற்றைக் குறித்து மற்றவர்களுக்குக் கூற அவன் விழைவது இயற்கையே! இதற்காக ஊர் சுற்றி சாதாரண மாக எழுதுகோலை நாடுகிறான்: அதுவும் தானாக ஓடத்தொடங்கு கிறது. அவன் கற்பனையின் துணைகொண்டு ஏதாவது எழுத

வேண்டிய தேவையில்லை. அவன் பார்க்கும் காட்சிகளும், நபர்களும், நிகழ்ச்சிகளும் அவனது உள்ளத்தில் அப்படியே சித்திரங்களாகப் பதிந்து விடுகின்றன. பின்னர் பேனா முனை அவற்றுக்கு எழுத்துருவம் தந்துவிடுகிறது. ஊர்சுற்றி தன் சுற்றுப்பயண அனுபவங்களை எப்படி எழுத வேண்டுமென்பதற்குக் குறிப்பிட்ட விதி முறைகள் ஒன்றுமில்லை. அவன் உண்மை நிலையை முன்னிறுத்தித் தன்னுடைய விருப்பம் போல் எழுத வேண்டியதுதான்! எழுத ஆரம்பிக்கும் போது ஊர்சுற்றி, தான் பார்த்த இடங்களைக் குறித்து, தன் நண்பன் ஒருவனுக்கு வர்ணித்துக் கடிதங்கள் எழுதலாம். எழுத்தாளனின் திறமையை வெளிப்படுத்த முதலில் கடிதங்கள் மிக உதவிகரமாக இருக்கும். வருங்கால எழுத்தாளர்களை அவர்களுடைய கடிதங்களிலேயே தெரிந்து கொண்டுவிடலாம். இரு நபர்களின் அறிமுகத்தைப் பின்னணியாகக் கொண்டு, கவர்ச்சியான, தேவையான விஷயங்களுடன் கடிதங்கள் எழுதப்படுகின்றன. எழுத்தாளனில் திறமை இருந்தால், அது அவனது பேனா முனையில் வெளிப்படும். ஆனால் பயணக் கட்டுரைகள் கடித உருவத்திலேயே தொடங்கவேண்டும் என்ற அவசியம் இல்லை. ஊர் சுற்றி துவக்கத்திலிருந்தே பயண வர்ணனைகள் எழுதிக்கொண்டிருக்கலாம். எழுதும் நடையைப் பற்றிக் கவலைப்படத் தேவையில்லை. நல்ல எழுத்தாளர்களும் தமது முந்தைய எழுத்தாளர்களைப் பின்பற்றாமல் இருப்பதில்லை. ஆனால், நாளாக ஆகத் தமது சொந்த நடையையும் ஏற்படுத்திக்கொண்டு விடுகிறார்கள்.

பயண வர்ணனையும் ஒரு சிறந்த இலக்கியமாக இருக்க முடியுமென்பதைப் பல எழுத்தாளர்களின் பயண நூல்களிலிருந்து அறியலாம். எப்பொழுதும் பல்வேறு இடங்களுக்கும் சுற்றித் திரிந்து கொண்டிருக்கும் ஊர் சுற்றிக்கு, அவன் செய்த பயணங்களே வாழ்க்கை முழுவதும் எழுதுவதற்குத் தேவையான விஷயங்களைத் தந்து உதவும். ஆனால் பயண நூல் ஆசிரியன் மற்ற விஷயங்கள் பற்றியும் சிறப்பாக எழுதலாம். அவன் செய்யும் பயணங்களின் போது, எத்தனையோ உண்மைக் கதைகளைக் கேள்விப்படுகிறான். அக்கதைகளை இயற்கையாக வர்ணித்துக் கொண்டிருந்தால், அவன் கதைகள் எழுதுவதிலும் வல்லவனாகிவிடலாம். பயண நூலில் அவன் தன் அனுபவங்களையே எழுதுவதால், மெல்ல நாவல் எழுதவும் முயற்சிக்கலாம். அவனுக்கு இதில் பழைய எழுத்தனுபவமும் உதவிகரமாக இருக்கலாம்.

சரித்திர நாவல்களை எழுதுவதற்கு வரலாற்று நிகழ்ச்சிகளும், கதாபாத்திரங்களும், பூகோளப் பின்னணியும் தெரிந்திருக்க வேண்டும். பூகோளம் ஊர் சுற்றியின் சொந்த விஷயமாகையால், அதில் அவன்

தவறே இழைக்க மாட்டான். இந்தியாவையும், இந்தியாவைச் சுற்றிலுமுள்ள நாடுகளையும் பின்னணியாகக் கொண்டு நாவல் எழுத, ஊர்சுற்றியைத் தவிர, வேறு யாருக்கும் தகுதி இருக்காது. குமார ஜீவர், குணவர்மா, திவாகர், சாந்திரட்சிதர், தீபங்கர், ஸ்ரீ ஞானர், சாக்கிய ஸ்ரீபத்திரர் போன்ற ஊர் சுற்றிகளின் வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டு, அக்காலத்திய இந்தியாவையும், இந்தியாவைச் சுற்றிலுமிருந்த நாடுகளையும் சிறப்பாகப் படம் பிடித்துக் காட்டலாம். ஆனால் இதற்காக ஊர்சுற்றி எழுத்தாளன் அந்தந்த நாடுகளில் சுற்றித்திரிந்து, விஷயங்களைச் சேகரிக்க வேண்டும். நம் நாட்டின் பழைய ஊர் சுற்றிகள் எங்கெங்கோ வெளிநாடுகளில் சுற்றித் திரிந்ததால், தற்கால ஊர் சுற்றியும் விஷயங்களைத் திரட்ட பல இடங்களிலும் சுற்றித் திரிந்தாக வேண்டும். ஒவ்வொரு நாகரிக இனமும் வரலாற்றைத் தெரிந்து கொண்டிருக்க வேண்டும். ஆனால் ராஜா- ராணிகளைப் பற்றி மட்டுமே தெரிவிக்கும் வரலாறு முழுமையானதல்ல: அப்படிப் பட்ட வரலாற்றினால் அக்காலத்திய சமுதாயத்தைக்குறித்து ஒன்றுமே தெரிந்துகொள்ள இயலாது. சரித்திர நாவல் அக்காலத்தின் வரலாற்றை உயிருள்ளதாக நம் முன் வைத்து விடுகிறது. தனது பொறுப்பை உணரும் எந்தச் சரித்திர நாவலாசிரியரும், தன்னுடைய, நாவலில் வரலாற்றுத் தவறையோ, பூகோளத் தவறையோ செய்ய மாட்டார். இந்தத் துறை நமது ஊர் சுற்றிக்கு எத்தனை வாய்ப்பளிக்கிற தென்பதை சொல்லத் தேவையில்லை.

ஊர்சுற்றி எழுதும்போது கட்டுப்பாட்டை மிகவும் கடைப் பிடிக்க வேண்டும். பல பயண நூல் எழுத்தாளர்கள் தமது வர்ணனை களைக் கவர்ச்சிகரமானதாக, மிகையாக எழுதுகிறார்கள்: நடக்க முடியாதவைகளையும் உண்மைகளைப் போல் எழுதுகிறார்கள். உயர் ரக ஊர்சுற்றிகள் இவ்வுலகில் அடியெடுத்து வைப்பதற்கு முன்பு, மக்களுடைய பூகோள அறிவு, மூடநம்பிக்கைகளை அடிப்படையாகக் கொண்டிருந்தது. ஏதோவொரு தேசத்தில் ஒரே காலுள்ள மக்கள் இருக்கிறார்களென்றும், அவர்கள் நம்பிக்கொண்டிருந்தனர். மற்றொரு நாட்டில் பெரிய பெரிய காதுகள் உள்ளவர்கள் இருந்தார்களென்றும், அவர்கள் ஒரு காதை விரித்துப் படுத்துக் கொண்டார்களென்றும், இரண்டாவது காதைப் போர்வையாகப் போர்த்திக் கொண்டார்க ளென்றும் சொல்லிக்கொண்டிருந்தனர். இவை போன்ற உண்மைக்குப் புறம்பான கதைகள் ஊர்சுற்றிகள் தோன்றுவதற்கு முன்பு மக்களிடையே வழங்கி வந்தன. ஊர்சுற்றிகள் சூரியனைப் போல் உதித்து, இந்த அஞ்ஞான இருளைச் சின்னாபின்னப்படுத்தி விட்டனர். இன்றைய ஊர்சுற்றிகள். தமது பொறுப்பை உணராமல், மூடநம்பிக்கைகளை வளர்ப்பார்களானால், தமது ஊர்சுற்றி

முன்னோர்களுக்கு எதிராகச் செல்பவர்களே யாவார்கள். காவாகூச்சி என்ற ஊர்சுற்றி தனது "திபேத்தில் மூன்றாண்டுகள்" என்ற நூலில் பல இடங்களிலும் மிகைப்பட எழுதியுள்ளார். அவர் அந்நூலை யாராவது பிரிட்டிஷ் அல்லது அமெரிக்க வெளியீட்டாளர்களுக்காக எழுதியிருந்தால், அதிக உண்மைக்கு மாறான விஷயங்கள் இன்னும் அதிகமாக இருந்திருக்கும். இன்று பத்திரிகைகளும், வெளியீட்டு நிறுவனங்களும் கோடீஸ்வரர்களின் கைக்குள் போய்ச் சேர்ந்து விட்டன. குறிப்பாகப் பிரிட்டனிலும், அமெரிக்காவிலும் இத்துறைகளில் கோடீஸ்வரக் குபேரர்களின் சாம்ராஜ்ஜியம்தான்! இந்தியாவிலும் இப்போது இதே நிலைதான்! இக்கோடீஸ்வர வெளியீட்டாளர்கள் மக்களுக்கு அறிவு ஒளி வழங்க விரும்புவதில்லை. மக்கள் மேலும் மேலும் அஞ்ஞான இருளிலேயே மூழ்கிக் கிடக்க வேண்டுமென்று அவர்கள் விரும்புகிறார்கள். இதற்காகவே அவர்கள் மக்களை முட்டாள்களாகவே வைத்திருக்க முயற்சி செய்கின்றனர். என்னுடைய ஒரு அனுபவம் நினைவுக்கு வருகிறது. லண்டன் நகரில் மிகப் பிரபலமான "டெய்லி மெயில்" பத்திரிகை நிருபர் என்னுடைய திபேத்தியப் பயணம் பற்றி எழுதும் போது இப்படியும் எழுதி விட்டார். "இவர் பயங்கரமான திபேத்திய காடுகளில் சுற்றிக் கொண்டிருந்தபோது, கொள்ளைக் கூட்டத்தினர் இவரைச்சுற்றி வளைத்து விட்டனர். இவர் அவர்களை வாளையெடுத்து எதிர் கொள்ள இருந்தபோது, ஒரு புலி திடீரென்று அங்கே தோன்றவே, கொள்ளைக்காரர்கள் ஓடிவிட்டனர்." பத்திரிகை அலுவலகத்திலிருந்து இவ்வறிக்கை எனக்கு அனுப்பப்பட்டதும், பொய்யான விஷயங்களை அடித்துவிட்டேன். திபேத்தில் அப்படிப்பட்ட காடுகள் இல்லையென்றும், அங்கே புலிகளும் இல்லையென்றும் அவர்களுக்குத் தெரிவித்தேன். ஆனால், மறுநாள் "டெய்லி மெயில்" பத்திரிகையை விரித்தபோது, நான் பொய்யென்று அடித்துவிட்ட வரிகள் அப்படியே காட்சி தந்தன. அப்பத்திரிகைக்காரர்கள் ஒரே கல்லில் இரண்டு பறவைகளை அடிக்க விரும்பினர். அவர்கள் ஒரு பக்கம் ஏமாற்றுக் காரனாகவும்,. பொய்யனாகவும் என்னைக் காட்ட விரும்பினர். மறுபக்கம் தமது பதினைந்து லட்சம் வாசகர்களில் பெரும்பாலோரை மூடர்களாக்கவும் ஆசைப்பட்டனர். மக்கள் எவ்வளவு முட்டாள்களாக இருந்தால், இந்த அட்டைகளுக்கு அவ்வளவு லாபமல்லவா! இப்படிப்பட்ட உண்மைக்குப் புறம்பான அற்ப விஷயங்களை எழுதுமாறு வெளியீட்டார்களே எழுத்தாளர்களைத் தூண்டுகிறார்கள் என்பது இதிலிருந்து தெரிகிறதல்லவா! அச்சமயத்திலேயே நம் நாட்டுச் சாமியாரொருவர் லண்டனில் இருந்தார். அவர் தன்னையும், தனது

குருவையும் இமய மலையோடும், மானஸரோவரோடும், எவரெஸ்ட் சிகரத்தோடும் தொடர்புபடுத்திப் பொய்யான விஷயங்களை எழுதித் தள்ளிக்கொண்டிருந்தார். ஊர் சுற்றிகள் தமது பொறுப்பை உணர வேண்டும். பொய்களை எழுதி மக்களின் மூடநம்பிக்கைகளை வளர்த்துக் கொண்டிருக்கக்கூடாது. வாசகர்களை இருட்டுக் கிணற்றில் தள்ளக்கூடாது.

ஊர்சுற்றிக்கும், எழுதுகோலுக்குமுள்ள தொடர்பையும், அவனால் பேனாமுனை எவ்வளவு வலுவுடையதாக இருக்க முடியு மென்பதையும் இதுவரை விவரித்தோம். எழுதுகோலைப் போலவே தூரிகையும், உளியும்கூட ஊர்சுற்றியினால் பரிமளிக்க முடியும். ஓர் ஊர்சுற்றி தூரிகையால் எப்படிப்பட்ட சாதனைகளை நிகழ்த்த முடியுமென்பதற்கு சோவியத் ஓவியர் நிக்கோலஸ் ரோய்ரிக் நல்ல எடுத்துக்காட்டாவார். இமயமலை நமது மலையென்று இந்தியர்கள் பெருமைப்படுவதில் மட்டும் குறைச்சல் இல்லை. ஆனால், அம்மலை யைத் தனது தூரிகையால் உயிரோட்டமுள்ள சித்திரங்களாகத் தீட்டிய நிக்கோலஸ் ரோய்ரிக்கைப்போல், இந்திய ஓவியர்கள் யாருமே நூறில் ஒரு பங்குகூட இமயமலையைச் சித்திரங்களாக வடிக்கவில்லை. ரோய்ரிக்கின் தூரிகை ருஷ்யாவில் இருந்து கொண்டு, இவ்வற்புதம் நிகழ்த்தவில்லை. இமயமலையில் பல வருடங்கள் சுற்றித்திரிந்து, ரோய்ரிக் இச்சித்திரங்களை வரைவதில் வெற்றியடைந்துள்ளார். ருஷ்ய நாட்டைச் சேர்ந்த மற்றொரு ஓவியர் சென்ற நூற்றாண்டில் தொடர்ந்து இருபத்தைந்து ஆண்டுகள் உழைத்து "மக்களிடையே ஏசுநாதர்" என்னும் ஓவியம் வரைந்தார். கண்ணைப் பறிக்கும் அற்புதமான ஓவியம் அது. சாதாரண அறிவுள்ளவன்கூட அந்த ஓவியத்தின் முன்னால் நின்றால், ஓர் அற்புதப் படைப்பின் முன் நிற்பதை உணர்வான். இந்த நிகரில்லாத ஓவியம் வரைவதற்கு அந்த ஓவியர் பல வருடங்கள் ஏசுநாதர் பிறந்த பாலஸ்தீனத்தில் சுற்றித்திரிந்தார். அங்குள்ள காட்சிகளையும், மனிதர்களையும் வரைபடங்களாகவும் வண்ணப் படங்களாகவும் எழுதிக் கொண்டார். கடைசியில் அவற்றை யெல்லாம் ஒன்றுசேர்த்து, மாபெரும் ஓவியமாக்கினார்... இதுவும் ஊர் சுற்றுதலுக்கும், தூரிகைக்கும் உள்ள தொடர்பை நன்கு வெளிப் படுத்துகிறது.

சிற்பக் கலையில் மட்டுமல்ல; கட்டடக் கலையின் அனைத்துத் துறைகளிலுமே ஊர் சுற்றுதலின் முக்கியத்துவத்தைக் கவனிக்கலாம். கலைஞனின் உளி ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டிலும், ஒரு தீவிலிருந்து மற்றொரு தீவிலும் தாவிக்கொண்டே இருந்தது. நமது நாட்டின் காந்தாரச் சிற்பக்கலை எப்படி உருவாயிற்று? ஊர்

சுற்றுதலும், உளியும் இரண்டறக் கலந்ததனால் தான் காந்தாரச் சிற்பக்கலை தோன்றிற்று. ஜாவாவில் போரோ புதூர், கம்பூச்சியாவில் அங்கோர்வாட், துங்கானில் புத்தர் குகைகள்- இவற்றையெல்லாம் செதுக்கிய உளிகள் அந்தந்த இடங்களில் தயாரானவையல்ல. தொலைப் பிரதேசங்களிலிருந்து சென்ற ஊர்சுற்றிகள், அவ்விடங்களில் சிற்பக் கலையை உயிர்பெறச் செய்துவிட்டனர். இன்றும் நமது ஊர்சுற்றி தனது உளியை எடுத்துக்கொண்டு உலகெல்லாம் தங்கு தடையின்றிச் சுற்றி வரலாம்.

எழுத்தாளனுக்கும், கலைஞனுக்கும் ஊர் சுற்றுதல் ஒரு வெற்றிப் பயணமாகும். அவர்களுக்குக் கலைப் பயணமும், இலக்கியப் பயணமும் அதுதான்! உண்மையில் ஊர் சுற்றுதலை ஒரு சாதாரண விஷயமாகக் கருதக்கூடாது. அது உண்மையைத் தேடுவதிலும், கலைகளைப் படைப்பதிலும், நட்புறவை வலுப்படுத்துவதிலும் மாபெரும் சாதனமாகும்.

## 14. பயன் கருதாப் பயணம்

குறிக்கோள் இல்லாதது என்றால் பயனில்லாதது என்று பொருள். பயனில்லாமல் முட்டாள்கூட ஒரு வேலை செய்ய மாட்டான். ஆகவே ஒரு புத்திசாலியான ஊர் சுற்றி குறிக்கோளில்லாமல் ஊர் சுற்றுதல் என்ற பயங்கரப் பாதையிலே சென்றால், அதைப் புரிந்து கொள்வது கடினம்தான்! வங்க மொழியில் "குறிக்கோளற்றது" என்றால் வீட்டிலிருந்து ஓடிவிடுவதாகும். ஒருமுறை வீட்டைவிட்டுச் சென்று, மீண்டும் திரும்பிவராத ஊர் சுற்றிகளுக்கு இது பொருந்தும். ஆனால் இந்த "ஊர் சுற்றிப் புராண"த்தில் ஊர் சுற்றிகளுக்காக எத்தனையோ சாதனங்களும், கடமைகளும் விவரிக்கப்பட்டுள்ளன. இவற்றைப் படித்து எத்தனையோ ஊர் சுற்றிகள், தாங்கள் ஊர் சுற்றுவதற்குப் பெரிய அல்லது சிறிய குறிக்கோளெதுவும் இல்லாததால், இந்த சாதனங்களும் கடமைகளும் தேவையில்லையென்றும் கூறலாம். அவர்களை ரொம்பவும் வற்புறுத்திக் கேட்டால், இந்தியின் பழங் கவிஞரான துளசிதாஸரைப் போன்று "சொந்த மனத்திருப்திக்காக ஊர் சுற்றுவதாகச்" சொல்லி விடலாம். ஆனால் துளசிதாஸர் சொந்த மனத்திருப்திக்காக "ராமாயணம்" எழுதியதாகக் கூறினாலும், அம் மாபெரும் படைப்பு ஒரு குறிக்கோளுமின்றியே உலகத்துக்கு வழங்கப்பட்டதா? சரி, நீங்கள் மனத்திருப்திக்காக ஊர் சுற்றுவதாகவே வைத்துக்கொள்வோம். அது அப்படி ஒன்றும் தவறானதல்ல. நீங்கள் குறிக்கோளில்லாமல் ஊர் சுற்றினாலும், அதனால் எவருக்கும் கெடுதல் விளையப் போவதில்லை. பிறருக்குத் துன்பம் விளைவிக்கும் காரியமாற்றக்கூடிய மதிப்பிற்குரிய ஊர்சுற்றி யாருமே இருக்க மாட்டார்கள். சில ஊர்சுற்றிகள் சோம்பலினால் எழுதுகோலையும், தூரிகையையும், உளியையும் உபயோகிக்காமல் போகலாம். ஆனால் இவைகளைப் பயன்படுத்தாமல் கூட, வேறு வகைகளிலும்கூடத் தம் உள்ளக் கருத்துக்களை வெளியிடலாம். ஒவ்வொருவரும் தம்மைச் சுற்றிலும் ஒருவிதச் சூழ்நிலையை உருவாக்குகிறார்கள். அப்படிப் பட்டவர்கள் தமது முத்திரையை மற்றவர்கள் மேல் பதிக்கத் தவறுவது இல்லை.

ஊர் சுற்றி மவுனமாகவே இருக்கவேண்டுமென்று விரதம் கொண்டால், தனது உள்ளக் கிடக்கையை வெற்றிகரமாக மறைத்து விட முடியும்; ஆனால் அவன் நாட்டின் எல்லையைக் கடந்துபோக முடியாது... உலகமெல்லாம் சுற்றித் திரியக்கூடிய ஒருவன் வாய்மூடி மவுனியாக இருக்க வேண்டிய அவசியம் என்ன இருக்கிறது? பேசும் ஊர்சுற்றி மற்றவர்களுக்குப் பயன் உண்டாக்குகிறான். ஒருவன் பேசியும் எழுதியும் எவ்வளவோ பயனடையலாம்; வெறும் பேச்சிலே கூட எவ்வளவோ லாபம் உண்டு. இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்திருந்த காசியைச் சேர்ந்த மாபெரும் சமஸ்கிருதப் புலவர் பண்டிட் சிவகுமார் சாஸ்திரி அவர்கள் பெரும் புகழ் பெற்றிருந்தார். அவர் சாஸ்திர சர்ச்சை செய்வதிலும், சீடர்களுக்குப் பாடம் சொல்வதிலும் தன்னிகரற்று விளங்கினார். ஆனால் எழுதுவதில் சோம்பேறியாகவும், திறமையற்றும் இருந்தார். புகழ் பெறாததற்கு முன்பு அவர் ஒரு நூல் எழுதினார். புகழ் பெற்ற பிறகு ஒரேயொரு நூல் எழுதினார். அதையும் தன் பெயரில் வெளியிடாமல், தனது ஒரு சீடனின் பெயரில் வெளியிட்டார். எதிரிகள் தனது நூலில் குற்றங் குறைகள் கண்டுபிடிப்பார்களென்ற அச்சத்தால், அவர் எழுதுவதற்குத் தயங்கிக் கொண்டிருந்தார். அக்காலத்தில் சமஸ்கிருத விமர்சிகர்கள் ஓரளவுக்குக் கீழ்த்தரமாக நடந்துகொண்டார்களென்பது உண்மை தான்! மொகலாயப் பேரரசர் ஷாஜகான் காலத்தில் பட்டோஜி தீட்சிதர் பதினேழாம் நூற்றாண்டின் முதற் பகுதியில் சமஸ்கிருதத்தில் "சித்தாந்த கௌமுதி" என்ற புகழ் பெற்ற நூலை இயற்றினார். அத்துடன் இலக்கண விதிகளை விவரித்து "மனோரமா" என்னும் நூலையும் எழுதினார். ஷாஜகானின் அரசவைப் புலவரான பண்டித ராஜ ஜகந்நாதர், ஒரு முஸ்லிம் பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளுமளவிற்குப் பரந்த மனப்பான்மையுள்ளவராயிருந்தார். அவருக்கு அனைத்து சாஸ்திரங்களிலும் புலமை இருந்தது. அவர் சமஸ்கிருதத்தின் கடைசி மாபெரும் கவிஞரும்கூட! ஆனால் அப்படிப்பட்டவரும் பட்டோஜி தீட்சிதரின் குற்றங்குறைகளை எடுத்துக்காட்ட, மோசமான மொழியைப் பயன்படுத்தினார். அந்தச் சூழ்நிலையில் பாவம், சிவகுமார் எழுதுகோலைத் தொடவில்லை என்றால், அது அவருடைய தவறல்ல. ஆனால் இரண்டு தலைமுறை யினருக்குப் பாடம் சொல்லி, நூற்றுக்கணக்கான சமஸ்கிருதப் புலவர்களைத் தயார் செய்த அவரது திறமையைக் குறைவாக மதிப்பிட முடியுமா? ஆகவே ஊர்சுற்றி பயன் கருதாமல் பயணம் செய்தாலும், தனது முத்திரையைப் பதிக்காமல் மறைவதில்லை.

பழங்காலத்திய ஊர் சுற்றிகளில் பலரும் ஒரு நூலோ, புத்தகமோ எழுதிப் போகவில்லை. எத்தனையோ பேரை இவ்வுலகம்

அறியவுமில்லை. ஒரு சிறந்த ருஷ்ய நாட்டு ஓவியர் மூன்று குதிரைச் சவாரி வீரர்களைத் தீட்டியிருந்தார். மனித சஞ்சாரமற்ற பயங்கரப் பாதையொன்றில் மூவர் குதிரைகள் மேலேறிச் சென்று கொண்டிருந்தனர். அவர்களில் ஒருவன் பயணத்திற்குப் பலியாகிவிட்டான். எஞ்சிய இருவரும் பல வருடங்களுக்குப் பிறகு, வயோதிகர்களாக அதே வழியில் திரும்பி வந்துகொண்டிருந்தனர். அங்கே வழியில் தமது பழைய நண்பனின் மண்டையோடும், குதிரையின் எலும்புகளும் அவர்களுக்குத் தென்பட்டன. குதிரை வீரர்கள் இருவரின் முகங்களிலும், குதிரைகளின் பார்வைகளிலும் வேதனையைச் சித்திரிப்பதில் ஓவியர் தனது அபாரமான திறமையைக் காட்டியிருந்தார். இந்த உயிரோவியத்தை நான் 1930-ல் கண்டேன். அதே ஆண்டு நான் திபேத்தில் சுற்றிக்கொண்டிருந்தபோது, பன்னிரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்பு, பயங்கர இமயமலையைக் கடந்து திபேத்துக்குச் சென்ற நாலந்தா பல்கலைக் கழகப் பேராசிரியர் சாந்தரட்சிதரின் மண்டையோட்டைப் பார்த்தேன். பார்த்ததும் என் உள்ளம் வேதனையால் உருகிவிட்டது. "தத்துவ சங்கிரகம்" போன்ற சிறந்த தத்துவ நூல்கள் வெளிவந்த அந்த மண்டையோட்டைச் சற்று நேரம் வரை நான் அப்படியே பார்த்துக் கொண்டிருந்துவிட்டேன். எழுபத்து ஐந்து வயதிலும் இமயத்தைத் தாண்டி திபேத்துக்குப் போகும் துணிவு படைத்தவர் அவர். என்றாலும் சாந்தரட்சிதர் கேட்பாரற்று இறந்துவிடவில்லை. அவரைக் குறித்து எத்தனையோ பேர் எழுதியிருக்கின்றனர்.

உலகமெல்லாம் சுற்றிக்கொண்டே ஊர் பேர் தெரியாமல் மறைந்துவிட்ட எத்தனையோ பேரின் மண்டையோடுகளை நான் எவ்விதச் சலனமுமின்றிப் பார்த்துள்ளேன். ருஷியாவில் "நிஜநீன்வாகிராடு"க்குப் போய்ச்சேர்ந்த அந்த இந்திய ஊர்சுற்றியைப்பற்றி யாருக்குமே எதுவுமே தெரியாது. அவர் எங்கே பிறந்தவர்? எந்த நூற்றாண்டில் அங்கே போய்ச் சேர்ந்தார்? எங்கெங்குத் திரிந்து கொண்டிருந்தார் என்பதைப் பற்றியெல்லாம் யாருக்குமே தெரியாது, அவரைப் பற்றிய எல்லா விஷயங்களும் அவருடனே மறைந்துவிட்டன. இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில் ருஷிய நாவலாசிரியர் ஒருவர் நிஜநீன்வாகிராடின் பூகோள சமூகப் பின்னணியைக் கொண்டு ஒரு நாவல் எழுத விரும்பினார். அவர் அங்கே ஒரு ரகசிய மத வழிபாட்டைக் கண்டுபிடித்தார். அவ்வழிபாட்டை அனுசரிப்பவர்கள் தம்மைக் கிருத்துவர்களென்று சொல்லிக்கொண்டாலும், அம்மதத்தில் அவர்களுக்கு நம்பிக்கையில்லை. நமது நாவலாசிரியர் அவர்களுடைய அன்பைப் பெற்று, அவர்களால் பூஜையின் போது பாடப்படும் சில பாடல்களைச் சேகரித்தார். அப்பாடல்கள் பல தலைமுறைகளாக

மொழி தெரியாதவர்களால் பாடப்பட்டு வந்ததால், உருமாறிப் போயிருந்தாலும், இந்தி மொழியைச் சேர்ந்தவை என்பதில் கிஞ்சிற்றும் ஐயமில்லை. அந்தப் பாடல்கள் சிவனின், பார்வதியின் புகழ் பாடுகின்றன. இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் இச் சம்பிரதாயத்தைச் சேர்ந்தவர்கள் பல ஆயிரக்கணக்கில் இருந்தார்க ளென்றும் ஜார் அரசனின் படையதிகாரிகளில் ஒருவர் அவர்களின் தலைவராக இருந்தார் என்றும் அந்நாவலாசிரியர் எழுதியிருக்கிறார். சோவியத் புரட்சிப் புயலில் அந்தச் சம்பிரதாயம் தப்பித்துக் கொண்டதா இல்லையா என்பது தெரியாவிட்டாலும் இந்தியா எங்கே, மத்திய வோல்காப் பகுதியிலுள்ள நிஜநீன்வாகிராட் அல்லது இன்றைய கார்க்கி நகர் எங்கே என்பதை எண்ணிப் பாருங்கள்! அங்கே உலகத்திலேயே பெரிய திருவிழா நடந்து வந்தது. அத்திருவிழாவிற்கு ஐரோப்பாவிலிருந்து மட்டுமல்லாமல், சீனா விலிருந்தும், இந்தியாவிலிருந்தும் கூட வியாபாரிகள் போய்க் கொண்டிருந்தனர். திருவிழாவின் போது அந்த ஏழை இந்தியா அங்கே போய்ச் சேர்ந்ததாகத் தெரிகிறது. கிழத்துறவி இரண்டு, மூன்றாண்டுகள் ஓரிடத்தில் இருந்துவிட்டால், அங்கேயே அவர் சமாதியும் ஆகிவிடுவதுண்டு. பிறகு நாவலாசிரியர் அவரை ஒரு பாத்திரமாக்கி, நாவல் எழுதாமல் விடுவாரா? எது எப்படியிருந் தாலும், அந்த இந்திய ஊர்சுற்றி ருஷியக் குடும்பங்களுக்கு நல்லறிவும், வழிப்பாட்டும் வழங்கினார். இந்திய வேதாந்தத்தை அவர்களுக்குச் சொல்ல, இவருக்கு அவர்கள் மொழி தெரியாது. அவர் வேதாந்தியாக இருந்திருந்தால், சிவ பெருமானைப் பற்றிய பாடல்களையும், பார்வதியைப் பற்றிய பாடல்களையும், கற்றுத் தந்திருக்கமாட்டார். வோல்கா நதிக்கரையிலிருந்த ருஷியக் கிருத்துவர்களைக் கவர்ந் திழுக்கும் அளவுக்கு, நமது இந்தியத் துறவியிடம், ஏதோ ஒன்று இருந்தது. இல்லாவிட்டால் அவர்கள் ஒன்று கூடிச் சிவபெருமானின், பார்வதியின் துதிப்பாடல்களைப் பக்திப் பரவசத்துடன் பாடிக் கொண்டிருப்பார்களா? அவருக்குக் கொஞ்சம் யோகமும், மாயா ஜாலமும் கூடத் தெரிந்திருக்கலாம். இவை இரண்டும் அமோகப் பலனளிக்கும் சிறந்த ஆயுதங்கள். இவற்றின் உதவியுடன் இன்று நம் நாட்டுச் "சாமியார்" வேடம் பூண்ட எத்தனையோ பேர் படித்த ஐரோப்பியர்களை வியப்பிலாழ்த்திக்கொண்டிருக்கின்றனர். இந்த நிலையில் பதினேழாம் அல்லது பதினெட்டாம் நூற்றாண்டில் நமது இந்திய ஊர் சுற்றி ருஷியர்களைக் கவர்ந்ததிலும், அவர்களுக்கு மனச் சாந்தி அளித்ததிலும் ஆச்சரியமில்லை. அவர் வோல்கா வரையிலும் குறிக்கோளில்லாமல்தான் சென்றார், என்றாலும் எவ்வளவு சாதனை புரிந்திருக்கிறார்? பத்தொன்பதாம் நூற்றாண்டிலும், இருபதாவது

நூற்றாண்டிலும் மேற்கு ஐரோப்பியர் இந்தியர்களைத் தாழ்வாகக் கருதியதைப் போல், ருஷியர்கள் கருதவில்லை. அதற்குக் காரணம் இப்படிப்பட்ட இந்திய ஊர் சுற்றிகளாக இருக்கலாமல்லவா? ஆதலால், குறிக்கோளற்ற ஊர் சுற்றுதலால் ஏமாற்றமடைய வேண்டிய அவசியமில்லை.

முப்பதாண்டுகளுக்கும் மேலாகத் தாய்நாட்டை விட்டு வெளி நாடுகளில் வாழும் ஒரு நண்பர், என்னை சோவியத் யூனியனில் சந்தித்தபோது, "உங்கள் உடலில் தாய் நாட்டின் நறுமணம் கமழ்கிறது" என்றார். ஒவ்வொரு ஊர் சுற்றியும் தாய்நாட்டின் நறுமணம் தன்னுடன் கொண்டு போகிறான். அவன் உயர்ரக ஊர் சுற்றியாக இல்லாவிட்டால், நறுமணத்துக்குப் பதிலாகத் துர்நாற்றம்தான் வீசும். ஆனால் நாம் குறிக்கோளில்லாமல் சுற்றித் திரியும் ஊர் சுற்றியிடமிருந்து துர்நாற்றம் எதிர் பார்க்க மாட்டோம். ஊர் சுற்றி தன் நாட்டைக் குறித்துப் பெருமைப்படுவான். இந்தியாவைப் போன்ற நாட்டை தாய்நாடாகப் பெற்ற எவன் பெருமைப்படாமல் இருப்பான்? நாம் பெருமை கொள்ளத்தக்க ஆயிரக்கணக்கான விஷயங்கள் இங்கே இருக்கின்றன. ஊர்சுற்றி கர்வத்தில் மூழ்கி, பிற நாடுகளைத் தாழ்வாக எண்ணக் கூடாதென்பதுதான் நமது விருப்பமாகும். பிற நாடுகளுடன் நட்பு கொள்வது தான் நமது புராதனச் சம்பிராதாயமாகும். நம் நாட்டு ஊர்சுற்றிகள் வெளிநாடுகளில் இந்தியப் பண்பாட்டைப் பரப்புவதற்காகச் சென்றாலும் அந்நாடுகளை ஏமாற்றச் செல்லவில்லை. அந்நாடுகளையும் தம் நாட்டைப்போல் பண்பாடுள்ளவையாகச் செய்யச் சென்றனர். எந்த நாடும் தன்னைத் தாழ்வாக எண்ணிக் கொள்ளக் கூடாதென்பதற்காகவே, தம்முடைய ஞானத்தையும், விஞ்ஞானத்தையும் அந்நாடுகளின் மொழிகளிலேயே வெளியிட்டனர். அந்நாடுகளின் சூழ்நிலையிலேயே தமது கலைகளைப் பரப்பினர். தாய் நாட்டுப் பற்று- அது வெறியாக இல்லாமலிருந்தால்- நல்லதுதான்! நமது ஊர் சுற்றி குறிக்கோளில்லாமல் சுற்றித் திரிந்தாலும், தன்னைத் தன்நாட்டுப் பிரதிநிதியாகக் கருதிக் கொள்வான். தாய் நாட்டிற்கும், ஊர் சுற்றும் நெறிக்கும் களங்கம் உண்டாக்கக் கூடிய எந்தவிதக் காரியமும் அவன் செய்ய மாட்டான். ஊர் சுற்றிக் கொண்டிருக்கும் போது, எந்த ஒரு அந்நிய நாட்டிலோ அவன் மண்ணோடு மண்ணாக நேரிடலாம். இதைக் கருதி அவன் தாய் நாட்டிற்கு நன்றியுள்ளவனாக இருப்பான்.

எந்த ஒரு குறிக்கோளில்லாமல் உலகைச் சுற்றி வருவதும் பயனற்ற செயலல்ல. ஒருவன் இருபது- இருபத்தைந்து வயதில் இந்தியாவை விட்டு வெளியேறி, ஆறு கண்டங்களிலும் ஒவ்வொரு நாட்டையும்

சுற்றுவதென்று முடிவு செய்துகொண்டாலும், அது மறைமுகமாக நல்ல பயன் அளிக்கக்கூடியதேயாகும். இப்படிப்பட்ட ஊர் சுற்றிகள் இதற்கு முன்னும் இருந்தனர்; இன்றும் இருக்கின்றனர். அவர்களைக் குறித்த எத்தனையோ விஷயங்களை நான் ஐரோப்பாவில் பலர் வாயிலாகக் கேள்விப்பட்டேன். அவற்றில் பல நம்பத் தகுந்தவையல்ல.

ஒரு ஊர்சுற்றி பதினேழு - பதினெட்டு வயதிலேயே கல்கத்தா பல்கலைக் கழகத்தில் தத்துவத்தில் டாக்டர் பட்டம் பெற்றானாம். முதல் உலகப் போருக்கு முன்பே அவன் பல நாடுகளையும் சுற்றினான். முப்பதைந்து - முப்பத்தாறு வயது வரை அவன் சுற்றிக்கொண்டே இருந்துவிட்டான். அமெரிக்கா, ஐரோப்பா, அட்லாண்டிக், பசிபிக் மாகடல்களிலுள்ள தீவுகளில் எத்தனையோ முறை சுற்றித் திரிந்து விட்டான். ஊர் சுற்றும்போதே அவன் பிரெஞ்சு, ஸ்பானிஷ் போன்ற மொழிகளையும் கற்றுக்கொண்டான். அவன் இப்படியே ஊர் சுற்றிக்கொண்டே எங்கேயாவது ஒருநாள், கண்ணை மூடிவிடுவான். பின்னர் உறவினர்களுக்குக்கூட அவனைப்பற்றிய நினைவிருக்காது. எனினும் அவன் கல்வியறிவும், பண்பும் உள்ள ஊர் சுற்றி. ஆகவே அவன் பிரேஸில், கியூபா, பிரான்ஸ், ஜெர்மனி போன்ற நாடுகளில் எத்தனையோ பேரைக் கவர்ந்திருப்பான் என்பதில் ஐயமில்லை.

இவனைப் போன்ற இன்னொரு ஊர்சுற்றியை நான் 1932-ல் லண்டனில் சந்தித்தேன். அவன் பெயர் ஷெரீஃப். முதல் உலகப் போரின்போது அவன் எப்படியோ பிரிட்டனுக்குள் நுழைந்து விட்டான். அவனுடைய பிறப்பு, வளர்ப்பு தெரியாவிட்டாலும், நான் அவனைச் சந்தித்ததற்கு முன்பிருந்தே ஊர் சுற்றிக்கொண்டிருந்தான். அதுவும் பிரிட்டனைப் போன்ற நாட்டில்! இங்கிலாந்து, ஸ்காட்லாந்து, அயர்லாந்துகளில் அவன் ஆண்டுக்கு ஒரு தடவையாவது கால்நடை யாகச் சுற்றிக் கொண்டிருந்தான். ஏதாவதொரு வேலை செய்வதை விட்டு வெகு நாளாயிற்று. பிச்சையெடுத்தே சாப்பிட்டுக் கொண்டி ருந்தான். "பிச்சையெடுப்பது இங்கே கஷ்டமில்லையா? பிச்சை எடுப்பதைத் தடுக்க இங்கே சட்டம் கூட இருக்கிறதே!" என்று நான் கேட்டேன். "நான் பணக்காரர் வீடுகளுக்குப் போய்ப் பிச்சை கேட்பதில்லை. அவர்கள் நம் மேல் நாயை அவிழ்த்து விடுகிறார்கள் அல்லது போலிசுக்கு ஃபோன் செய்கிறார்கள். ஏழைகளும், சாதாரண மக்களும் வாழ்கிற சந்துகளும், சேரிகளும் எனக்குத் தெரியும். பழைய ஊர் சுற்றிகள், வீடுகளுக்கு முன்னாலுள்ள தபால் பெட்டிகளின் மேல் குறிவைத்திருப்பார்கள். அதைப் பார்த்ததும் இங்கு ஏதாவது கிடைக்கு மென்ற நம்பிக்கை எங்களுக்கு ஏற்படும். நாங்கள் போய்க் கதவைத் தட்டுவோம் அல்லது மணியை அழுத்துவோம். யாராவது வெளியே

வந்தால், ஒரு கோப்பை தேநீர் கிடைக்குமா என்று கேட்போம். தேநீருடன் ரொட்டித் துண்டும் தருவார்கள்!" என்று கூறினான் ஷெரிஃப். அவன் சுயமரியாதையற்ற ஊர் சுற்றியாகவும் தெரியவில்லை. ஊர் சுற்றுதல் அவனை நகரங்களுக்கு இழுத்துச் சென்றாலும், கலண்டனைப் போன்ற மாநகரங்களிலிருந்து தூரமாகவே இருக்க விரும்பினான் அவன். இரவில் உறங்குவதைப் பற்றிக் கூறினான். "இரவு நேரங்களில் பொதுப் பூங்காக்களை மூடி விடுகிறார்கள். அதனால் நாங்கள் பகலிலேயே புல்லின் மீது படுத்துத் தூங்குகிறோம். என்னுடன் 'ரீஜெண்ட்' பூங்காவுக்கு வந்தால் அப்படித் தூங்கும் எத்தனையோ ஊர் சுற்றிகளைக் காட்டுவேன்."

ஊர்சுற்றிகள் தெருக்களில் சுற்றிக்கொண்டே இரவு வேளை களைக் கழித்துவிடுகின்றனர். அங்கேயே ஒரு வெள்ளை ஊர் சுற்றியின் அறிமுகம் கிடைத்தது. பல வருடங்களாக ஷெரிஃபைப் போலவே குறிக்கோளில்லாமல் சுற்றிக்கொண்டிருந்த அவன் அப்பொழுது படிப்பில் நாட்டம் கொண்டுவிட்டான். லண்டனில் படிப்பதற்குப் புத்தகங்கள் சுலபமாகக் கிடைக்கின்றன. சற்று வயதான பெண் ஒருத்தியின் நட்பும் அவனுக்குக் கிடைத்துவிட்டது. இதனால் சிலகாலம் அவன் ஊர் சுற்றுவதை நிறுத்தியும் விட்டான்.

இப்படிப்பட்டவர்களைக் குறிக்கோளற்ற ஊர் சுற்றிகளென்று சொல்லலாம். ஆனால் உயர்ரக ஊர் சுற்றிகளென்று மட்டும் சொல்ல முடியாது. ஆனால் அவர்கள் கெட்டவர்களல்ல. கெட்டவர்களானால் பத்துப் பதினைந்து ஆண்டுகள் கவலையில்லாமல் ஊர் சுற்றிக் கொண்டிருக்க முடியுமா? கெட்டவர்களாயிருந்தால் சிறைக்குத்தான் போக வேண்டிவரும். மேற்கூறிய இருவருமே இரண்டு நாடுகளுக்குள் மட்டுமே ஊர் சுற்றுவதை நிறுத்திக்கொண்டுவிட்டதால் அவர்களைப் பெரிய ஊர்சுற்றிகளென்றும் சொல்ல முடியாது. ஆசியா, ஆப்பிரிக்கா, ஐரோப்பா, வட, தென் அமெரிக்காக்கள், ஆஸ்திரேலியா போன்ற ஆறு கண்டங்களிலும் சுற்றித் திரிபவர்களையே பெரிய ஊர் சுற்றி களென்று கூறலாம். ஆசியாவினர் உலகத்தின் பல பகுதிகளிலும் நுழைவதிலிருந்து தடுக்கப்பட்டிருக்கின்றனர். இந்த நிலையில் ஆசிய ஊர் சுற்றிகள் அப்பகுதிகளுக்குப் போக இயலவில்லையென்றால், அதனால் அவர்களுடைய பெருமைக்கு இழுக்கு ஏற்படாது.

குறிக்கோளற்ற ஊர்சுற்றி தன்னெதிரே எந்தவிதக் குறிக்கோளு மில்லாவிட்டாலும், ஒரு பயனுள்ள வேலையைச் செய்யலாம். அவன் ஊர்சுற்றி நெறிக்காக மக்கள் உள்ளத்திலே நம்பிக்கையும், மதிப்பும் தோற்றுவிக்கலாம். எல்லா ஊர் சுற்றிகளிடையேயும் சகோதரத்து வத்தை ஏற்படுத்தலாம். இதுவெல்லாம் அவன் தன் நடத்தையால்

சாதிக்க முடியும். இன்றைய உலகம் ஸ்தாபன அமைப்பை அடிப்படை யாகக் கொண்டது. ஆகவே தற்கால ஊர்சுற்றி ஸ்தாபன அமைப்பை முக்கியமானதாகக் கருதினாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. ஆனால் விதிமுறைகள் அடங்கிய ஊர் சுற்றி அமைப்பு தேவையில்லை. ஒவ்வொரு ஊர் சுற்றியின் உள்ளத்திலும் சகோதரத்துவம் மறைந் திருக்கிறதே. அவர்கள் ஒருவருக்கொருவர் நட்புறவுடன் பழகினாலே போதும்! அதுவே ஒரு அமைப்பு விளைவிக்கும் பயன்கள் எல்லாம் வழங்கும். ஊர் சுற்றிக்கு நல்ல உடல் நலம் இருக்கும் வரையிலும், அவனது கை, கால்கள் நன்றாக விளங்கும் வரையிலும் கவலை யில்லை. உடல் நலம் குன்றிப் படுக்கையில் விழும்போது, அவனுக்கு உதவி செய்பவர்கள் இல்லாவிட்டால் அனாதையாகி விடுவான். அப்படிப்பட்ட நிலையில் ஊர் சுற்றிகள் ஒருவருக்கொருவர் உதவி புரிந்து கொள்ள வேண்டும். அவர்கள் தங்களுடைய ஆதரவாளர்கள் உள்ளத்திலும், எல்லா ஊர் சுற்றிகளுக்குமே உதவி செய்ய வேண்டு மென்ற எண்ணத்தை உண்டாக்க வேண்டும். ஊர்சுற்றி மடமோ, ஆசிரமமோ அமைத்துக் கொண்டு ஓரிடத்திலேயே தங்கி விடுவா னென்று எதிர்பார்க்கக்கூடாது. மடங்களிலும் ஆசிரமங்களிலும் ஊர்சுற்றிகளுக்கு இடம் கொடுக்க வகை செய்ய வேண்டும்.

வருங்கால ஊர்சுற்றிகளின் பாதையைச் செப்பனிடுவதும் ஒவ்வொரு ஊர்சுற்றியின் கடமையாகும். குறிக்கோளற்ற ஊர்சுற்றி இதையாவது செய்தால், அவன் தனது வர்க்கத்துக்கு உதவி புரிந்த வனாவான். ஆயிரக்கணக்கில் குறிக்கோளற்ற ஊர்சுற்றிகள் வீட்டை விட்டுப் புறப்பட்டு விடுகின்றனர். ஒரு தாயின் கண் முன்னால் அவளுடைய மகன் இறந்துவிட்டால் அவள் அழுது புலம்பி எப்படியோ மனத்தைத் தேற்றிக் கொண்டு விடுகிறாள். ஆனால் வீட்டை விட்டு ஓடிப்போன ஊர் சுற்றியின் தாய் அப்படிச் செய்ய முடியாது, அவள் வாழ்நாள் முழுதும் தன் மகனின் வரவை எதிர் பார்த்திருப்பாள். மனைவியும், மற்ற உறவினர்களும் கூட அவன் திரும்பி வருவானென்று நம்பிக் கொண்டிருப்பார்கள். ஓரோர் சமயம் அதிசயமான நிகழ்ச்சிகளும் நிகழ்ந்துவிடும்.

ஒரு ஊர்சுற்றி எங்கெங்கோ திரிந்து கொண்டே ஒரு கிராமத்துக்கு வந்து சேர்ந்தான். அங்கிருந்தவர்கள் ஏதோ கிசுகிசுத்துக் கொண்டனர். ஊர் சுற்றியைக் கவுரவமாக ஒரு வீட்டில் தங்க வைத்தனர். அவன் தன் கையாலேயே சமைத்துச் சாப்பிடுபவனாகையால் உணவுப் பொருட் களும், பாத்திரங்களும் அவனுக்குத் தந்தனர். அவன் சமையல் செய்து, சாப்பிடும்போது கிராமத்தார் தன்னை முற்றுகையிடுவதை உணர்ந் தான். அக்கிராமத்தைச் சேர்ந்த வாலிபனொருவன் பத்துப் பன்னிரண்டு

ஆண்டுகளுக்கு முன் ஊரைவிட்டு, எங்கோ ஓடி விட்டிருந்தான். அவனது இளம் மனைவி வீட்டிலிருந்தாள். அந்த ஊர்சுற்றி எப்படியோ அந்தக் கிராமத்தை விட்டுத் தப்பித்துக் கொண்டு ஓடிவிட்டான்; தான் அக்கிராமத்தான் அல்லவென்று எவ்வளவு சொல்லியும் அவர்கள் கேட்கவில்லை.

'ஆரா' மாவட்டத்தில், தான் அவனில்லை என்று எவ்வளவு எடுத்துக்கூறியும், அங்கிருந்தவர்கள் ஒரு ஊர்சுற்றியை வலுக்கட்டாயப் படுத்திவிட்டனர். கடவுள் மேல் பாரத்தைப் போட்டுவிட்டு அவன் அங்கேயே தங்கிவிட்டான். யாருடைய பெயரில் அவன் அங்கே இருந்து விட்டானோ, அவன் பெயரில் ஒரு குழந்தைக்கும் தந்தையாகி விட்டான். அதன் பிறகு உண்மையான ஆசாமி திரும்பி வந்தான். இப்படிப்பட்ட நிலையில் ஊர் சுற்றி என்ன செய்வான்?

குறிக்கோளில்லாமல் ஊர் சுற்றும் வாய்ப்பு பலருக்கும் கிட்டு கிறது. ஊர் சுற்றும் சாஸ்திரம் இதுவரை எழுதப்படாததால் ஊர் சுற்றுவதன் நோக்கம் குறித்து யாருக்குத் தெரியும்? இதுவரை மக்கள் ஊர் சுற்றுதலைச் சாதனமாகவும், கடவுளைத் தரிசிப்பதையும், மோட்சம் பெறுவதையும் லட்சியமாகவும் கொண்டிருந்தனர். ஆனால் ஊர்சுற்றுதல் வெறும் சாதனம் மட்டுமல்ல; இலட்சியமும் கூட! எந்த ஒரு குறிக்கோளுமில்லாமல் வீட்டை விட்டுப் புறப்பட்டு விடுகிற ஊர் சுற்றி, வாழ்நாள் முழுவதும் குறிக்கோளில்லாமலே இருந்து விட்டாலும், ஒரிடத்திலேயே தங்கிவிடாமல் சுற்றிக்கொண்டே யிருந்தால், பிற்காலத்தில் அவனுக்கும் ஒரு குறிக்கோள் ஏற்படலாம். குறிக்கோளுடனோ அல்லது குறிக்கோளில்லாமலோ எப்படி ஊர் சுற்றினாலும் அது நன்மை பயப்பதேயாகும்.

## 15. இளம் பெண்கள் ஊர் சுற்றுவதெப்படி?

ஊர் சுற்றும் நெறி - ஊர் சுற்றும் செயல் - எந்த ஒரு நாட்டுக்கோ, இனத்துக்கோ, தனி நபருக்கோ சொந்தமானதல்ல. காற்றை - நீரைப் போல் எல்லா மனிதர்களுக்கும், இன்னும் சொன்னால், எல்லா உயிர்களுக்கும் ஊர் சுற்றும் நெறி பொதுவானது. ஆனால் மனிதனால் மட்டுமே தன் நலனுக்காக இதைப் பயன்படுத்திக்கொள்ள முடியும். "ஊர் சுற்றிப்புராணத்"தில் இதுவரை வந்துள்ள பதினான்கு அத்தியாயங்களைப் படித்து, எத்தனையோ இளம் பெண்கள், எங்களுக்காக இதிலே குறிப்பாக ஒன்றுமே எழுதப்படவில்லையே என்று குறைப்பட்டு எனக்குக் கடிதம் எழுதினர். யுவதிகளுக்காகத் தனியாக எழுதாததற்குக் காரணம், பெண்களும், சூத்திரர்களும் சாஸ்திரங்களைப் படிக்கக்கூடாதென்ற பத்தாம் பசலித்தனமான எண்ணமல்ல. இந்தியாவின் விசேஷச் சூழ்நிலை, இளம் பெண்கள் சுயேச்சையாகச் சுற்றித் திரிவதற்குச் சாதகமாக இல்லாவிட்டாலும், அவர்களும் ஊர் சுற்றிப்பாதையில் பீடு நடைபோட முடியுமென்று கருதுகிறவன் நான். ஒரு நாட்டு யுவதிகளால் செய்ய முடிந்ததை, மற்ற நாட்டு யுவதிகளாலும் செய்ய முடியும். ஆனால் அதற்குத் துணிவும், அறிவும் இருக்க வேண்டும். 1926-ல் நான் லடாக்கிலும், மேற்குத் திபேத்திலும் சுற்றித் திரிந்து கொண்டிருந்தேன். அப்போது லடாக்கில் ஒரு பிரெஞ்சு ஓவியப் பெண்ணான "லாஃபூஜி" தனியாகச் சுற்றித் திரிந்து கொண்டிருந்ததைக் கண்டேன். குமாரி லாஃபூஜி அங்கிருந்த அழகிய காட்சிகளையும் மனிதர்களையும் ஓவியங்களாக வரைந்து கொண்டிருந்தாள். அங்கிருந்து திரும்பி வந்த அவள் சிம்லா நகரில் தான் தீட்டிய ஓவியங்களின் கண்காட்சியையும் நடத்தினாள். அவள் உணவு சமைப்பதற்காக ஒரு வேலைக்காரனை அமர்த்திக் கொண்டு, வழிகாட்டியின் உதவியுடன் பயங்கரக் காடுகளில் அச்சமின்றித் திரிந்துகொண்டிருந்தாள்.

ஒன்பது வருடங்களுக்குப் பிறகு, நான் கொரியா நாட்டின் எழிலார்ந்த மலைகளில் சுற்றிக் கொண்டிருந்த ஒரு அழகு அமெரிக்க

யுவதியைப் பார்த்தேன். அவள் ஓவியம் தீட்டுபவளோ, கலைச் செல்வியோ அல்ல. ஊர் சுற்றுவதற்காக மட்டுமே திரிந்துகொண்டிருந்தாள். அவளோடு வேலைக்காரர் எவருமில்லை. அவள் தன் முதுகில் சுமக்குமளவுக்கு மட்டுமே சாமான்களை வைத்திருந்தாள். தோளில் தொங்கிக்கொண்டிருந்த நீண்ட பையில் பலவிதமான பொருட்களை வைத்திருந்தாள். தோளிலேயே ஒரு குவளையும் தொங்கிக் கொண்டிருந்தது. மேலே ஒரு கம்பளியையும் போர்த்திக் கொண்டிருந்தாள். மலை ஏறுவதற்காகக் கையில் ஒரு கோலுமிருந்தது. அங்கே சிறு சிறு சிற்றுண்டி விடுதிகள் நிறைய இருந்தன. ஜப்பானியர் அவற்றின் உரிமையாளர்கள். அப்பொழுது கொரியா ஜப்பானுக்கு அடிமைப்பட்டிருந்ததால், வருவாய்த் துறைகளெல்லாம் ஜப்பானியர் வசமே இருந்தன. உணவு விடுதிகள் சுத்தமாகவும், மலிவாகவும் இருந்தன. படுப்பதற்குக் கட்டில்களுக்குப் பதிலாக, மெத்தென்ற பாய்கள் விரிக்கப்பட்டிருந்தன. அவ்வமெரிக்கப் பெண் உலகம் முழுதும் சுயேச்சையாகச் சுற்றித்திரிந்து மகிழ்ச்சி அனுபவித்துக் கொண்டிருந்தாள்.

மேற்குறிப்பிட்ட இரு உதாரணங்களும் மேற்கத்தியப் பெண்களுடையவை என்பது உண்மைதான்! ஆனால் ஆசிய யுவதிகள் இவர்களைவிடப் பின்னடைந்தவர்கள் என்பதல்ல. கொரியாவுக்குப் போவதற்கு ஓராண்டுக்கு முன்னதாக நான் எனது காலஞ்சென்ற நண்பர் கோஷே தர்மவர்த்தனுடன் திபேத்தில் சுற்றிக் கொண்டிருந்தேன். நாங்கள் லாஸாவிலிருந்து பிரம்ம புத்திரா நதியைத் தாண்டி, மிக உயரமான கணவாயொன்றைக் கடந்து ஒரு கிராமத்தை அடைந்தோம். அதே சமயம் இருபது- இருபத்திரண்டு வயதுடைய "தங்குத்" யுவதிகள் இருவர் அந்தக் கிராமத்துக்கு வந்தனர். திபேத்திய நாய்கள் மிகவும் பயங்கரமானவை. அவைகளிடம் மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். அதனாலேயே நான் நாய்க்கடியிலிருந்து தப்பித்தேன். அவ்விளம் பெண்கள் தன் நாட்டு நீண்ட காலணிகளை அணிந்திருந்தனர். வெள்ளைக் கம்பளி அங்கியைப் போட்டிருந்தனர். தலையில் கம்பளித் தொப்பியையும் வைத்திருந்தனர். முதுகில் சாமான்களைச் சுமந்தனர். இருவரின் கைகளிலும் தடிகள் இருந்தன. பிச்சைக்காரிகளாக அவர்கள் இருந்தாலும், எழிலையும் இளமையையும் அவர்களால் மறைக்க முடியவில்லை. அவர்களில் ஒருத்தியை ஒரு நாய் கடித்து விட்டது. நாங்களிருவரும் இந்திய பௌத்த சந்நியாசிகளாக அங்கே சென்றிருந்தோம். எங்களிடம் ஏதாவது மருந்து இருக்குமென்பது அங்குள்ளவர்களின் நம்பிக்கையாகும். ஆகவே அவ்விரு இளம் பெண்களும் மருந்துக்காக எங்களிடம் வந்தனர். 'டிஞ்சரும்' வேறு சில மருந்துகளும் எங்களிடம் இருந்தன. நாங்கள்

நாய்க்கடியில் மருந்தைத் தடவினோம். கோஷே தர்மவர்த்தன் தன் நாட்டைச் சேர்ந்த யுவதிகள் இருவரையும் பார்த்துச் சந்தோஷமடைந்தார். அவர்களிருவரும் அவருடைய சொந்த ஊருக்கு அருகில் இருப்பவர்கள்தான்! எங்களால் முடிந்த அளவுக்கு அவர்களுக்கு உதவி புரிந்தோம். அவர்கள் ஊர் சுற்றுதலின் மறு பெயரான புனித யாத்திரைக்காகப் புறப்பட்டிருந்தனர். அவர்களுடைய சொந்த ஊரிலிருந்து இந்தக் கிராமம் ஒரு மாதப் பயணத்தில் இருந்தது. அதுவும் பாதியளவு வழியில் கிராமம் எதுவுமே இல்லை. பல இடங்களிலும் கொள்ளைக்காரர்களின் பயம் வேறு! அவர்களிடம் பணம், நகைகள் எதுவுமில்லாவிட்டாலும், அழகும், இளமையும் இருக்கின்றனவே! அப்படி இருந்தும், அவர்கள் எவ்வளவு துணிவுடன் அப்பயணத்தை மேற்கொண்டிருந்தனர். அவர்கள் இமயமலையிலுள்ள மானஸரோவரத்துக்கும், நேப்பாளத்துக்கும், இந்தியாவுக்கும் கூடச் செல்ல எண்ணியிருந்தனர். இவர்கள் இந்திய இளம் பெண்களின் ஆசியச் சகோதரிகளாவர். அவர்களிடம் துணிவிருந்தது. ஆனால் எழுத்து வாசனை இல்லை. வழிச் செலவுக்குக் கூட அவர்கள் கையில் ஒன்றுமில்லை. புனித யாத்திரை செல்பவர்கள் அங்கே பிச்சையெடுக்க வெட்கப்படுவதில்லை யாதலால், அதை நம்பியே அவர்கள் சுற்றிக்கொண்டிருந்தனர்.

நமது நாட்டிலும் ஊர்சுற்றிப் பெண்களுக்குப் பஞ்சம் இருந்ததில்லை. இப்பொழுதும் எத்தனையோ பெண் சாமியார்கள் கையில் தடியும், கமண்டலமும் எடுத்துக்கொண்டு, நாட்டிலுள்ள புண்ணிய ஸ்தலங்களைச் சுற்றிக் கொண்டிருப்பதைக் காணலாம். ஆனால் அவர்களில் இளம் பெண்கள் மிகக் குறைவென்பது உண்மைதான்! நடுத்தர வயதினரும், கிழவிகளுமே அதிகமாக இருப்பார்கள். அலகாபாத்தில் பன்னிரண்டு வருடங்களுக்கு ஒருமுறை நடக்கும் கும்பமேளாவின் போது நூற்றுக்கணக்கான பெண் சாமியார்களைப் பார்க்கலாம். நம் நாட்டில் துறவி வாழ்க்கை ஊர் சுற்றி வாழ்க்கையின் மறு உருவமேயாகும். புனித யாத்திரை என்பது ஊர் சுற்றுதலேயாகும். நமது ஊர் சுற்றிச் சாமியார்கள் இந்தியாவுக்குள் மட்டும் சுற்றித் திரியவில்லை. நூற்றைம்பது வருடங்களுக்கு முன்னரே அவர்களில் சிலர் ருஷியத் தலைநகரையும், ஆசியா பூராவையும் சென்றடைந்தனர். புதுயுகப் பெண் சாமியார்களை விட்டால், இரண்டாயிரத்து அறுநூறு, எழுநூறு வருடங்களுக்கு முன்னால், எத்தனையோ இளம் பெண் ஊர் சுற்றிகள் இருந்தனர். மிதிலையின் அரசர் ஜனகரின் அரசவையில் வேத விற்பன்னரான யாக்ஞ வல்கியரைச் சாஸ்திர சர்ச்சையில் திக்கு முக்காடச் செய்த "கார்க்கி" ஒரு பெண் ஊர் சுற்றிதான்! அவள் "குரு" ராஜ்ஜியத்தைச்

சேர்ந்தவள் (இன்றைய மீரட்) அங்கிருந்து கார்க்கி பீகாரிலுள்ள "விதேகப்" பிரதேசத்துக்கும் போய்ச்சேர்ந்தாள். அவளுடைய எதிரியான யாக்ஞவல்கியரும் "குரு" பிரதேசத்தைச் சேர்ந்தவர்தான்! ஆணானதால் ஊர் சுற்றித் திரிவது அவருக்கு ஒரு பெரிய காரியமல்ல. இன்று நாம் மீரட்டில் ரயிலில் உட்கார்ந்து, மறுநாளே சௌகரியமாக விதேகப் பிரதேசத்திலுள்ள இன்றைய தர்பங்காவுக்குப் போய்ச் சேர்ந்துவிடலாம். ஆனால் அந்தக் காலத்தில் ரயில்களுமில்லை; வேகமாகப் பறக்கும் விமானங்களுமில்லை. அக்காலத்தவர் கால் நடையாகவே பிரயாணம் செய்து வந்தனர். சில இடங்களில் படகு களிலும் பயணம் செய்தனர். அக்காலத்திலும் நமது நாட்டில் வயல்கள் கிராமங்களைவிடக் காடுகளே அதிகமாக இருந்தன. உத்திரப்பிரதேஷ், வட பீகாரைச் சேர்ந்த இக்காடுகளில் சிங்கங்களும், யானைகளும் நிறைய இருந்தன. பல இடங்களில் கொள்ளைக்காரர் களின் பயமும் இருந்தது. கார்க்கியின் தைரியத்தைப் பாருங்களேன். அவள் இந்த ஆபத்துக்களையெல்லாம் பொருட்படுத்தாமல், கால்நடையாகவே 'விதேக' ராஜ்ஜியத்துக்குப் போய்ச் சேர்ந்திருக் கிறாள். யாக்ஞவல்கியர் வாதத்தில் கார்க்கியின் வாயடைத்துவிட்டா ரென்று பொய்யர்கள் கூறினாலும், 'பிரகதாரணிய உபநிஷத்'தின் அந்தப் பகுதி இன்னும் இருக்கிறது. படித்துப் பாருங்களேன். யாக்ஞவல்கியர் கார்க்கியைத் தனது வாதத் திறமையாலும், பிரம்ம ஞானத்தாலுமா வெற்றி கொண்டார்? கார்க்கியின் வாதங்களால் திக்குமுக்காடிய யாக்ஞவல்கியர், "நீ கேள்விகளின் வரம்பை மீறுகிறாய்!" என்று அவளைக் குற்றஞ்சாட்டினார். "நீ இதோடு நிறுத்திக் கொள்ளாவிட்டால், உன் தலை உருளும்!" என்று கார்க்கி யைப் பயமுறுத்தவும் செய்தார். சென்ற நூற்றாண்டில் காசியைச் சேர்ந்த ஒரு ரவடிதான் இப்படிப் பயமுறுத்த முடியும். அது அப்படி இருக்கட்டும். அக்காலத்திலும் நமது நாட்டில் கார்க்கியைப் போன்ற துணிவு நிறைந்த பெண்மணிகள் இருந்தார்கள் என்பதை நாம் கவனிக்க வேண்டும். அப்பெண்மணிகள் கொடிய விலங்குகள், மனிதர்கள், இயற்கை, காலம் போன்ற தடங்கல்களையெல்லாம் கடந்து, தூரப் பிரதேசங்களிலும் சுற்றித் திரிந்து கொண்டிருந்தனர். புத்தர் வாழ்ந்த காலத்திலும் இப்படிப்பட்ட பெண்களுக்குக் குறைவில்லை. ஆகவே, நமது நாட்டில் ஊர்சுற்றி யுவதிகளுக்கு இடமில்லை என்பது தவறாகும்.

என்றாலும், இப்போதும் சரி, எப்போதுமே சரி, பெண்களைவிட ஆண்கள் அதிக உடல் வலிமை கொண்டவர்களாக இருக்கின்றனர் என்ற உண்மையை நம்மால் மறுக்க முடியாது. வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம், ஆண்கள் வெட்கங் கெட்ட முறையில் தமது மிருக பலத்தைப் பயன்படுத்திக்கொண்டே வருகின்றனர். கல்வி அறிவில்லாத வர்கள் மட்டுமல்ல; படித்த கல்லூரி மாணவர்களும் மாணவிகளை

இன்றும் தொல்லைப்படுத்துவதைக் காணும்போது, இந்த அபாயத்தை நாம் புறக்கணிக்க முடியாது. ஒரு இளம் பெண் ஒரு ஆணை எதிர்க்க முடியாது. ஆனால் ஐந்தாறு யுவதிகள் ஒன்று சேர்ந்து ஓரிரு ரவடிகளை அடித்து வீழ்த்திப் பாடம் கற்பிக்க முடியாதா? இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் பெண்களுக்கே உரித்தான வெட்கமும், நாணமும் கெடுதலே விளைவிக்கும். அவர்கள் தம்மையும், தமது மானத்தையும் சுய பலத்தினாலேயே காப்பாற்றிக்கொள்ள முடியும். ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக நம் நாட்டுத் தாழ்த்தப்பட்ட மக்கள் அடங்கி ஒடுங்கிக் கிடந்தனர். அவர்கள் அடங்கி ஒடுங்கிக் கிடந்த வரையிலும், மேல் ஜாதிக்காரர்கள் அவர்களைத் துன்புறுத்திக்கொண்டே இருந்தனர். அவர்கள் ஒன்றுபட்டுத் திரண்டெழுந்த இடங்களிலெல்லாம் மேல் ஜாதிக்காரர்கள் தாழ்த்தப்பட்டவர்களிடமிருந்து தம்மைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டி நேரிட்டது. யுவதிகள் தமது சுய பலத்தின் மீதே நிற்க வேண்டும். தன்னம்பிக்கையுடன் தம்மைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். தன்னை வம்பு செய்யும் ரவடியைச் செருப்பாலடித்த இளம் பெண்ணை அனைவரும் பாராட்டவே செய்கிறார்கள். அவளிடம் ரவடி மாணவர்கள் அச்சப்படவே செய்கிறார்கள். வம்பு செய்வது காதலல்ல, பெண்களிடம் வம்பு செய்பவர்களுக்குச் செருப்படிதான் சரியான வைத்தியமாகும்.

நகரங்களில் யுவதிகளைத் துன்புறுத்தும் இளைஞர்களைப் பற்றி விரிவாகக் கூறுவது எனது நோக்கமல்ல. இளம் பெண்கள் ஊர் சுற்றிகளாவதைப் பற்றிக் கூறுவதே எனது குறிக்கோளாகும். நமது யுவதிகளும் தனியாக ஊர் சுற்றலாம். ஆனால் அவர்கள் தமது பலவீனத்தால் அப்படிச் செய்வது கடினமான காரியமாகும். சாதாரணமாக 'மூன்று' எண் கெடுதலானதாகக் கருதப்படுகிறது. எனினும் இளம் பெண்கள் மூன்று பேராக ஒன்று சேர்ந்து ஊர் சுற்றுவதை நான் மங்கலகரமாகக் கருதுகிறேன். இருவராக இருந்தாலும் பரவாயில்லை. ஆனால் மூவராக இருந்தால் இன்னும் நன்றாக இருக்கும். நாலு பேராகவும், இன்னும் அதிகப் பேராகவும் கூட ஊர் சுற்றலாம். ஆனால் கூட்டமாகச் சுற்றுவதென்பது ஒன்றிரண்டு மாதங்களுக்கு மேல் நீடிக்க முடியாது. ஊர் சுற்றப் புறப்படுவதற்கு முன்பு சக ஊர் சுற்றியை நன்றாக ஆராய்ந்து தேர்ந்தெடுக்க வேண்டும். இல்லாவிட்டால் சில நாட்களிலேயே ஊர் சுற்றும் கனவு தகர்ந்து போய்விடும். "கூட்டமாகப் பயணம் செய்தாலும் சரி, அல்லது தனியாகவும் பரவாயில்லை" என்று ஆண் வேண்டுமானால் சொல்லலாம். இன்றைய உலகின் பாதிப் பகுதியில் ஆண்களின் ஆதிக்கம் கொடி கட்டிப் பறக்கிறது. அவர்கள் தமது வசதிக்கேற்ப சட்ட திட்டங்களை அமைத்துக் கொண்டனர். ஆனால் பெண்களின்

பயணப் பாதையில் மட்டும் கணக்கற்ற தடைக் கற்களைப் பரப்பி வைத்தனர். பெண்கள் மூன்று மூன்று பேராகப் புறப்பட வேண்டும். அவர்கள் உடல் நலமுள்ளவர்களாக இருக்க வேண்டும். துணிவுள்ளவர் களாக இருக்கவேண்டும். அவர்கள் ரிவால்வரோ அல்லது கூர்மை யான ஆயுதமோ தம்முடன் வைத்திருக்க வேண்டும். நான் அந்தத் திபேத்திய ஊர் சுற்றிப் பெண்கள் வைத்திருந்த தடிகளின் நுனியில் கூர்மையான ஈட்டி செருகி இருந்ததைப் பார்த்தேன். இவை போன்ற முன் தயாரிப்புகளைச் செய்து கொண்டு, யுவதிகள் இந்தியா பூராவும் தடங்கலின்றிச் சுற்ற முடியும். இளைஞர்கள் செய்யக்கூடிய காரியங் களை யுவதிகளும் செய்ய இயலும் என்பதை அவர்கள் எப்பொழுதும் நினைவிலிருத்திக் கொள்ளவேண்டும். எவரும் தம் சுய மரியாதை யைத் தாமேதான் காப்பாற்றிக் கொள்ள முடியும்.

ஊர் சுற்றிகளுக்குத் தமது பயணத்தில் எவை உதவிகரமாக இருக்குமென்பதை ஏற்கெனவே கூறினோம். ஆண்களைப் போலவே பெண்களுக்கும் பாட்டும், நாட்டியமும், வாத்தியங்களும், ஓவியக் கலையும் உதவிகரமாக இருக்கலாம். ஊர் சுற்றிப் பெண் இவற்றின் துணை கொண்டு இந்தியா பூராவிலும் மட்டுமல்லாமல், உலகத்தின் நாற்புறத்திலும், சுலபமாகச் சுற்றித் திரிய முடியும். விமானங்களிலும் கப்பல்களிலும், ரெயில்களிலும் வேகமாகப் பயணம் செய்துகொண்டு, பெரிய பெரிய ஓட்டல்களில் தங்கிக்கொண்டு, கார் சவாரி செய்து கொண்டிருப்பது ஊர் சுற்றுதலாகாது. உடலுக்கும், மூளைக்கும் நன்றாக வேலை தர வாய்ப்பு அளிக்கக்கூடியதே உண்மையான ஊர் சுற்றுதலாகும். விபத்துக்களை எதிர்நோக்குவதே உண்மையான ஊர் சுற்றுதலாகும். எவருமே நுழைந்தறியாத புதிய இடங்களில் பிரவேசிப்பதுதான் உண்மையான ஊர் சுற்றிக்கு அழகாகும்.

ஊர் சுற்றுவதைப் பற்றி இளைஞர்களுக்குக் கூறிய விஷயங்க ளெல்லாம் யுவதிகளுக்கும் பொருந்தும். யுவதிகள் எடுத்த எடுப்பிலேயே தொலைப் பிரதேசங்களை நோக்கிப் புறப்பட்டுவிடக் கூடாது. பறவைக் குஞ்சுகளுக்குப் புதியதாக இறக்கைகள் முளைக்கும் போது அவை முதலில் வானத்தில் மிக உயரத்தில் பறந்து செல்லாது; சொற்ப தூரங்களுக்குத்தான் பறந்து செல்லும். இதே போல் யுவதி களும் மூன்று, நான்கு பேராகச் சேர்ந்து, ஒரு வாரம், இரண்டு வாரப் பயணங்களுக்குப் புறப்பட வேண்டும். அவர்கள் அழகு கொஞ்சும் மலைப் பிரதேசங்களுக்குப் போக வேண்டும். புடவைக்குப் பதிலாகக் காக்கிச் சட்டையும், 'பேண்ட்'டும் அணிய வேண்டும். முதுகில் நீண்ட பையைத் தொங்கப்போட்டுக் கொள்ளவேண்டும், வெயிலிலிருந்து பாதுகாப்புக்காகத் தலையில் தொப்பியும், கையில் தடியும் இருக்க

வேண்டும். சில கிலோக்கள் நிறையுள்ள சாமான்களை முதுகில் சுமக்க அவர்கள் பழக்கப்படுத்திக் கொண்டிருக்க வேண்டும். நம் நாடு ஆங்கிலேயருக்கு அடிமைப்பட்டிருந்தபோது, சுதந்திரக் குடிமகன் ஒவ்வொருவனுக்கும், தன்னிடம் ஆயுதம் வைத்துக்கொள்ளும் உரிமை இருக்க வேண்டுமென்று கோரி வந்தோம். இப்பொழுது அவ்வுரிமை கொடுக்கப்படவேண்டும். ஆனால், நமது புதிய ஆட்சி யாளர்களும் வெள்ளையர்களைப் போலவே, மக்கள் கைகளில் ஆயுதங்கள் இருந்தால், தமக்கு ஆபத்தென்று அஞ்சுகிறார்கள். அதனால்தான் வெள்ளையர் காலத்து ஆயுதத் தடைச் சட்டம் அப்படியே இருக்கிறது. அதை ஒழிப்பதைப் பற்றி யாருமே சிந்திக்க வில்லை. ஊர் சுற்றி யுவதிகள் தம்முடன் ரிவால்வர் வைத்துக்கொள்ள வேண்டுமென்று நான் கூறும்போது 'லைசென்ஸ்' பிரச்சினையும் எழும். ஊர் சுற்றும்போது பெண்கள் ரிவால்வர் வைத்திருப்பதற்கு அனுமதி வேண்டுமென்று அவர்கள் குரலெழுப்ப வேண்டும். பொது மக்களும் அவர்களது கோரிக்கையை நிச்சயம் ஆதரிப்பார்கள். ஆளுவோரும் ஒரோர் சமயம் வெட்கமடையலாம் அல்லவா! இல்லாவிட்டாலும் இளம் பெண்கள் தடியில் செருகிய ஈட்டியும், பிச்சுவாவும் சுலபமாக வைத்துக்கொள்ளலாமே! ஊர் சுற்றுதல் என்பது பூவைப் போன்ற மிருதுவான பெண்களுக்காக அல்லவென்பதை நினைவில் கொள்ள வேண்டும். ஊர்சுற்றி யுவதிகள் ஆரோக்கியத் துடனும், திடகாத்திரத்துடனும் இருக்க வேண்டும். அவர்கள் உடலுழைப்புக்குத் தயாராகியிருக்க வேண்டும். இந்தப் பழக்கம் அவர்களுக்குத் தானாகவே வந்துவிடும்.

ஆண் ஊர்சுற்றிக்கும் பெண்ணின் கவர்ச்சி அவனுடைய பாதையில் தடைக்கல்லாகத்தான் இருக்கும். பெண்ணுக்கு இப்படிப்பட்ட கவர்ச்சியினால் ஏற்படும் தடை மேலும் அதிகமாக இருக்கும். ஆண் பெண்ணிடம் தொடர்பு கொண்டு ஏதாவது விபரீதம் நடந்து விட்டால், வெட்கங்கெட்ட முறையில் தன் பொறுப்பைத் தட்டிக் கழித்துவிட்டு ஓடிப் போய் விடலாம். இயற்கைகூடப் பாரபட்சமான முறையில் அவனுக்கு ஆதரவாகவே இருக்கிறது. பெண், ஆணைப் போல் தன் பொறுப்பைத் தட்டிக் கழித்து விட்டு ஓடிப் போய் விட முடியாது. அதனால் தான் அவள் பெரும் விபத்தில் சிக்கிக்கொண்டு விடுகிறாள். ஊர் சுற்றும் எண்ணம் இருக்கும் வரை யுவதி இந்த ஆபத்தை உணர்ந்து எச்சரிக்கையாக இருக்க வேண்டும். இல்லா விட்டால் அவளுடைய கனவுகளெல்லாம் மண்ணோடு மண்ணாகிப் போவதல்லாமல், வாழ்நாள் முழுதும் அடிமைத்தனமும், வறுமையும், அவமானகரமான வாழ்க்கையும் வாழ வேண்டி வரும்.

சென்ற அத்தியாயங்களில் சொல்லப்பட்ட விஷயங்களை மீண்டும் இங்குச் சொல்லத் தேவையில்லை. அந்த விஷயங்களை நன்கு கவனித்து, முன் தயாரிப்புகளைச் சிறப்பாகச் செய்து கொண்டால், ஊர் சுற்றுதல் என்ற கடினமான பாதையில் வெற்றிகரமாக அடியெடுத்து வைக்க முடியும். வாழ்வின் மற்ற துறைகளில் பெண்கள் தமது திறமையைச் சிறப்பாக வெளிப்படுத்தியதைப் போலவே, இந்தத் துறையிலும் அவர்கள் நாட்டின் எதிர்காலத்தை ஒளி பெறச் செய்வார்கள். ஆண்கள் பெண்களை எடை போடப் பழைய தராசைத் தயார் செய்யவில்லை. அவர்களைக் கட்டிப்போட அதைப் பயன் படுத்திக் கொண்டனர். அந்தத் தராசின் எடைக் கற்கள் ஆண்களுக்கு வேறாகவும், பெண்களுக்கு வேறாகவும் இருந்தன. இன்று இந்த அநீதி கடைசிக் கட்டத்தில் இருக்கிறது. இதை ஒவ்வொரு இளம் பெண்ணும் தனது பாட்டி, முப்பாட்டி ஆகியோரின் கருத்துக்களோடு ஒப்பிட்டு அறிந்துகொள்ளலாம். நல்லெண்ணம் படைத்த பாட்டி, முப்பாட்டி களின் அனுகூலங்களைக் கேட்டாலும், பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து இருபதாம் நூற்றாண்டின் மத்தியில் வரை மாபெரும் மாற்றங்கள் ஏற்பட்டுள்ளதையும், ஏற்பட்டு வருவதையும் உணர முடியும். ஒரு காலத்தில் கடல் கடந்து அயல் நாட்டுக்குச் சென்றாலே, மனிதன் மதப் பிரஷ்டனாகிக் கொண்டிருந்தான். முஸ்லிம் கைப்பட்ட தண்ணீரைக் குடித்தாலே, இந்து முஸ்லிமாகிக் கொண்டிருந்தான். ஆனால், இன்று என்ன நிலை? வெளிநாட்டுக்குப் போவது சமுதாயத்தில் மிகப் பெரும் கவுரமாகக் கருதப்படுகிறது. எல்லா மதத்தினரும் ஒன்றாக அமர்ந்து சாப்பிடுகின்றனர். ஒரு சில ஆண்டு களுக்கு முன் வரையிலும் கூட வடநாட்டு இரயில் நிலையங்களில் இந்து குடிநீர், முஸ்லிம் குடிநீர் என்று வேறு வேறாக இருந்தது. இன்று வெறும் குடிநீராக மாறிவிட்டது. புதிய தலைமுறையைச் சேர்ந்த யுவதிகள் பல விஷயங்களிலும் தமது பாட்டிகளையும், முப்பாட்டிகளையும் மிஞ்சிப் போய்விட்டனர்; கல்வியறிவு பெற்றதும் அவர்கள் முக்காட்டை நிரந்தரமாகத் தூர வீசியெறிந்து விட்டனர். தகப்பனார் தாத்தாக்களின் கைப்பொம்மைகளாக இருக்க மறுத்து விட்டுத் தமது எதிர்கால வாழ்க்கைத் துணைகளைத் தாமே தேர்ந்தெடுத்துக் கொண்டிருக்கின்றனர்.

ஊர் சுற்றுவதிலும் யுவதிகள் பின்னடையக் கூடாதென்ற திட சங்கற்பம் இருக்க வேண்டும். பிறகு எல்லா வழிகளும் தாமாகவே புலப்படும்.

## 16. நினைவுகள்

ஊர் சுற்றி பற்றற்றவனாக இருப்பான்; ஆனால், அதே சமயத்தில் அவன் உள்ளத்தில் மானிட சமுதாயத்தின்பால் அபாரமான அன்பு நிறைந்திருக்கும். இந்த அபாரமான அன்பு அவனுடைய உள்ளத்தில் கணக்கற்ற நினைவுகளைச் சேர்த்துவிடும். அவன் எவரையும் பகைத்துக் கொள்வதற்காக எங்கேயும் புறப்படுவதில்லை. அவனைச் சாதாரணமாக யாரும் விரோதியாகக் கருதுவது கூட இல்லை. அதனால் அவன் இனிய நினைவுகளையே சேர்த்துக்கொள்கிறான். இளமையின் உத்வேகத் தினாலும், அனுபவமில்லாததாலும் அவன் யாருக்காவது கெடுதலும் செய்யக்கூடும். ஆகவே, இதைப் பற்றி அவனை எச்சரித்தாக வேண்டும். ஒரு ஊர்சுற்றி நிரந்தர நண்பர்களையோ, உறவினர்களையோ ஏற்படுத்திக்கொள்ள முடியாது. ஆனால், தற்காலிகமாக அமையும். நண்பர்களிலும், உறவினர்களிலும் ஒரு சிலர் அவன் நினைவுகளில் நீங்காத இடத்தைப் பெற்று விடுகின்றனர். நினைவுகளில் கலந்திருந் தாலும் அவர்கள் சொந்த நண்பர்கள் உறவினர்களைப் போலவே, ஊர் சுற்றிக்கு மகிழ்ச்சியையும், வேதனையையும் அளிக்கின்றனர். தனது சுற்றுப் பயணத்தின் போது அவன் யாருக்காவது தீங்கிழைத் தால், அந்த நினைவே அவனைத் துன்புறுத்திக் கொண்டிருக்கும். தான் இழைத்த தீங்கையும், அதற்குப் பலியானவர்களையும் மறக்க முயற்சி செய்தாலும் அவனால் இயலாது. தான் செய்த கெடுதலும், அதற்குப் பலியாகிப் போனவர்களும் நினைவுக்கு வரும் போதெல்லாம், அவன் இதயத்தை வேதனை பிழிந்தெடுக்கும். ஆகவே, எப்பொழுதுமே எச்சரிக்கையாக இருக்க வேண்டும். ஊர் சுற்றி எப்பொழுதுமே வேதனை தரும் நினைவை உண்டாக்கிக் கொள்ளக் கூடாது.

அவன் யாருக்காவது நன்மை புரிந்திருந்தால், நல்லபடியாக நடந்துகொண்டிருந்தால், அதன் அவன் வாயால் சொல்ல விரும்பா விட்டாலும், அவனுக்கு மன நிறைவு அவசியம் உண்டாகும். அவனுக்கு உதவி செய்தவர்களையும், நிம்மதி அளித்தவர்களையும், தமது நட்பினால் மகிழ்வித்தவர்களையும் அவன் எப்பொழுதுமே மறக்க

மாட்டான். நன்றி மறவாத குணம் அவனுள் நிரம்பியிருக்கிறது. அவன் தனது நன்றியைச் சொல்லாலும், எழுத்தாலும் வெளிப்படுத்துகிறான். தன் உள்ளத்திலும் நினைவாகத் தேக்கி வைத்துக் கொள்கிறான்.

பயணத்தின்போது ஊர் சுற்றியின் முன்னே நாள்தோறும் புதிய புதிய காட்சிகள் விரிந்துகொண்டே இருக்கும். இவை தவிர, வேலை யேதுமின்றிச் சும்மா இருக்கும்போது, கடந்த காலக் காட்சிகளெல்லாம் நினைவலைகளாக எழும்பிக்கொண்டே இருக்கும். இந்நினைவுகள் ஊர் சுற்றிக்கு எவ்வளவோ நிம்மதியளிக்கும், வாழ்க்கையில் அவன் பெற முடியாதவைகளையெல்லாம். இந்நினைவுகள் அவனுக்கு அளிக்கும். ஊர் சுற்றி ஒரே இடத்தில் தங்கி இருக்காவிட்டாலும், எப்பொழுதும் தனக்கு அறிமுகமான நண்பர்களுடனே இருக்கிறான் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். ஊர் சுற்றி லண்டன் அல்லது மாஸ்கோ நகரிலுள்ள ஏதோவொரு பெரிய ஓட்டலில் தங்கியிருக்கிறான் என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்பொழுதும் அவனுடைய நினைவுகள் திபேத்திலுள்ள ஒரு குக்கிராமத்துக்கு அவனை அழைத்துப் போகும். அன்று ஒரு உயரமான மலைப் பகுதியைக் கடந்து ஒரு ஊர் சுற்றி, மாலைக் கதிரவன் மறைந்த பிறகு அந்தக் கிராமத்தை அடைந்தான். அங்குள்ள பணக்காரர்கள் அவனுக்குத் தங்குவதற்கு இடமளிக்கவில்லை. அவர்கள் ஏதேதோ சாக்குப் போக்குகள் கூறி அவனுக்கு இடம் தர மறுத்துவிட்டனர். கடைசியில் அவன் ஒரு பரம ஏழையின் வீட்டுக்குப் போனான். அதை வீடென்றும் சொல்ல இயலாது. பழைய இடிபாட்டொன்றைச் சரி செய்து, அவ்வேளை தனது பெண்டு பிள்ளைகளுக்காக வீடாக மாற்றியிருந்தான். அவன் உளப்பூர்வமாக ஊர் சுற்றியை வரவேற்றான். ஊர் சுற்றி வழியில் அனுபவித்த துன்பங்களையெல்லாம் மறந்து விட்டான். அந்தக் கிராமவாசிகள் காட்டிய அலட்சியத்தை மறந்து விட்டான். அவன் அந்த ஏழைக் குடும்பத்தின் வாழ்க்கையையும், கஷ்டங்களையும் நேராகக் கண்டான். அதே சமயத்தில் அந்தக் கிராமத்திலேயே காண முடியாத பரந்த உள்ளத்தையும் பார்த்தான். ஊர்சுற்றி தன்னிடமிருந்த கொடுக்கத் தகுந்த அத்தனையையும் அக்குடும்பத்துக்குக் கொடுத்துவிட்டு விடை பெற்றுக் கொண்டான். இருப்பினும் அந்தக் குடும்பத்திற்கு முழு அளவில் தனது நன்றியைத் தெரிவித்ததாக அவன் கருதவில்லை.

ஊர் சுற்றியின் வாழ்க்கையில் இப்படிப்பட்ட எத்தனையோ நினைவுகள் நிறைந்திருக்கும். கசப்பான நினைவுகளும் இருந்தால், அவற்றில் தான் செய்த அநீதிகள் அவனால் பொறுக்க முடியாததாகி விடும். செய்ந்நன்றி மறக்காமலிருப்பது ஊர் சுற்றியின் ஒரு குணமாகும்.

ஒவ்வொரு நாளும் எத்தனையோ பேர் அவனுக்கு உதவி புரிய முன்வருகின்றனர். ஆனால் எவருக்கும் மறு உதவி செய்ய முடியாதென்பதை அவன் உணருகிறான். ஒரு தடவை அறிமுகமானவனை மீண்டும் அவனால் சந்திக்க முடியாது. சென்ற இடத்துக்கு மீண்டும் அவன் போவதுமில்லை. ஒருவேளை சென்றாலும் எவ்வளவோ காலத்துக்குப் பிறகு போவான். அப்பொழுது அவனுடைய இனிமையாகப் பேசிப் பழகிய எத்தனையோ பேர் இருக்கமாட்டார்கள். நீண்ட காலத்துக்குப் பிறகு தனது நன்றியைத் தெரிவிக்கக்கூட அவனுக்கு வாய்ப்பிருப்பதில்லை. இதனால் ஊர் சுற்றியின் உள்ளத்தில் இனிய வேதனை எழும்புகிறது. மறைந்துவிட்டவரின் நினைவில் இனிமை அதிகமிருக்கும். அவருடைய பிரிவில் வேதனையும் நிறைந்திருக்கும்.

ஊர் சுற்றியின் இதயத்தில் வாழ்க்கை நினைவுகள் சேர்ந்து கொண்டே இருக்கும். அந்நினைவுகளையெல்லாம் நாட்குறிப்பில் எழுத்து வடிவமாக்கினால் நல்லது. எதிர்காலத்தில் எப்போதாவது பயண அனுபவங்கள் எழுதும்போது, இக்குறிப்புகள் பயனுள்ளவையாக இருக்கும். அவை குறிப்பிட்ட ஊர் சுற்றிக்குப் பயன்படாவிட்டாலும் மற்றவர்களுக்காவது பயன்படலாமல்லவா! ஊர் சுற்றிக்கு நாட்குறிப்பு மிகவும் பயனுள்ள பொருளாகும். ஊர் சுற்றி இந்தப் பாதையில் அடியெடுத்து வைத்த நாளிலிருந்தே, நாட்குறிப்பு எழுத ஆரம்பிப்பது நல்லது. நாட்குறிப்பு எழுதாதவர்கள் பின்னால் வருந்துவார்கள். ஊர் சுற்றிக்குச்சொந்த வீடில்லாதபோது, வருடக்கணக்காக அவன் எழுதிய நாட்குறிப்புகளை எங்கே பாதுகாப்பாக வைத்திருப்பது? இது ஒரு பெரிய பிரச்சினையல்ல; அவன் தனது பயணத்தில் சரித்திர முக்கியத்துவமுள்ள நூல்களைப் பெறலாம். ஓவியங்களையும் சிற்பங்களையும் சேகரிக்கலாம். இவற்றையெல்லாம் தன்னிடம் வைத்துக் கொள்ள அவனால் இயலாவிட்டாலும், சேகரிக்காமல் இருக்க முடியுமா? அவன் அவைகளையெல்லாம் சேகரித்துத் தகுந்த இடத்துக்கு அனுப்பலாம், வீடு - வாசலில்லாத நான், இப்படிப்பட்ட பொருட்களை ஏன் சேகரிக்க வேண்டுமென்று எண்ணியிருந்தால், பின்னால் மிகவும் வருந்தியிருப்பேன். நான் திபேத்தில் புராதன அழகிய ஓவியங்களை விலை கொடுத்து வாங்கினேன். வரலாற்று முக்கியத்துவமும், கலாச்சார முக்கியத்துவமும் வாய்ந்த கலைப் பொருட்களையெல்லாம் சேகரிக்கும்போது, நான் வீடு வாசலில்லாதவனென்ற நினைப்பே எனக்கு வரவில்லை. முதல் பயணத்தின் போது இருபத்திரண்டு கோவேறு கழுதைகள் சுமக்கும் அளவுக்குப் புத்தகங்களும், மற்ற பொருட்களும் கொண்டு வந்தேன். அந்தப் புத்தகங்களின் முக்கியத்துவத்தையும், அவற்றைப் பாதுகாக்கக்கூடிய இடம் இந்தியாவில் இருக்கிறதென்பதையும் நான் அறிவேன். கொஞ்ச காலத்துக்குப் பிறகு

அவற்றை நான் பாட்னா மியூஸியத்துக்குத் தந்துவிட்டேன். அதற்கு அடுத்த பயணங்களிலும் எனக்குக் கிடைத்த முக்கியமான பொருட்களையெல்லாம் இந்தியாவுக்குக் கொண்டு வந்தேன். அவைகளில் சிலவற்றைப் பாட்னா மியூஸியத்துக்கும், சிலவற்றைக் காசியிலுள்ள கலா பவனத்துக்கும், இன்னும் சிலவற்றை அலகாபாத் நகராட்சி மியூஸியத்துக்கும் அளித்து விட்டேன். இப்படிப்பட்ட பொருட்களைத் தனி மனிதர்களுக்குத் தர எனக்கு விருப்பமில்லை. ரொம்பவும் வற்புறுத்தியதின் பேரில் நண்பர்களுக்கு ஓரிரு பொருட்களைக் கொண்டு வந்து தந்தேன். ஊர் சுற்றி தன் பிரயாணத்தின் போது எத்தனையோ மனங்கவரும் பொருட்களை அடையலாம். அவை பாதுகாப்பான இடத்தில் இருப்பின் கவலையில்லை. இல்லாவிட்டால் அவைகளைப் பாதுகாப்பான இடத்துக்குச் சேர்ப்பிப்பது ஊர் சுற்றியின் கடமையாகும்.

ஊர் சுற்றி, தான் மிகக் கஷ்டப்பட்டுச் சேகரித்த விலையுயர்ந்த பொருட்களிலிருந்து தன்னுடைய பெயரை மற்றவர்கள் நீக்கி விட்டார்களே என்று கவலைப்படக் கூடாது. ஒரு தடவை இப்படியும் நடந்தது; ஓர் ஊர் சுற்றி விலையுயர்ந்த பல பொருட்களை ஒரு நிறுவனத்துக்கு அளித்துவிட்டான். அந்நிறுவனத்தைச் சேர்ந்தவர்கள் முதலில் அப்பொருட்களுடன் கொடுத்தவனின் பெயரையும் இணைத்து வைத்தார்கள். சில காலம் கடந்த பின் பெயரை அப்புறப்படுத்தி விட்டார்கள். அந்த ஊர்சுற்றியின் நண்பர் ஒருவருக்கு இதனால் பெரும் மனத்துயரம் ஏற்பட்டது. ஆனால் அந்த ஊர் சுற்றி மட்டும் இதை ஒரு பொருட்டாகக் கருதவில்லை. “அப்பொருட்கள் அவ்வளவு முக்கியத்துவமுள்ளவையாக இல்லாவிட்டால், அவற்றுடன் கொடுத்தவனின் பெயர் இருந்துதான் என்ன பயன்? அவை மிகவும் முக்கியத்துவமுள்ள பொருட்களான இருந்தால், அந்நிறுவனத்தைச் சேர்ந்தவர்களின் செயல் சிரிப்புக்களாகிவிடும். ஏனெனில் இவ்வளவு முக்கியமான பொருட்கள் எப்படி இங்கு வந்து சேர்ந்தன என்பதை அடுத்த தலைமுறையினரிடமிருந்து மறைத்து விடமுடியுமா?” என்றான் ஊர் சுற்றி.

எது எப்படி இருப்பினும், தான் ஊர்சுற்றியாக இருந்தாலும், பொது நிறுவனங்களுக்காக முக்கியத்துவமுள்ள பொருட்களைச் சேகரிக்கத்தான் வேண்டும். தன்னுடைய நாட்குறிப்புகளையெல்லாம் ஊர்சுற்றி இப்படிப்பட்ட நிறுவனங்களில் பத்திரமாக வைக்கலாம். இவ்விஷயத்தில் தனி மனிதர்களின்மீது நம்பிக்கை வைக்கக்கூடாது. ஒரு மனிதன் எவ்வளவு காலம் உயிரோடிருப்பான்? அவன் இறந்த பின் அவனுடைய வழித்தோன்றல்கள் அப்பொருட்களின் முக்கியத்துவத்தை

உணர்வார்களா? எத்தனையோ விலை மதிப்பற்ற பொருட்களை இரண்டாம் தலைமுறையினர் அழித்துவிட்டிருக்கின்றனர்.

அன்றொரு நாள் நான் புறப்பட வேண்டிய ரயில் பத்து மணி நேரம் தாமதமாக வரவிருந்ததால் கட்னி நகரிலுள்ள டாக்டர் ஹீராலால் அவர்களின் வீட்டிற்குப் போனேன். இந்திய வரலாற்றிலும், பழம் பொருட்களிலும் மிகப் பெரிய ஆராய்ச்சியாளராக விளங்கிய டாக்டர் அவர்கள், தம் வாழ்நாள் பூராவும் எத்தனையோ சரித்திர முக்கியத்துவம் படைத்த பொருட்களைச் சேகரித்துக்கொண்டே யிருந்தார். அவருடைய சொந்த நூல் நிலையத்தில் எத்தனையோ கிடைத்தற்கரிய நூல்கள் இருக்கின்றன. டாக்டர் ஹீராலால் அவர் களின் சகோதரன் மகன், மறைந்த தன் சிற்றப்பா சேகரித்து வைத்த பொருட்களின் முக்கியத்துவத்தை நன்கு உணர்ந்தவர். அதனால் அவைகளைப் பாதுகாப்பானதொரு இடத்தில் வைக்க விரும்பினார். அவர் கட்னியிலேயே உள்ள ஒரு நிறுவனத்துக்கு அவற்றைக் கொடுத்துவிட எண்ணினார்... நான் அவற்றை ஸாகர் பல்கலைக் கழகத்துக்குத் தந்துவிடுவங்களென்று யோசனை கூறினேன். அங்கே இப்பொருட்களை நன்கு பயன்படுத்திக் கொள்ளலாம். பாதுகாப்பா கவும் வைக்கலாம். அவர் என்னுடைய யோசனையை ஏற்றுக் கொண்டார். என்னுடைய மற்றொரு நண்பர் டாக்டர் ஜாய்ஸவால் மிகவும் முன்னெச்சரிக்கை உள்ளவர். அவர் தன்னுடைய சட்டப் புத்தகங்களைத் தவிர்த்து மற்றெல்லா நூல்களையும் காசி, இந்து பல்கலைக்கழகத்துக்கு முன்னதாகவே எழுதி வைத்துவிட்டார்.

ஊர் சுற்றிக்குச் சொந்த வீடு இல்லாததால், தன்னிடம் நிறைய புத்தகங்களும், மற்றப் பொருட்களும் சேர்ந்துவிடுமென்று கவலை கொள்ளத் தேவையில்லை. தனக்குக் கிடைத்தவற்றைச் சிறந்த நிறுவனங்களுக்குத் தந்துகொண்டே இருக்க வேண்டும். அந்தச் சிறந்த நிறுவனங்கள் ஊர் சுற்றியின் சொந்தப் பிரதேசத்திலேயே இருக்க வேண்டுமென்பதில்லை. அவன் தான் சுற்றிக் கொண்டிருக்கும் பிரதேசங்களிலுள்ள நிறுவனங்களுக்கே அவற்றைக் கொடுக்கலாம்.

“ஊர் சுற்றிப் புராணம்” முடிவடைந்து கொண்டிருக்கிறது. இதை ஒரு சாஸ்திரம் என்று சொன்னதனாலேயே, இது முழுமையான தென்று கருதிவிட வேண்டாம். எந்த ஒரு சாஸ்திரமும் அதைப் படைத்தவனின் கைகளிலேயே முழுமையடைந்து விடுவதில்லை. அந்த சாஸ்திரத்தின் மீது வாத விவாதங்களும், சர்ச்சைகளும், கண்டனங்களும் பொழியப்படும்போதுதான், அது முழுமை பெறத் தொடங்குகிறது. “ஊர் சுற்றிப் புராணத்தைக் காட்டிலும் ஊர் சுற்றும் சம்பிரதாயம் மிகப் பழமையானதாகும். மனிதன் தோன்றிய புராதன

காலத்திலிருந்தே ஊர் சுற்றுவதும் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. ஆனால், 1949-ம் ஆண்டு ஜூன் மாதத்துக்கு முன்னால் “ஊர் சுற்றிப் புராணம்” எழுதப்படவில்லை. இதன் முக்கியத்துவத்தை எவருமே உணரவில்லை. மதப் பிரச்சாரம் செய்யும் ஊர் சுற்றிகளுக்கு வழி காட்டுவதற்காக ஏற்கெனவே பல விஷயங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. எல்லாவற்றுக்கும் பழமையாகப் பௌத்தர்களின் “பிரதிமோட்ச சூத்திரங்கள்” இருக்கின்றன. அச்சூத்திரங்களில் சரித்திர முக்கியத்துவம் எவ்வளவோ இருப்பதால், ஒவ்வொரு ஊர்சுற்றியும் அவற்றைப் படித்தறிய வேண்டும். (அவற்றை நான் “வினய்பிடக்” நாலில் மொழி பெயர்த்துள்ளேன்). அவற்றின் முக்கியத்துவத்தை ஒப்புக்கொள்ளும் அதே நேரத்தில், ஊர்சுற்றி சாஸ்திரம் எழுதிய முதல் முயற்சி என்னுடையதே என்று அடக்கத்துடன் கூறுவேன். இதில் உள்ள குறைகள் நீக்கப்பட வேண்டுமென்று விரும்பும் வாசக அன்பர்கள், அவற்றைக் குறித்து அவசியம் நூலாசிரியருக்கு எழுதக் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். இதைப் பார்த்து, இதைவிடச் சிறந்த நூலை யாராவது ஒரு ஊர் சுற்றி எழுதக்கூடும். அதைப் பார்த்து இந்நூலாசிரி யருக்கு மிகுந்த மகிழ்ச்சி உண்டாகும். அதிக அனுபவமும், திறமையும் உள்ள சிந்தனையாளர்கள் ஊர் சுற்றுதலைப் பற்றி எழுதாமல் இருந்து விடக்கூடாதென்பதே இந்த முதல் முயற்சியின் முக்கிய நோக்கமாகும். அடுத்த தலைமுறையினரில் குற்றங்குறைகளற்ற நூல்களை எழுதக் கூடிய எத்தனையோ பேர் தோன்றலாம். அப்பொழுது இந்தச் சுமை, வலுவான தோள்களில்தான் விழுந்திருக்கிறதென்ற மனநிறைவு என்னைப் போன்றவர்களுக்குக் கிடைக்கும்.

“வாழிய வாழியவே ஊர் சுற்றிச் சம்பிரதாயம்!”

